

தீவிரவாதிகளின் தாக்குதலுக்கு உள்ளான பாராளுமன்றக் கட்டிடத்தின் வயது 74. இந்தியக் கட்டிடக் கலையின் கலைப் பொக்கிஷம். நூறு கோடி இந்தியர்களின் ஜனநாயக மூச்சுக்குப் பாதுகாவலனாக விளங்கும் இந்தக் கம்பீரக் கட்டிடத்துக்கு 1921ல் அடிக்கல் நாட்டப்பட்டது. பிரபல கட்டிடக் கலை நிபுணர்களான ஸர் எட்வின் லூட்யன் மற்றும் ஸர் ஹெர்பர்ட் பேக்கர் ஆகியோரால் வடிவமைக்கப்பட்ட கலைக் கோயில் இது. கட்டி முடிக்க ஆறு வருடங்கள் ஆனதாம். இதே நிபுணர்கள்தான் புது தில்லி நகரையும் நிர்மாணித்தார்கள். அந்தக் காலத்தில் 83 லட்சம் செலவில் கட்டப்பட்ட இந்த கட்டிடம் கவர்னர் ஜெனரலாக இருந்த லார்டு இர்வினால் திறந்து வைக்கப்பட்டது.

பாராளுமன்ற வளாகம் என்பது மூன்று பிரிவுகளைக் கொண்டது. பாராளுமன்றக் கட்டிடம், பாராளுமன்ற இணைப்புக் கட்டிடம் மற்றும் வரவேற்பு அலுவலகம். இணைப்புக் கட்டிடம் 1970ல் தான் கட்டப்பட்டது. பாராளுமன்ற மைய மண்டபம், மக்களவை, மாநிலங்களவை, நூலகம் ஆகியவை பாராளுமன்றக் கட்டிடத்தில் இருக்கின்றன. இந்தக் கட்டிடத்தின் விட்டம் 171 மீட்டர். ஆறு ஏக்கர் பரப்பளவில் ரம்மியமான பசுமைச் சூழலில் அமைந்திருக்கும் இதன் சுற்றளவு 536 மீட்டர். மூன்று தளம் உள்ள இதில், முதல் தளத்தில், கூரையைத் தாங்கி நிற்கும் மெகா சைஸ் தூண்களின் எண்ணிக்கை 144. ஒவ்வொன்றும் 27 அடி உயரம். பாராளுமன்றக் கட்டிடத்துக்கு 12 வாயில்கள். இதில் ஐந்தாம், பதினோராம் கேட்களின் வழியாகத்தான் பிரதமரும், உதவி ஜனாதிபதியும் சென்று வருவார்கள். சலவைக் கற்களால் இழைக்கப்பட்ட இந்தக் கட்டிடத்துக்கு உபயோகப்படுத்தப்பட்டது ஜெய்சால்மர் (ராஜஸ்தான், பகுதியிலிருந்து கொண்டு வரப்பட்ட சிவப்புக் கற்கள்.)

# பாராளுமன்றம்!

# 'பக்...பக்...' தகவல்கள்

கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

சென்ட்ரல் ஹால் என்று சொல்லப்படும் மைய மண்டபத்திலிருந்து செல்லும் விதத்தில் மூன்று பிரிவுகளாகச் சுற்றுக் கட்டிடத்தில் மக்களவை, மாநிலங்களவை, நூலகம் ஆகியவை அமைந்துள்ளன. மைய மண்டபத்தின் கோபுரம் மிகச் சிறப்பான கலைப் பொக்கிஷமாகக் கருதப்படுகிறது. இதன் விட்டம் 98 அடி. ஆங்கிலேயர்கள் நமக்கு அதிகாரத்தை மாற்றியது இந்த மண்டபத்தில்தான். அரசியல் நிர்ணய சபை இங்கேதான் நடந்து, அரசியல் சட்டமும் இங்கேதான் உருவாக்கப்பட்டது. இரு அவை களின் கூட்டுக் கூட்டம் மைய மண்டபத்தில் தான் நடக்கும். நவீன ஆடியோ, வீடியோ வசதிகள், பேசும் போதே மொழி மாற்றம் செய்யும் வசதி ஆகியவை இங்கு உண்டு. இதன் பக்கச் சுவர்களை இருபதுக்கும் மேற் பட்ட தலைவர்களின் படங்கள் அலங்கரிக் கின்றன. உறுப்பினர்கள் பெரும்பாலும் உட்கார்ந்து அரட்டை அடித்து அடுத்தவர் தலைகளை உருட்டுவது இங்கேதான்!

கட்டிடங்கள் பழைமையின் சிறப்பை பிரதிபலித்தாலும், தானியங்கி வாக்குப் பதிவு இயந்திரம் உட்பட பல நவீன வசதிகள் மக்களவையிலும், மாநிலங்களவையிலும் உண்டு. இந்த அவைகளை ஒட்டி, பார்வை யாளர் மாடம், அமைச்சர்களின் அலுவலகங் கள், கமிட்டி அறைகள், பாராளுமன்ற அலுவலகம் ஆகியவை உண்டு.

தலைநகரில் சுற்றுலாப் பயணிகள் பார்க்க விரும்பும் இடங்களில் பாராளு மன்றக் கட்டிடமும் ஒன்று. வெளிப்புறம் இதன் பாதுகாப்பை மத்திய ரிசர்வ் பாது காப்பு படை கவனித்துக் கொள்கிறது. உள்ளே வருபவர்களைப் படம் பிடிக்க எல்லா 'கேட்'களிலும் வீடியோ கேமராக்கள் உள்ளன. செப்டம்பர் 11 அமெரிக்கத் தாக்கு தலுக்குப் பிறகு பாராளுமன்றத்தின்மேல் விமானம் பறக்க தடை போடப்பட் டிருக்கிறது.

பாராளுமன்றதுக்கும் தனி பாதுகாப்பு படை உண்டு. இந்த படையைச் சேர்ந்த பாதுகாப்பு வீரர் யாதவ் என்பவரின் உஷார் நடவடிக்கையால்தான் தீவிரவாதிகள் உள்ளே நுழைந்தவுடன் 12 வாயில்களும் மூடப்பட்டு அவர்கள் மத்திய போலீஸால் சுற்றி வளைக்கப்பட்டனர். உயிர்த்தியாகம் செய்துவிட்ட இந்த வீரர் வரலாற்றில் இடம் பெற வேண்டிய கடமை வீரர்.

"எங்களைப் பொறுத்தமட்டில் நூறு சதவீதம் விழிப்புடன் இருக்க வேண்டி யிருக்கிறது. ஆனால் தீவிரவாதிகள் 99 சதம் தோற்றாலும், ஒரு சதம் வெற்றி அடையும் போது அவர்கள் நோக்கம் நிறைவேறிவிடு கிறது. அதிலும் குறிப்பாக தற்கொலைப் படைகள்தான் எங்களுக்குப் பெரிய சவாலைக் கொடுக்கின்றன" என்கிறார் உளவுத்துறை அதிகாரி ஒருவர். ஜனநாயகக் கோயிலுக்கு எதிர்காலத்தில் எந்த ஆபத்தும் வராமல் பாதுகாக்கும் பொறுப்பு ஒவ்வொரு இந்தியனுக்கும் இருக்கிறது. எதிர்க்கட்சித் தலைவர்கள் இந்தப் பொறுப்பை உணராமல் பாதுகாப்பு ஏற்பாடுகளில் குறை காண்ப தோடு நிறுத்திக் கொள்வது அரசியல் அநா கரிகம் மட்டும் அல்ல; நாட்டுக்கே அபாய மும் கூட. பொடோ சட்டத்தைக் கண்மூடித் தனமாக எதிர்ப்பது எவ்வளவு அபாயகர மானது என்பது கடந்த டிசம்பர் 13 அன்று நிரூபணமாகியிருக்கிறது. அதன் பிறகும் எதிர்க்கட்சியினரின் மூர்க்கம் தொடர்வது பயங்கரவாதிகளுக்குத்தான் சாதகமாக முடியும்!

- ப்ரியன்

## நீதி வெல்லும்!



நீதிமான்கள் பூமியைச் சுதந்தரித்துக் கொண்டு என் றைக்கும் அதிலே வாசமாயிருப் பார்கள்.

துன்மார்க்கன் நீதிமான்மேல் கண்வைத்து, அவனைக் கொல்ல வகை தேடுகிறான்.

கர்த்தரோ அவனை இவன் கையில் விடுவதில்லை; அவன் நியாயம் விசாரிக்கப்படுகையில், அவனை ஆக்கினைக்குள்ளாகத் தீர்ப்பது மில்லை.

நீ கர்த்தருக்குக் காத்திருந்து அவருடைய வழியைக் கைகொள்; அப்பொழுது நீ பூமியைச் சுதந்தரித்துக் கொள்வதற்கு அவர் உன்னை உயர்த்துவார்; துன்மார்க்கர் அறுப்புண்டு போவதை நீ காண்பாய்.

நீதிமான்களுடைய இரட்சிப்பு கர்த்தரால் வரும்; இக்கட்டுக் காலத்தில் அவரே அவர்கள் அடைக்கலம்.

கர்த்தர் அவர்களுக்கு உதவி செய்து, அவர் களை விடுவிப்பார்; அவர்கள் அவரை நம்பியிருக்கிறபடியால் அவர்களைத் துன் மார்க்கனுடைய கைக்குத் தப்புவித்து இரட்சிப்பார்.

- பைபிள் (தாவீதின் சங்கீதம் : 37 சில பகுதிகள்)

# சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

அரசியல் முறைகளில் சிறந்த குடியரசு முறையை நாம் பெற்றிருக்கிறோம். குடியரசு முறையின் கீழ் பொருளாதார முறையை நன்கு வகுத்துக்கொண்டு சுகம் பெறலாம். ஆனால் தருமத்தில் மகிழ்ச்சியும் அதருமத்தில் வெறுப்பும் மக்கள் உள்ளத்தில் இருக்க வேண்டும். இல்லாவிடில் எந்த அரசியல் முறையும் எந்தப் பொருளாதார முறையும் சுகம் தராது.

சுதந்திரம் பெற்றதன் முடிவு அனைவரும் தத்தம் சுயநலன்களைப் பெருக்கிக் கொள்ளப் பார்ப்பதல்ல. குடியரசில் உரிமைகள் பல உண்டு. ஆனால் அவையனைத்தும் கடமைகளின் நிழல்களேயன்றி வேறல்ல.



அனைவரும் தத்தம் கடமைகளை சரிவர நிறைவேற்றி வந்தால்தான் சமூகம் நலன் பெறும். கடமைகளைச் செய்வதில் மனம் செலுத்தாமல் உரிமைகளை எண்ணி மனம் வாடுவது, மரத்தை வெட்டித் தள்ளிவிட்டு நிழலை விரும்புவது போலாகும்.



குடியரசும் சுதந்தரமும் கடமைகளை நிறுவியிருக்கின்றன. அறிவு படைத்த மக்கள் அவற்றைக் கவனிக்காமல் விட்டுவிட்டுப் புதிய லாபங்களில் யோசனையைச் செலுத்திக் கொண்டே போனால் பெரும் விபத்தில் விழ நேரிடும்.

தருமத்துக்குப் பயந்து நடக்க வேண்டும். அப்படி நடந்தால் சுதந்திர வாழ்க்கை நிற்கும். இல்லையேல் கட்டாய அரசாங்க விதிகள் வரவரப் பெருகிக் கொண்டே போகும். முடிவில் சுதந்திர வாழ்க்கையை இழந்து அடிமை அடக்குமுறை வாழ்க்கையில் மறுபடியும் அகப்பட்டுக் கொள்வோம்.

அந்நிய ஆட்சி ஒன்றே அடிமை வாழ்க்கை என்று எண்ண வேண்டாம். அந்நிய ஆட்சியே இல்லாமல் நரகத்துக்குச் சமமான சுதந்தரமற்ற அரக்க சுய ஆட்சியை நாமே உண்டாக்கிக் கொள்ளலாம். ஆத்தும சுதந்தரத்துடன் ஒவ்வொருவரும் கடமைகளை மகிழ்ச்சியுடன் நிறைவேற்றிக் கொண்டு வாழ்க்கையை நடத்துவது ஒரு வழி. வாழ்க்கையனைத்தும் அரசியல் பார்வைக்கும் கட்டாய விதிகளுக்கும் உட்பட்டு மக்கள் பயந்து பயந்து நாட்கள் கழிப்பது மற்றொரு வழி. இரண்டில் ஒன்றன்றி வேறு வழியில்லை. முதலாவதான முறை தவறினால் இரண்டாவது அவசியம் வந்தே தீரும். இதுவே சீன தேசத்தின் பாடம். சீனாவில் உண்டாகியிருக்கும் புது ஆட்சியை இந்திய சர்க்கார் ஒப்புக்கொண்டதும் இந்த நியதியை நன்றாக எடுத்துக்காட்டுகிறது.

கடமைகளைத் தருமத்துக்குப் பயந்து ஆத்தும சுதந்திரத்துடன் மக்கள் நிறைவேற்றுவது மேலா, அல்லது வாழ்க்கையை ஒரு பலாத்கார அரசாங்க அமைப்புக்கு ஆட்படுத்திக் கொள்ளுவது நலமா? குடியரசும் ஆத்தும சுதந்திரமும் இரண்டும் வேண்டின் தருமத்தைக் காத்து நடக்க வேண்டும்.

தருமம் எது, அதருமம் எது? இந்தக் கேள்விக்கு விடை வள்ளுவனாருடைய திருக்குறள் ஒன்றைப் படித்தால் போதும். எல்லா சாஸ்திரமும் ஒன்றே. தமிழருக்கென்று திருவள்ளுவர் எழுதிய குறள் ஒன்றே போதும், வாழ்க்கை எவ்வாறு நடத்த வேண்டும் என்று அறிந்துகொள்ள.

மற்றவர்கள் என்ன செய்கிறார்கள் என்று நிதானிக்கக்கூடாது. என் கடமை என்ன, அதை நான் செய்தால் போதும், அதை நான் மகிழ்ச்சியுடன் செய்து கொண்டே போனால் மற்றவர்களுக்கும் அதுவே தூண்டுகோலாகும் என்று தீர்மானித்து நடந்து கொள்ள வேண்டும். அப்படிச் செய்தால் வாழ்க்கை வீணாகாது.

— கல்கி குடியரசு மலர், 1950

(25.12.01 ராஜாஜி நினைவு தினம்)

இசை சிசனோடு சம்பந்தப்படாத கோடம்பாக்கத்திலிருந்து உச்சஸ்தாயியில் லாவணிப்பாட்டுக் கேட்கிறது. அதிலும் 'குய்யோ முறையோ' என்று ஒப்பாரி வைக்கிறார்கள் நம்மூர் கனவுக் கன்னிகள்! காரணம் என்னவோ பழசுதான். பெரிய திரையைக் கபளீகரம் செய்துவரும் சின்னத் திரைக்குச் சினிமாக்காரர்கள் யாரும் பேட்டி தரக்கூடாது என்ற தடையை மீறி, ஏட்டிக்குப் பேட்டி கொடுத்துவிட்டு இப்போது லட்சக்கணக்கில் அபராதம், நடிக்கத் தடை என்றதும் நடுங்கிக் கதறுகிறார்கள்.

திரையரங்குகள் எல்லாம் திருமணக் கூடங்களாகவும், பொருள் வைப்பறைகளாகவும் மாறி வரும் வேதனையான காட்சிகளுக்குக் காரணம் சின்னத்திரை என்பதில் தெளிவாக இருக்கும் சினிமாக்காரர்கள், தொலைக்காட்சியின் குடிவாளத்தைத் தங்கள் கைகளிலேயே வைத்திருக்க விரும்பினார்கள். ஆனால் 'சாட்டிலைட் உரிமை' என்கிற சாட்டைத் தொலைக்காட்சிகளின் கைக்குக் கிடைத்த பிறகு நிலைமை தலைகீழ் ஆகிவிட்டது. பெப்சி - படைப்பாளி பிரச்னைக்குப் பிறகு படுத்துக் கிடந்த திரையுலகையும், பெட்டிக்குப் போன நூற்றுக் கணிக்கான படங்களின் சாட்டிலைட் உரிமையையும் தொலைக்காட்சிகள் கணிசமான தொகைக்கு வாங்கிக் கொண்ட பிறகு, தமிழக முதல்வராவதைப் போலவே, தயாரிப்பாளர் ஆவதும் ரொம்ப சுலபம் என்று, பலர் பூஜை போடுகிற அன்றே சாட்டிலைட் உரிமையையும் விற்று விட்டார்கள்! விளைவு, 'உங்கள் அபிமான தொலைக்காட்சியில் தினசரி மூன்று காட்சிகள்' என்று விளம்பரம் கொடுத்துவிட்டு, கூடிக் களிக்கும் ஒரு பொது இடமான திரையரங்கு இருப்பதையே மக்கள் மனங்களில் இருந்து அழிக்கப் பார்க்கிறார்கள். போதாக்குறைக்கு, பேரம் படியாமல் போட்டித் தொலைக்காட்சிக்குச் சாட்டிலைட் உரிமை போய்விட்ட படம், கலைப்படமாகவே இருந்தாலும்கூட, தனது டாப்டென் ரேட்டிங் நிகழ்ச்சியில், சம்பந்தப்பட்ட படத்தை நார் நாராகக் கிழித்துத் தொங்கப் போட்டுவிடும் கொடூரத்தையும் வித்தையையும் தொலைக்காட்சிகள் செய்து வந்தன.

தவிரவும் இதே நிகழ்ச்சிகளில் புதிய படத்தின் தொடக்கம், திருப்பம், முடிவு எல்லாவற்றையும் மாறி மாறிக் காட்டி, தியேட்டருக்குப் போகாமலேயே படம் பார்த்த உணர்வைக் கொடுத்து விடுவதும் சினிமாக்காரர்களின் வயிற்றில் கிலியையும், புளியையும் கரைத்து விட்டது.

விடுவார்களா?



நடிகர்கள், தயாரிப்பாளர்கள், தொழில்நுட்பக் கலைஞர்கள் என எல்லா தரப்பினரும், விஜயதசமி அன்று நடிகர் சங்கத்தில் கூடினார்கள்.

''நாம் உயிரைக் கொடுத்து எடுக்கும் படத்தை இவர்கள் கூலாக கால்மேல் கால் போட்டுக் கொண்டு விமர்சிக்கிறார்கள். இவர்களுக்கு விளம்பரம் தரும் நிறுவனங்களின் வீட்டு உபயோகப் பொருட்களை டாப்டென் என்று ரேட்டிங் போட முடியுமா?'' என்று கொதித்தார் விஜய்காந்த். பலர் இவருக்கு ஆதரவாகப் பேசினாலும், தயாரிப்பாளர் தரப்பில் பலர் பிய்த்துக் கொண்டு பிதற்றினார்கள். எல்லாம் சாட்டிலைட் லட்சங்களை மனத்தில் வைத்துதான்! ஆனாலும் விஜய்காந்த் விடவில்லை. நடிகர், நடிகைகள் உட்பட திரையுலகைச் சேர்ந்தவர்கள் யாரும் தொலைக்காட்சிகளுக்குப் பேட்டி தரக்கூடாது என்றும், விளம்பரத்துக்

காகப் படங்களில் இருந்து தரும் துண்டுக் காட்சிகள் மூன்று நிமிடத்திற்கு மேல் இருக்கக்கூடாது என்றும் அந்தக் கூட்டத்திலேயே தடை விதித்தார்கள். அதையும் மீறி பலர் தீபாவளிக்குப் பேட்டிக் கொடுத்துவிட, அந்த நடிகர், நடிகைகளுக்குத் தலா இரண்டு லட்சம், தயாரிப்பாளர்களுக்குத் தலா ஒரு லட்சம், தொழில்நுட்பக் கலைஞர்களுக்குத் தலா இருபத்தைந்தாயிரம் என அபராதம் விதித்து விட்டார்கள்!

இந்தப் பட்டியலில் அதிகம் மாட்டியது மீனா, ரம்பா, சினேகா, மும்தாஜ் என்று பிரபல நடிகைகள். "ஏற்கெனவே இது மாதிரி எத்தனை தடைகள் போட்டிருக்கிறார்கள். அப்போதெல்லாம் யாருமே பொருட்படுத்தியதில்லை. இப்போது மட்டும் என்ன செய்து விடப் போகிறார்கள். ஐ டோன்ட் கேர்" என்ற அலட்சிய மனப்பான்மையோடு கூலாகப் பேட்டிக் கொடுத்து விட்டார்கள். அபராதம் கட்டாவிட்டால் சினிமாவில் நடிக்கத் தடை என்றதும், "நாங்கள் கொடுத்த பேட்டியெல்லாம், தீபாவளிக்கு


• மீனா


• ரம்பா

முன்பு செப்டெம்பரிலேயே செப்பியதாக்கும்"என்று அந்தர் பல்டியடித்து 'பிரஸ்மீட்' வைக்கிறார்கள்.

சிம்ரன், ஜோதிகா வரவுக்குப் பிறகு ரொம்பவே தடுமாறி, திரும்பவும் தனது இடத்தைப் பிடிக்க முயலும் மீனா, தனது மீன் கண்களில் குளம் மாதிரி தண்ணீரை ஸாரி... கண்ணீரைத் தேக்கி இப்படிச் சொல்கிறார். "கட்டுப்பாடு விதிக்கிறதுக்கு முன்பே கொடுத்த பேட்டியிது... 'தேவன்' படப்பிடிப்பில் இருந்த தலைவர் விஜய்காந்திடம் போய் தெரியாமல் கொடுத்துட்டேன்– என்று சொன்னேன்.. சரி இனிமே கொடுக்காதே என்று சொன்னார். இப்போ லட்சக்கணக்கில் அபராதம்ன்னு லெட்டர் வருது" என்கிறார்.

த்ரீரோஸஸ் படப்பிடிப்பில் வாள் சுழற்றிக் கொண்டிருந்த ரம்பாவோ "தீபாவளிக்கு ஜோதிகா, லைலாவும் கூடத்தான் பேட்டிக் கொடுத்தார்கள்... அவங்களை விட்டுட்டாங்க... இனிமே கொடுக்க மாட்டேன்னா? நம்பக் கூடாதா?" என்று ஆவேசப்படுகிறார். சினேகா கையில் ஒரு கடிதம். "இந்தப் பாருங்க... நான் முன்கூட்டியே பேட்டி கொடுத்தேன்னு சொல்றதுக்கு ஆதாரமாக, சம்பந்தப்பட்ட தொலைக்காட்சியே கொடுத்த கடிதம்" என்று நம் முகத்துக்கு நேரே காட்டுகிறார். அந்தக் கடிதமும் அவரின் கண்களும் ஒரு சேரப் படபடக்கின்றன. இதைப்போலவே மும்தாஜும்.

# அபராதமா? ஐ டோன்ட் கேர்!

அபராத வைபவத்தில் அப்பாவித்தனமாக மாட்டிக் கொண்ட பல இயக்குனர்களும் கூட உண்டு. படமே இல்லாமல் இருக்கும் ஆர்.வி. உதயகுமாரின் பேட்டி தீபாவளியன்று ஒரு தொலைக்காட்சியில் காலை ஏழு மணிக்கு ஒளிபரப்பானது.

"காலை நேரத்துல எவன்யா தியேட்டரைத் திறந்து வெச்சிருப்பான். என் பேட்டியைப் பார்த்துட்டு தியேட்டருக்குப் போகுற கூட்டம் குறைஞ்சு போச்சா" என்கிறார்.

நியாயம்தான். பிரசாந்த் மாதிரி துடுக்கான நடிகர்கள், பேட்டி ஒளிபரப்பான தொலைக்காட்சியிடம் 'எனக்கு விதிக்கப்பட்ட அபராதத்தை நீங்களே செலுத்துங்க' என்று சட்டம் பேசுகிறார்கள்.

தடைகுறித்து நடிகர் சங்கத்திலும், தயாரிப்பாளர் சங்கத்திலும் கேட்டால் 'ராஜ்யம்' படப்பிடிப்பில் கலந்து கொள்ள ஐதராபாத் சென்றிருக்கும் விஜய்காந்த் வந்த பிறகு நடைபெற இருக்கும் 'கூட்டுக்குழு' கூட்டத்தில் பேசி அதை ஒழுங்குபடுத்தப் போகிறோம் என்கிறார்கள்.

இன்னொரு தகவலும் தயாரிப்பாளர் சங்கத்திலிருந்து கிடைத்தது. பேட்டிக் கொடுத்து விட்டு இது எனது பழைய பேட்டி என்று அந்தர்பல்டி அடிக்கும் ஆட்களைக் கவனிப்பதற்காகவே பத்தாயிரம் சம்பளம் கொடுத்து, தொலைக்காட்சி பக்கத்திலேயே ஒருவரை உட்கார வைக்கப் போகிறார்களாம்! அப்படிப் போடு அரிவாளை!

– ஸ்ரீசக்கரம்



# மூன்றுமுறை மீண்டவர்!

*நான்கு வருடங்களாக உயிருடன் போராடி சமீபத்தில் காலமான நடிகர் அஷோக்குமார் தாதாசாகேப் பால்கே அவார்டிலிருந்து லைஃப் டைம் அச்சீவ்மென்ட் அவார்டு வரை பல விருதுகளைப் பெற்றவர் அவரைப் பற்றி ப்ருத்விராஜ் கபூரின் பேத்தி 'பண்டி கபூர்' சொல்கிறார்.*

அஷோக் குமாரை நான் முதன் முதலில் பார்த்தது என் மாமா ராஜ்கபூர் - கிருஷ்ணாவின் திருமண ரிஸப்ஷனில். எக்கச்சக்க கூட்டம். எத்தனையோ பேர் கெஞ்சியும் கிருஷ்ணாஜி தலையிலிருந்து 'கூங்கட்'டை (முகத்திரை) எடுக்க மறுத்துவிட்டார். அப்போது திடீரென்று கூட்டத்திடையே ஒரு சலசலப்பு. 'அஷோக்குமார் வருகிறார்' என்ற கலகலப்பு. உடனே பரபரப்பாக கிருஷ்ணாஜி முகத்திரையை விலக்கிவிட்டு அஷோக் குமாரைப் பார்க்க முனைந்தார் பாருங்கள், ஒரே கலாட்டா. அன்று என் மாமா ஒரு சபதம் எடுத்தார். "நான் பெரிய மனிதனாக ஆகிக் காட்டுகிறேன் பார்..." என்று! ராஜ் கபூரின் வளர்ச்சிக்கு வித்திட்டதே இந்தச் சம்பவம்தான். கொஞ்ச கால முன்பு கிருஷ்ணாஜி ஸீரியஸாக மருத்துவமனையில் படுத்திருந்தபோதுகூட, அவரைப் போய்ப் பார்க்க வேண்டும் என்று அஷோக்குமார்ஜி அடம்பிடித்தார். (இவரும் படுத்த படுக்கையாய் இருந்தார்.) அஷோக் குமாரின் மறைவைத் தாங்க முடியாமல் கிருஷ்ணாஜி கண்ணீர் உகுத்து மாலை மரியாதை கள் செய்ததை மறக்க முடியவில்லை.

அஷோக்குமார் அருமையாகப் பாடுவார். அதி அற்புதமான ஓவியரும்கூட. ஆனால், "என்னால் யாரையும் உட்கார்த்தி வைத்து போர்ட்ரெய்ட் வரைய முடியாது.." என்பார்; காரணம், தினம் குளித்து விட்டு, பாத்ரூமில் இரண்டு மணிநேரம் உட்கார்ந்து கொண்டு, நிர்வாண நிலையில்தான் ஓவியம் தீட்டுவார். இவரது பாத்ரூம் பிரத்யேகமான, பச்சைக் கண்ணாடிகளாலானது. சுவர்களாலல்ல! ஓவியம் தீட்ட இயற்கை ஒளி வேண்டுமே?

இலேசில் யாருடனும் பழக மாட்டார். ஆனால் நண்பராகிவிட்டால், கனிந்து குழைந்துவிடுவார். வருடந்தோறும் நவராத்திரியின்போது எங்கள் வீட்டிலிருந்து பிரசாதங்களெல்லாம் அவருக்கு அனுப்புவோம். பாத்திரங்கள் திரும்பி வரும்போது, லோனாவாலாவில் அவர் வைத்திருக்கும் 'ஃபார்மி'லிருந்து ஒரு 'சிக்கன்' அதில் இருக்கும். இப்போது அந்த தோட்டத்தை விற்றுவிட்டாதல், இந்த முறை 'சிக்கன்' கொடுக்க முடியவில்லையே என்று கோழிக்குஞ்சைப் போல வருந்தினார்.

நேரப்படி தான் எதையும் செய்வார். நான்கு மணிக்கு டீ, பத்துமணிக்குப் பெயிண்டிங், ஒரு மணி லஞ்ச், மாலையில் கொஞ்சமாக விஸிட்டர்களுடன் அளவளாவுதல், பிறகு டீவி. ஸீரியல்கள், சீக்கிரமாகவே டின்னர்... எதிலும் மணி தவறமாட்டார்.

ஒவ்வொரு பிறந்த நாளின் போதும் என் வீட்டிற்கு வந்து மாலையில் இரண்டு 'பெக்' ஏதாவது ஒரு ட்ரிங்க்ஸ் சாப்பிடுவார். இந்த ஆண்டு எல்லோரும் அவர் வீட்டில் திரண்டிருந்த போதும், இந்தப் பழக்கத்தை விடவில்லை.

குர்ஷித் பையா என்ற உதவியாளரிடம் கொள்ளைப் பிரியம். அவருக்கென்று துப்பாக்கி லைசென்செல்லாம் எடுத்திருந்தார். இவரை மூன்று முறை எமன் கையிலிருந்து மீட்டவர் குர்ஷித் பையா. ஆனால் இந்த முறை எமனிடமிருந்து எவராலும் காப்பாற்ற முடியவில்லை.

- ஜெயஸ்ரீ ராஜ்

உ



# லக்ஷார்ச்சனை பத்திரிக்கை

திருவாரூர் மாவட்டம், குடவாசல் வட்டம்,

**சித்தாடி ஸ்ரீ காத்தாயி அம்மன் ஆலயத்தில்**

நிகழும் விஷு வருடம் தை மாதம் 4, 5 (17, 18.1.2002) வியாழன், வெள்ளிக்கிழமை நவ சண்டி ஹோமமும், 6, 7 தேதிகளில் (19, 20.1.2002) லக்ஷார்ச்சனையும், அபிஷேகங்கள், பச்சை போடுதல் ஸ்ரீ காத்தாயி அம்மன் திருவருளால் நடைபெறுவதால் ஆஸ்திக அன்பர்கள் யாவரும் கலந்து கொண்டு ஸ்ரீ அம்பாள் அருளுக்கு பாத்திரர்கள் ஆகும்படி கேட்டுக்கொள்கிறோம்.

தங்களால் இயன்ற பொருள் உதவி செய்ய கீழ்கண்ட விலாசத்தில் தொடர்பு கொள்ளவும்.

1. கே.வி. சுப்ரமணியன், 58, ஸ்டேட் பாங்க் 2வது காலனி, நங்கநல்லூர், சென்னை - 600 061. போன் : 2330944
2. ஆர். இராமதாஸன், 56/31 சுப்ரமணிய முதலி தெரு, நெல்வயல் ரோடு, பெரம்பூர், சென்னை - 600 011. போன் : 5517213

*'தராசு'விடம் வாசகர்கள் கேள்வி கேட்பது வாராந்திர கச்சேரி! இந்த வாரம், சில கச்சேரிக் கலைஞர்கள் தங்கள் பெயர் கொண்ட அரசியல்வாதிகளிடம் கேள்வி கேட்க... இதோ சவால் - ஜவாப்!*

# நாங்கள் கேட்டவை!

**சேதலபதி பாலசுப்பிரமணியம்:** மறுபடியும் தமிழகத்தில் காமராஜர் ஆட்சி அமையும் வாய்ப்பு இருப்பதாக நிஜமாகவே நம்புகிறீர்களா?

**எஸ்.ஆர்.பாலசுப்பிரமணியம் (த.மா.கா.):** 'எளிமையான, தூய்மையான, நேர்மையான ஆட்சிக்குப் பெயர்தான் காமராஜ் ஆட்சி. இன்று தமிழகத்தில் 45, 50 வயதுக்கு மேற்பட்டவர்களுக்குத்தான் நேரடியாக அந்த ஆட்சியைப் பற்றித் தெரியும். மீண்டும் அப்படிப்பட்ட ஓர் ஆட்சி மலராதா? என்று மக்கள் ஏங்கத் துவங்கி விட்டார்கள். தொடர்ந்து ஆட்சிக்கு வந்த திராவிட இயக்கங்கள் மக்கள் நலனைப் புறக்கணித்து வந்ததால் ஏற்பட்ட விரக்தியில் காமராஜர் ஆட்சியை மக்கள் எதிர்பார்க்கிறார்கள். அது அமையும் என்று எங்களுக்கு நம்பிக்கை இருக்கிறது. 1976ல் ஆட்சி இழந்த திமுக 1989ல் பதவிக்கு வந்ததும், 1996ல் அடியோடு வெறுத்து ஒதுக்கப்பட்ட ஜெயலலிதா 2001ல் மீண்டும் ஆட்சியைப் பிடித்ததும் அரசியலில் நடந்தபோது, காமராஜர் ஆட்சி மீண்டும் தமிழகத்தில் அமைவதென்பது நிச்சயம் சாத்தியமே! அந்த நம்பிக்கையுடன்தான் உழைத்துக் கொண்டிருக்கிறோம்.


• திருச்சி சிவா


• விஜய் சிவா


• சேதலபதி பாலசுப்பிரமணியம்


• எஸ்.ஆர். பாலசுப்பிரமணியம்

**விட்டல் ராமமூர்த்தி:** ஒரு தனித்தன்மையுள்ள அரசியல்வாதியாகத் திகழ்ந்து தனிக் கட்சி நடத்தி வந்த நீங்கள், இப்போது காங்கிரஸில் இணைவதன் மூலம் கடலில் கரைத்த பெருங்காயம் போல் காணாமல் போய் விடுவீர்களே தவிர, அதே தனித்தன்மையுடன் மக்களுக்கு எப்படிச் சேவை செய்ய முடியும்?

**வாழப்பாடி ராமமூர்த்தி (காங்கிரஸ்):** என்னை ஒரு தனித்தன்மை கொண்ட அரசியல்வாதி என்று சொன்னதற்கு நன்றி. நான் தனிக் கட்சித் துவங்க தூண்டுகோலாக இருந்ததே காங்கிரஸ்தான். முன்பு எப்போதும் இருந்ததை விட, தமிழக காங்கிரஸ்; மிகவும் வேகமாகவும் துடிப்பாகவும் செயல்பட வேண்டிய காலகட்டம் இது. தேசிய அளவில் பார்த்தாலும் பா.ஜ.க.வின் மாற்று, காங்கிரஸ் பேரியக்கம்தான். எனவே இந்தச் சூழலில் காங்கிரஸில் இணைவதன் மூலம் என்னைப் போன்றவர்களுக்குத் தமிழகத்தில் உற்சாகமாகச் செயல்படும் வாய்ப்பு பெருகிவருகிறது. தமிழக மக்களுக்கு மீண்டும் காங்கிரஸின் பேரில் நம்பிக்கை வந்திருக்கிறது. இந்த நம்பிக்கையை ஆட்சி மாற்றத்திற்கும் அதன் மூலம் மக்கள் சேவைக்கும் பயன்

படுத்துவதில் என்னை ஈடுபடுத்திக் கொள்வேனே தவிர, காணாமல் போய் விட மாட்டேன்.



• டாக்டர் கணேஷ்



• எல். கணேசன்

**டாக்டர் கணேஷ்:** ஒன்றுபட்ட திராவிட இயக்கமாக இருந்த போது, இந்தி எதிர்ப்புப் போரில் தளபதியாக இருந்து செயல் பட்டவர் நீங்கள். இன்று தமிழகத்தில் பல துண்டுகளாகச் சிதறிக் கிடக்கும் திராவிட இயக்கம் ஒரே அமைப்பாக மாறும் வாய்ப்பு உண்டா?

**எல். கணேசன் (ம.தி.மு.க.):** அரசியலில் "நடக்க முடியாது, வாய்ப்பில்லை" என்று கூறப்பட்ட பல விஷயங்கள் சாத்தியமாகி இருக்கின்றன. எதையும் முன்கூட்டியே கணிக்க முடியாது. எதிர்காலத்தில் என்ன நடக்கும், நடக்காது என்பதையெல்லாம் இப்போதே உறுதியாகக் கூற முடியாது. ஆனால் திராவிட இயக்கத்தில் பற்று கொண்ட பலர் இது போன்ற எண்ண ஓட்டத்தில் இருக்கிறார்கள் என்பதும் மறுக்க முடியாதது.

**விஜய் சிவா:** ரயிலில் இசைக்கலைஞர்கள் பயணம் செய்ய முதல் வகுப்பு டிக்கெட்டில் சலுகைக் கட்டண வசதி உண்டு. தற்போது அந்த முதல் வகுப்பை தேர்ட் கிளாஸ் ஏ.ஸியாக மாற்றி வருகிறார்கள். இந்த தேர்ட்கிளாஸ் ஏ.ஸி. பிரிவில் கலைஞர்களுக்குச் சலுகைக் கட்டண வசதி அளிப்பது தானே, நியாயம். ஆனால் மறுக்கிறார்கள். மத்திய ஆளும் கட்சி கூட்டணியில் அங்கம் வகிக்கும் நீங்கள், இது குறித்து ராஜ்யசபாவில் பேசி சலுகை பெற்றுத் தருவீர்களா? அதேவகுப்பில் பயணம் செய்து, திருச்சிக்கு நேரில் வந்து நன்றி சொல்கிறேன்...

**திருச்சி சிவா (தி.மு.க. எம்.பி.):** முன்பு மக்களவை உறுப்பினராக இருந்தபோதும் சரி, தற்பொழுது ராஜ்யசபா உறுப்பினராகப் பணியாற்றி வருகின்ற போதும் சரி, ரயில்வே தொடர்புடைய பிரச்னைகளை நேரிடையாக ரயில்வே துறை அமைச்சரிடம் பேசியுள்ளேன். அதனால் பயணிகளுக்கும், ரயில்வே தொழிலாளர்களுக்கும் பல சலுகைகள், நன்மைகள் பெற்றுத் தர காரணமாக நான் இருந்திருக்கிறேன். இசைக் கலைஞரான தாங்கள் இப்பொழுது கூறும் இந்தப் பிரச்னையை என் கவனத்தில் கொண்டுள்ளேன். இசைக் கலைஞர்களுக்கு ரயில்வேயில் சலுகைக் கட்டண வசதியை ரத்து செய்திருப்பது முறையானது அல்ல. தாங்கள் திரும்பவும் வேண்டுகின்ற அந்த சலுகைக் கட்டண வசதி குறித்து ரயில்வே அமைச்சரிடம் உரிய முறையில் நேரிடையாகப் பேசி ஆவன செய்திட நான் அவசியம் முயற்சிப்பேன்.

• நமது நிருபர்கள்



• விட்டல் ராமமூர்த்தி



• வாழப்பாடி ராமமூர்த்தி

"அப்பா.. அதுக்கு நான் பதில் சொல்றேன்."

"சொல்லு பார்க்கலாம்."

"The answer is: It is a Challange"

"ஓகே...கணேஷ் டோண்ட் ச்சேஞ்ச் தி ஆன்சர். அமிர்தா உன்னுடைய பதில் என்ன?"

"ஐ திங்க் இட்ஸ் அட்ஜஸ்ட்மெண்ட்."

"இரண்டு பதிலும் ஓகே தான். உன் பதில் என்ன, லலிதா?

"என்னங்க இது... பிள்ளைங்களோடயே விளையாடுங்க."

"வாட்...? இது விளையாட்டா? கமான் இட்ஸ் சீரியஸ். வாட்ஸ் யோர் ஆன்சர்?.."

"ம்...மை ஆன்சர்... இட்ஸ் அ லாங் ஜேர்னி."

"வெரிகுட்."

'வெரிகுட்டெல்லாம் சரி. உங்க பதில் என்ன?" என்றனர் 3 பேரும் கோரஸாக.

"I think it is sharing. Life is Sharing."

"எப்படிப்பா? என்றான் கணேஷ்... "Grammar ஏ சரியில்லை" என்றாள் அமிர்தா.

"ஆம்னி பஸ் ஆர்ம்ஸ் ரெஸ்ட்டிலிருந்து, சிட்டி பஸ்ஸில் ஸ்டாண்டிங்கில் மேலே கம்பியைப் பிடிக்க மற்றவர்களுக்கு நாலு விரற்கடை gap கொடுப்பது வரை, சின்னச் சின்ன வீட்டு சௌகரியங்களிலிருந்து, சொத்துப் பிரிக்கும் சோக நிலை வரை, யூ ஷூட் பி வில்லிங் ட்டு ஷேர். Life is Sharing தான்."

"ஓகேப்பா. அக்ரீட். அடுத்த கேள்வி கேளுங்க."

பேட்டி எடுக்க வந்த நான் மேற்கண்ட வித்தியாசமான குடும்ப உரையாடலைத் தொடர்ந்து கேட்டுக் கொண்டிருந்தேன். அம்மா, அப்பா, மகள், மகன் நாலு பேரும் 'what is Life?' என்கிற கேள்விக்கான யுனீக் ஆன்சருக்காகப் போடும் போட்டியை பார்த்து முகமன் இல்லாத பாராட்டுப் புன்னகை வந்தது எனக்கு.

இந்த உரையாடலின் 'அப்பா', நம்முடைய பகல்லா ரோடு ஸ்வர்ணாலயா ஜுவல்லரி சுகுமாரன் தான்!! கடையை இரவு

# வைரக்கல் இலவசம் கொடைக்கானல் இலவசம்

மூடிய பின் பேசிக் கொண்டிருந்தார்கள். நேரம் இரவு 8.30. இன்னும் உட்கார்ந்து கேட்க ஆசைதான். குறுக்கிட யத்தனிப்பதற்குள்...

"ஓகே. அடுத்த கேள்வி: வாழ்க்கையில் தொடர்ந்து எதை மெயின்ட்டெயின் பண்ணுவது ரொம்பக் கஷ்டம்?" பட்டென்று அடித்தாள் அமிர்தா, "பொய் சொல்லுவதை!"



நானும் தொடர்ந்து வந்த குபீர் சிரிப்பில் கலந்தேன்.

நிமிர்ந்து பார்த்தார் சுகுமாரன்.

"அடடே நீங்களா? வாங்க ரங்ஸ்" என்றார் என்னைப் பார்த்து. அப்படித்தான் அழைப்பார். "சார். மறக்க முடியாத அனுபவம் சார்" என்றேன்.

"இன்னும் மறக்க முடியாமல் பண்ணு கிறேன்... உங்களுக்கும் ஒரு கேள்வி...!"

''சார்...! (எனக்கு நேரம் சரியில்லை) அலறினேன்.

"Simple கேள்வி தான்..."

"சார் உங்க சிம்ப்பின் லெவலைதான் பார்த்துக்கிட்டிருந்தேனே?"

"ஓகே What is Sale? What is Marketing?" (ஆன்சர் தரணும். அதிலும் யுனீக்... என் மூளைங்கிற hard disc-ஐ மின்னல் வேகத்தில் சலித்துப் பார்க்க ஆரம்பித்தேன்.)



''ரங்ஸ்! டோன்ட் வொரி, நானே சொல்றேன்...'' (என் குல தெய்வம்தான் தலையிட்டிருக்க வேண்டும்.)

"Sale is a Sale... Marketing is repeat Sales எப்படி? சரியா?'' என்றார் திரு. சுகுமாரன். (மை காட்!! பின்னாடி யூஸ் பண்ண, மனப்பாடம் செய்து கொண்டேன்.)

"சூப்பர், சார் நான் வந்தது..."

''சொல்லுங்க'' என்றவர் அடுத்து கணேஷிடம் "பதில் ரெடியா?" என்றார். வந்தது பதில்.

1. அமிர்தா: "கேரக்டர்" 2. கணேஷ்: "பிஹேவியரல் பாலிஷ்' 3 லலிதா: "வசதியிலும் எளிமை."

''எக்ஸலண்ட்! மை ஆன்சர் ஈஸ் : ஹெல்தி ஹ்யூமன் ரிலேஷன்ஷிப். அதுதான் most difficult to maintain" என்றவர் திரும்பி என்னைப் பார்த்து "சாரி... they are my best companions"

"புரியுது சார். சரி நியூ இயர் சேல்ஸ் உண்டு தானே?"

"உண்டு. கட்டாயம் உண்டு. 21 டிசம்பர் 2001 முதல் 4 ஜனவரி 2002 வரை."

"அதில் என்ன புதுமையான ஆஃப்பர்?"

''நான் புதுமையைத் துரத்துகிறேனா அல்லது புதுமை என்னைத் துரத்துகிறதான்னு தெரியலை. ஓகே! வழக்கமான எல்லாரும் அறிந்த கூலி இல்லை. சாதாரண கற்களுக்கு விலை இல்லை. ரூபி எமரால்டு விலையில் 10%- டயமன் விலையில் ரூ. 2000- காரட்டுக்குத் தள்ளுபடி என்பதெல்லாம் உண்டு. அது போக..."

"அது போக...?"

''டயமன் செட் வாங்குகிறவர்களுக்கு ஒரு வைரக்கல் இலவசம்."

"சார்?!?!"

''யெஸ். பத்தாயிரம் ரூபாய்க்கு மேல் வாங்குபவர்களுக்கு 3 நாள் கொடைக்கானலில் இலவசமாய்த் தங்கும் பரிசு."

"அப்புறம்?"

"ரூபி எமரால்டு செட் வாங்கினால் ஒரு ரூபி அல்லது எமரால்டு மோதிரம் அதில் உள்ள தங்கத்துடன் இலவசம். எல்லோருக்கும் ஒரு Happy New Year Compliments Bag ம் உண்டு. வாடிக்கையாளரது பழைய நகைகளுக்கும் நாங்கள் விற்கும் புதிய நகைகளுக்கும் ஒரே ரேட்தான் தரப்போகிறோம்."

'இது போதும் சார். கலக்கிடுறேன் சார்" என்று அந்த யுனீக் குடும்பத்திடம் விடை பெற்றுப் பறந்தேன்.




# ஓம்

## சரவணபவ

மாதமிருமுறை வரும் ஒரே
ஆன்மிக இதழ்

# அன்பளிப்பு:

# 2002 தினசரி காலண்டர்

(விரிவான தகவல்கள் அடங்கியது)

## கார்த்திகை மாத
## ஆன்மிக
## சிறப்புக்
## கட்டுரைகள்!




**வாங்கிவிட்டீர்களா?**









2001 டிசம்பர் 23
விஷு மார்கழி 8
மலர் : 60
இதழ் : 21

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## முக்கியத்துவம் இழந்த முத்துக்கருப்பன்!

அ.தி.மு.க. ஆட்சி ஆரம்பித்த ஏழு மாதங்களில் ஐந்து விசாரணை கமிஷன்கள் நிறுவப்பட்டுவிட்டன. அவற்றுள் மூன்று, காவல்துறையின் அத்துமீறல் தொடர்பானவை. விசாரணை கமிஷன்களுக்கு லட்சக் கணக்கில் மக்கள் வரிப்பணம் செலவாவது ஒருபுறமிருக்க, காவல் துறையைத் தமிழக அரசு தன் கட்டுப்பாட்டில் வைத்துக் கொள்ளாமல் கட்டவிழ்த்து விட்டுவிட்டது என்பதையே இந்த நிகழ்ச்சிகள் உணர்த்துகின்றன.

இவற்றுள் கடைசியாக நீதிபதி அலிமுகமது கமிஷன் நிறுவப்பட்ட சுறுசுறுப்பே தனி! கருணாநிதி கைது சம்பவம் தொடர்பான ராமன் கமிஷனும் தி.மு.க. பேரணி மீதான தாக்குதலை ஆராய நிறுவிய பக்தவத்ஸலம் கமிஷனும் இவ்வளவு அவசரமாக நிறுவப்படவில்லை.

சட்டக் கல்லூரி மாணவர்கள் பேரிலான தாக்குதல் சம்பவத்தை அலிமுகமது கமிஷன் ஆராய ஆரம்பிக்கும் முன்பே, சென்னை நகர காவல்துறை ஆணையர் முத்துக்கருப்பன் பணிமாற்றம் செய்யப்பட்டுவிட்டார்!




மாணவர்கள் தொடர்பான பிரச்னை என்பதாலும் வரவிருக்கும் இடைத்தேர்தலை மனத்தில் கொண்டும் தமிழக அரசு விரைவாக இயங்கியிருப்பது தெளிவு.

சட்டக் கல்லூரிக்குள் நுழைந்து, விடுதியிலிருந்த மாணவர்களைக் காவல் துறையினர் கண்மூடித்தனமாகத் தாக்கியது அராஜகம்தான். ஆனால் அத்தாக்குதலைத் தூண்டும் விதமாகச் சில மாணவர்கள் நடந்து கொண்டதும் செய்தியாகியிருக்கிறது. அருகே உள்ள ஹோட்டலில் சாப்பிடச் சென்ற மாணவர்கள் சிலர் பில்லுக்கான கட்டணத்தில் பாக்கி வைத்ததும், அது தொடர்பாக ஹோட்டல் ஊழியர்களுக்கும் மாணவர்களுக்கும் வாக்குவாதம் வலுத்து கைகலப்பாக மாறியதும், மாணவர் தரப்பிலேயே மறுக்கப்படாத உண்மைகள். எனவே, மாணவர்கள் பேரிலான வழக்குகள் திரும்பப் பெறப்பட மாட்டா என்ற அரசின் உறுதியான நிலைப்பாடு வரவேற்கப்படவேண்டியதே.

பிரச்னையைத் தீர்க்க நுழைந்த காவல் துறை, அதைத் தணிப்பதற்குப் பதில் ஊதிப் பெரிதாக்கிவிட்டது. மாணவர்களைத் தேடி சட்டக் கல்லூரி விடுதிக்குள் நுழைந்து, அங்கிருந்த அப்பாவி மாணவர்கள் பேரில் தடியடி நிகழ்த்தி, ரத்தக் களரியாக்கிவிட்டது.

காவல்துறையின் அத்து மீறலைச் சகியாமல் சென்னை மாணவர்கள் அனைவருமே ஒன்று திரண்டுவிட, கல்லூரிகளில் பாடம் நடக்கவில்லை; வன்முறைக்கு அஞ்சி அவை மூடப்பட்டுவிட்டன. பரீட்சைகள் உரிய நேரத்தில் நடைபெறாமல் ஒத்திப்போடப் பட்டுவிட்டன.

நடந்த நிகழ்ச்சியோடு துளியும் தொடர்பில்லாத ஏராளமான மாணவர்களின் படிப்பும் நேரமும் இதனால் வீணடிக்கப்பட்டுவிட்டன. நேரடியாக பாதிக்கப்பட்டு மருத்துவ




மனையில் சிகிச்சை பெற்றுவரும் மாணவர்களின் நிலைமையோ மாணவர்கள் போராட்டம் காரணமாக விரைந்து முன்னேறிவிடாது.

ஆகவே, மாணவர்கள் போராட்டத்தைத் தூண்டுவதும் அதில் ஈடுபட்டு மீண்டும் மீண்டும் கட்டுப்பாடு இழந்து பொதுச் சொத்துக்களுக்குச் சேதம் விளைவிப்பதும் அர்த்தம் இல்லாத செயல்கள். பொது மக்களின் ஆதரவையும் அனுதாபத்தையும் அவர்கள் விரைவில் இழந்து விடுவார்கள். சட்டக் கல்லூரி மாணவர்கள் மற்றவர்களைக் காட்டிலும் மிகுந்த பொறுப்புடனும் முதிர்ச்சியுடனும் நடந்து கொள்ள வேண்டும் என்று எல்லோரும் எதிர்பார்த்தபோதிலும், சட்ட மீறலுக்கு அதிகம் துணிபவர்கள் அவர்களே என்கிற அவப்பெயரைத்தான் அவர்கள் சம்பாதித்துக் கொள்கிறார்கள்.

எதிர்க்கட்சித் தலைவர்களும் இந்த நிகழ்ச்சியைச் சாதகமாக்கிக் கொண்டு ஆளும் அரசுக்கு எதிராக மாணவர்களின் உணர்ச்சிகளைத் தூண்டும் விதமாகப் பேசுகிறார்கள். நாடாளுமன்றம் வரையில் பிரச்னை அடிபடுகிறது என்ற போதிலும் மாணவர்களின் துன்பம் குறைந்ததா? பிரச்னை தீர்ந்ததாவெனில், இல்லை!

உணர்ச்சிப் பிழம்பாகத் தகிப்பவர்களை, தமிழக முதல்வர் சந்தித்து, அவர்களுடைய தரப்புக்கு உரிய நியாயம் வழங்கப்படும் என்கிற உறுதியை அளிக்க வேண்டும். விசாரணை கமிஷன் மூலம் விரைவில் உண்மை அறியப்பட்டு, அத்துமீறி நடந்து கொண்டவர்களுக்கு உரிய தண்டனை வழங்கப்படும் என்கிற உத்தரவாதமும் அளிக்கப்பட வேண்டும். முத்துக்கருப்பனுக்கு வழங்கப்பட்ட மாற்றல் உத்தரவு மட்டுமே மாணவர்களைத் திருப்திப்படுத்திவிடாது. ○

இப்ப மிருதுவான, ஹேர்-ஃப்ரீ ஸ்கின் ஒரு பாட்டில்லேருந்து **கிடைக்குதுன்னா** எப்படி இருக்கும்... ஐஸ் க்ரீம் கோன் சாப்பிட்டு **ருசித்து மகிழ்ச்சியடையற மாதிரி சுலபமாயிருக்கும்.**

ஃபெம் பெர்ஃப்யூம்டு ஹேர் ரிமூவிங் க்ரீம். உங்கள் சருமத்தில் ஆழ்ந்து அடியிலிருந்து தேவையற்ற ரோமத்தை நீக்குகிறது. மீண்டும் வளர்வதைத் தாமதமாக்குகிறது. உங்கள் மேனி சுத்தமாகவும், பட்டுபோன்ற மென்மையாகவும் நீடித்து விளங்க உறுதிசெய்கிறது.




சந்தனம்
அதோடு லெமன், ரோஸ் & பிளாஸம் நறுமணங்களிலும் கிடைக்கிறது

---

# ரம்ஜான் நல்வாழ்த்துக்கள்







ரம்ஜானை முன்னிட்டு
உயர்தர 916 KDM நகைகள்,
வெள்ளி சாமான்கள் பலவித
டிசைன்களில் நிறைந்துள்ளன.

தங்க நகைகளுக்கு
செய்கூலி இல்லை

கல், முத்து, பவளம் இலவசம்

ரம்ஜானை முன்னிட்டு அனைத்து
முன்னணி மில்களின் சர்ட்டிங், சூட்டிங்,
சேலைகள் மற்றும் ரெடிமேட் ஆடைகள்
குவிந்தவண்ணம் உள்ளன.

பட்டுக்கு
தனிப்பிரிவு

- சுடிதார்களுக்கு தனி தளம்
- ஷூ மற்றும் செருப்புகளுக்கு தனி தளம்



## ஜெயச்சந்திரன் கோல்டு ஹவுஸ்

தரமிகு தங்க ஆபரணங்களின் சுரங்கம்



## ஜெயச்சந்திரன் டெக்ஸ்டைல்ஸ்

தரம்! ரகம்!! பிரமாண்டம்!!!

25,27 ரங்கநாதன் தெரு, (மாம்பலம் ரயில் நிலையம் அருகில்),
தி.நகர், சென்னை-17 ✆4342879, 4322627.

ஞாயிறும்
விற்பனை உண்டு

# 'பட்டச்சித்ரா'

ஒரிஸாவின் ஓவிய கிராமத்துக்குச் சமீபத்தில் சென்று வந்திருக்கிறார் கலை விமர்சகர் இந்திரன்.

"இந்திய அளவிலான கவிஞர்கள் மாநாட்டுக்குக் கவிஞர் பழமலயுடன் ஒரிஸா சென்றபோது அங்குள்ள ரகுராஜ்பூர் கலை கிராமத்துக்குச் செல்லும் வாய்ப்புக் கிடைத்தது. அவர்களின் நுணுக்கமான கலை வேலைப்பாடுகளுடைய ஓவியங்களைக் கண்டு மெய்சிலிர்த்து விட்டேன். அவர்கள் பயன்படுத்தும் வண்ணங்கள் தயாரிப்பைக் கேட்டதும் உறைந்து விட்டேன்" என்கிறார் இவர். அப்படியென்ன விசேஷம் இதில்.





"ஒரிஸாவின் சிற்றோவிய (miniature paintings) மரபு ரீதியான 'பட்டச்சித்ரா' ஓவியங்கள் தனிச் சிறப்புப் பெற்றவை. இந்த ஓவியங்கள் திட்டவட்டமான தீர்க்கமான கோடுகளால் வரையப்பட்டுள்ளன. இவை நுட்பமான அர்த்தங்களைத் தெரிவிப்பவை. பெரும்பாலான உருவங்கள் பக்கவாட்டு முகத்தோற்றத்தைக் கொண்டவை. விலங்குகள் சர்ரியலிஸத் தன்மையுடன் படைக்கப்படுகின்றன.

"ஒரு காகிதத்துக்குள் பரப்பை பல்வேறு கட்டங்களாகப் பிரித்து அந்தக் கட்டங்களுக்குள் பல்வேறு கதைகளைச் சொல்லும் பாணி இதில் இருக்கிறது. கட்டங்களைப் பிரித்து இவர்கள் வரைவது ஜாமெட்ரிக் முறையில் இல்லை. செடி, பூ, காய், கனி இவற்றைச் சேர்ந்தே இருக்கிறது. ஏனென்றால் இது விவசாய சமூகத்தைச் சேர்ந்த கலை வெளிப்பாடு."

இந்த ஓவியத்துக்கான வண்ணங்களை இந்தக் கலைஞர்கள் எடுப்பது கொஞ்சம் ஆச்சர்யம்தான் என்கிறார் இந்திரன். பசுவின் கோமியத்தைச் சூடாக்கி, காய வைத்தால் இரண்டு மூன்று நாட்களில் மஞ்சளாகி விடுகிறது. இதைத்தான் மஞ்சள் நிறமாகப் பயன்படுத்துகிறார்கள். சில குறிப்பிட்ட மரங்களின் இலை, செடி, தழைகள் பச்சை நிறத்துக்குப் பயன்படுத்துகிறார்களாம்.

இவர்கள் வரைவதற்குப் பயன்படுத்தும் காகிதங்கள் பிரத்யேகமாக இதற்காக ஒரிஸாவிலேயே தயாரிக்கப்படுகின்றன என்கிறார் இவர். ஆனால் இந்தக் கலைஞர்கள் வாழ்க்கை?



• இந்திரன்

"ஒரிஸாவில் ஓவியங்களும், ஓவியர்களும் கவனிக்கப்படுவதாகத் தெரியவில்லை. அங்கே தான் மனம் ஒடிந்து போகிறேன். அவர்கள் கலைக்கும் அதற்கு எடுத்துக்கொள்ளும் நேரத்திற்கு மான வருவாய் கிட்டவில்லை. இம்மாதிரியான கலைஞர்களை மேம்படுத்தத்தான் கிராப்ட் கவுன்சில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஆனால் இந்தக் கவுன்சில் இடைத் தரகர்களால் மொய்க்கப்பட்டுக் கிடக்கிறது. இந்நிலை மாறவில்லையென்றால், மரபு ரீதியான 'பட்டச்சித்ரா' ஓவியங்கள் அழிவதைத் தடுக்க யாராலும் முடியாது!" என்று கொதிக்கிறார் இந்திரன்.

— ஏக்ஜி

# லவ் ஆர்ம்!

வீட்டுக்கு உபயோகமில்லாத பொருட்களிலிருந்து புதிய இசையையும் இசைக் கருவிகளையும் தயாரித்து புருவம் உயர வைத்திருக்கிறார்கள் ஜப்பானைச் சேர்ந்த ஐந்து பேர்.

இவர்கள் கண்டுபிடித்திருக்கிற இசையையும் இசைக் கருவியையும் கேட்க காதைத் தீட்டிக் கொண்டு அலைகிறார்களாம் ஜப்பானியர்கள். காதுகளை 'கிர்... ரிக்க' வைத்த அந்த இசைக் கருவிகளைப் பற்றிக் கொஞ்சம்...

**முனேடெரு யுஜினோ (MUNETERU UJINO'S):**

இந்த முப்பத்தேழு வயது இசைக் காதலர் ஒரு கிராபிக் டிசைனர். 'ஏதாவது புதிதாகச் செய்ய வேண்டும்' என்று மூளை பிராண்ட, ஒய்ந்து போன மோட்டார் சைக்கிள் ஹெட் லைட்டுகள், கண்ணாடி உருண்டைகள் இவற்றை வைத்தே புதிய இசைக் கருவியை உருவாக்கிவிட்டார். இடுப்பில் மாட்டிக் கொள்ளும் வசதியையும் ஏற்படுத்தி கொஞ்சம் முதுகைச் சாய்த்து வலக் கையாலும் இடக் கையாலும் இணைக்கப்பட்ட சங்கிலிகளை அங்கும் இங்குமாய் இழுக்க, வித்தியாசமான இசை காற்றில் பறக்கிறது. இந்த இசைக் கருவிக்கு லவ் ஆர்ம் (LOVE ARM) என்று பெயர் வைத்திருக்கிறார்.



• லவ் ஆர்ம்

"நான் இசைப் பள்ளியில் படித்த இசையைவிட இது முற்றிலும் வித்தியாசமாக இருப்பதுதான் இதன் வெற்றி" என்கிறார் யுஜினோ.

அது சரி இதை எவ்ளோ நேரம்தான் தூக்கிட்டு நிற்பீங்க?

**தௌஜி தௌஜிமா (TOUJI TOUJIMA):**

"இசையமைப்பாளர்களின் இசை, ஓவியர்களின் ஓவியங்கள், நடனக்காரர்களின் நடனங்கள் இவை அனைத்தையும் நான் வெறுக்கிறேன்" என்று முதலிலேயே டமாரென்று போட்டுடைக்கிறார் இம் மனிதர்!

பிறகு?

"இசைக்குப் பார்வை ரீதியான (visual meaning) அர்த்தத்தைக் கொடுக்க விரும்புகிறேன்" என்கிறார்.

எலக்ட்ரிக் ஷேவரைக் கொண்டு கிதார் மீட்டுவது, கிதாரின் மீது தண்ணீர் நிரப்பிய



டம்ளரை வைத்து ஸ்ட்ரா மூலமாக குமிழி களை உண்டு பண்ணி புது இசையைக் கொண்டு வருவது என்று ஏகத்துக்கு தலை முடியை(?) உதிர வைக்கிறார்!

முட்டை ஓடு, டிபன் பாக்ஸ், கரண்டி, தோசை அகப்பை, என்று கண்ணில் கண்ட தையெல்லாம் ஒரு வழி பண்ணி இசை என்கிறார் இந்தப் பார்ட்டி.

பொதுவாக கிராமிய இசையிலும் கிதார் இசைப்பதிலுமே தம்மை ஈடுபடுத்திக் கொள்வதாகச் சொல்கிறார்.

அப்ப ஏங்க இப்படியெல்லாம்?

கொண்டே இருக்கிறார்கள். அதனால்தான் காஸ்டியூன் (COSTUNE) என்ற ஆடையை உரு வாக்கினோம். இதை மாட்டிக் கொண்டால் எப்போது வேண்டுமானாலும் நீங்கள் இசையை அனுபவிக்கலாம்'' என்கிறார் இவர்.

காஸ்ட்யூம் மாதிரி இது காஸ்ட்யூன்! இந்த உடை 'பேட்'(Pad)களால் ஆனது. ஒவ்வொரு 'பேடை'யும் தட்டினால் பியானோ, ட்ரம்ஸ் என்று ஒவ்வொரு ஒலி வருமாம்.

''இதே உடையை இரண்டு பேர் அணிந்திருந் தால் ஒருவர் அனுபவிக்கும் இசையை மற்றவருக்கும் அனுப்ப முடியும்'' என்கிறார் இவர். அட!



• தௌஜிமா



• மேவா டெங்கி



• நிஷிமோடோ

**மேவா டெங்கி (MAYWA DENKI):**

எதையாவது காமெடியாக செய்வதுதான் இந்த டெங்கியின் வேலை. பாருங்களேன் படத்தை! ஹெலிகாப்டரின் தலையில் சுற் றும் இறக்கைகள் போல இருக்கும் இதற்கு மரிம்கா (marimka) என்று பெயர் வைத்திருக் கிறார். "ஒரு மலர்ந்த மலர் போல் இது இருக் கிறது இல்லையா?'' என்கிறார்.

இவர் இந்த கருவியோடு இன்னும் பல கருவிகளைக் கொண்டு பிரான்ஸ், இங்கி லாந்து போன்ற நாடுகளில் நிகழ்ச்சிகள் நடத்தி பலத்த பாராட்டைப் பெற்றிருக் கிறாராம். இந்தக் கருவியை இயக்கும் போது ராவ் போன்றவர்கள் கூட சிரித்து விடு வார்கள் என்கிறார்கள். அப்படியா?

**நிஷிமோடோ (Nishimoto):**

"ஒவ்வொருத்தரும் ஏதாவது ஒரு பாடலை அல்லது ராகத்தை முணுமுணுத்துக்

**டோமோ யாமாகுஷி (TOMO YAMAGUCHI):**

ட்ரம்ஸ் குரூப்பிலிருந்த இவருக்கும் கொஞ்சம் துறுதுறு மூளை. எதையாவது போட்டுக் குழப்பி செய்து கொண்டிருப் பாராம். அப்படித்தான் வீட்டிலிருந்து தூரப் போடும் டின்களைப் பொறுக்கி அங்கங்கே ஸ்பிரிங், மரக்கட்டைகளை இணைத்து புதிய இசைக் கருவியையும் இசையையும் உருவாக்கியிருக்கிறார் இந்த மனிதர்.

"இசையை என்ஜாய் பண்ணணுங்கறது தான் என் நோக்கம். அதுக்காக இந்த நோட்ஸ்குள்ளதான் இசை இருக்கணும் அப் படிங்கற வரையறையை நான் வெறுக் கறேன்'' என்கிறார் யாமாகுஷி. குஷியான பார்ட்டிதான்!

— சலாம்ஜி

# கூவம் தரிசனம்!

சென்னை மாநகர மங்கையின் கறுப்புக் கூந்தல் என்று கூவத்தை வர்ணிக்க விருப்பம்தான். கூந்தல் என்றால் வளைந்து நெளிந்து அலை பாய வேண்டுமே! நமது கூவமோ, மாநகரின் சகிக்கவொண்ணாத கழிவுகளைத் தாங்கி, முகத்துவாரம் அடைபட்டு முடமாகிப்போய் நிற்கிறது! கூவத்தின் நிஜமுகம் இதுதானா? கொசுக்களின் நதிமூலமாக மாறிக் கிடக்கும் கூவத்தின் நதிமூலம் இன்று எப்படியிருக்கிறது?

சென்னை செம்பரம்பாக்கம் ஏரியிலிருந்து, இருபது கிலோ மீட்டர் தொலைவில் இருக்கிறது பேரம்பாக்கம். அங்கிருந்து மேலும் நான்கு கிலோ மீட்டர் பயணித்தால் கூவம் கிராமம். ஊருக்குள் நுழைவதற்கு ஒரு கிலோ மீட்டர் முன்பாகவே 'கூவம் அருள்மிகு திரிபுராந்தகேஸ்வரர்' திருத்தலத்தின் கருவரை கோபுரம் நம் கண்களில் படுகிறது.

"சும்மாயில்லை. திருஞான சம்பந்தர் பாடிய திருத்தலம். உத்தம சோழன் காலத்தில் கட்டப்பட்ட பத்து நூற்றாண்டுப் பழமையான இந்தத் திருதலத்திற்குப் பதினெட்டாம் நூற்றாண்டில் ராஜ கோபுரம் கட்ட மேற்கொள்ளப் பட்ட முயற்சி கைவிடப்பட்டு, கோவிலின் முன்பாகவே கட்டுமானத்திற்குக் கொண்டு வரப்பட்ட கற்கள் பலதலைமுறைகளைப் பார்த்தபடி மௌனமாய்ப் படுத்திருக்கின்றன. "அந்த கற்களில் தேரை இருப்பது தெரிய வந்ததால் ராஜகோபுரம் பாதியுடன் நிறுத்தப் பட்டதாக செவிவழிச் செய்தி" என்று முன்னுரை தந்து நம்மை ஆலயத்திற்கு அழைத்துப் போகிறார் அங்கே குருக்களாக இருக்கும் ரவி அய்யர். ஆலயத்தின் உட்பிராகாரத்தை வலம் வந்தபடியே அவர் விவரித்த தல புராணச் சுருக்கத்தை கேட்டோம்.

"தேவர்களுக்குப் பெரிதும் அல்லல் கொடுத்து வந்த திரிபுராதிகள் என்ற அசுரர் குழுவை அழிப்பதற்காக வில்லேந்தி, ரதத்தில் புறப்பட்டார் ஈஸ்வரன். ஆனால் புறப்படும் போது, பிள்ளைதானே என்ற நினைப்பில் முழுமுதற் கடவுளை விநாயகப் பெருமானை துதித்துச் செல்ல மறந்துவிட்டார். இதில் கோபமுற்ற விநாயகர், தந்தை சென்ற ரதத்தின் அச்சாணியை முறித்துவிட்டார். அச்சுமுறிந்து ரதம் நின்ற இடம்தான் இந்த கூவம் கிராமம். அச்சு முறிந்த இடத்திலேயே ஈஸ்வரன் கடுங்கோபத்துடன் தியானத்தில் அமர்ந்துவிட, விஷ்ணுவும், பிரம்மாவும் விநாயகரிடம் ஓடிவந்து சமாதானம் செய்து, ரதத்தின் அச்சாணியைச் சரிசெய்யும்படி வேண்டியிருக்கிறார்கள். அதன்பிறகே மூன்று புறமும் திரண்டு வந்து தாக்கிய அசுரர்களை அழித்து, திருபுராந்தகேஸ்வரர் என்று இங்கேயே கோவில் கொண்டு விட்டார் ஈஸ்வரன்'' என்ற ரவி அய்யரிடம், ''இந்த ஊருக்குக் கூவம் என்று எப்படிப் பெயர் வந்தது'' என்றோம். "அதற்கும் செவிவழிக் காரணம்தான் இருக்கிறது. ஈஸ்வரனுக்கு

• திருபுராந்தகேஸ்வரர் ஆலய வெளிப்புறத் தோற்றம்

• ரவி அய்யர்



• கூவம் ஏரி



• அச்சிறுத்த விநாயகர்

ஆலயம் எழுப்புவதற்காக பிற்காலச் சோழர்கள் காலத்தில் காடாக இருந்த இந்த இடத்தை முதலில் கலப்பை கொண்டு உழுதிருக்கிறார்கள். அப்போது பூமியில் லிங்கவடிவில் புதைந்திருந்த ஈஸ்வரனின் தலையில் கலப்பையின் மழு பட்டு கூகூ என்ற சத்தம் எழவே இந்த ஊர் கூகம் என்று அழைக்கப்பட்டிருக்கிறது. அதுவே பின்னர் கூவம் என மருவிவிட்டது. இந்தத் தலத்தைப் பற்றி பதினோரு பாடல்களை திருஞான சம்பந்தர் பாடி அருளியிருக்கிறார். அதில் இரண்டு பாடல்களில் கூகம் என்று கூறியிருக்கிறார் என்றபடி ஆலயத்தின் தென் கிழக்கு மூலையில் அமையப் பெற்றிருந்த அச்சிறுத்த விநாயகர் (அச்சாணி உடைத்த) சன்னதிக்கு அழைத்துப் போனார். ஆச்சர்யம்! ஒரே கருவறையில் மூன்று பிள்ளையார் திருமேனிகள். நடுநாயகமாக கிழக்கேப் பார்த்தபடி அச்சிறுத்த விநாயகரும், அவரின் இடதுபுறம் மகாவிஷ்ணு, விநாயகரின் உருவத்திலும், வலப்புறம் பிரம்மா விநாயகரின் உருவத்திலும் கோவில் கொண்டு அருள்பாலிக்கிறார்கள். அச்சிறுத்த விநாயகரிடம் வைக்கப்படும் விண்ணப்பங்களுக்குப் பத்து நாட்களில் பலன் என்கிறார் ரவி!

"ஏற்கெனவே வரலாற்றில் நடந்த தெய்வீகத் தவறு மறுபடியும் நிகழக்கூடாது என்பதற்காக, சித்திரை பிரம்மோற்சவத்தின் போது ஈஸ்வரனுக்கு வில்லேந்திய ராஜா அலங்காரம் செய்து, அச்சிறுத்த விநாயகரிடம் அனுமதி பெற்ற பிறகே போருக்குப் புறப்படுவதாக ஏழாம் நாள் திருவிழா விளங்கி வருகிறது" என்றவர், திருபுராந்தகேஸ்வரர் கருவறையின் வெளிப்புறச் சுவர்களில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுகளைக் காட்டினார். தொல்பொருள் ஆய்வுத் துறையோ, ஆராய்ச்சியாளர்களோ கண்டு கொள்ளாத ஏராளக் கல்வெட்டுகளின் மீது சுண்ணாம்பு அடிக்கப்பட்ட நிலையில் இருக்கிறது.

"நூற்றுக்கணக்கான ஏக்கர் நிலமும் சொத்துக்களும் இருந்தும் பல நூற்றாண்டுகளாகத் திருப்பணி மேற்கொள்ளப்படாமல் ஆலயம் அழியும் நிலையில் இருக்கிறது. இந்து அறநிலையத்துறையினரால் எடுத்துக் கொள்ளப் பட்டும்கூட, என்னைப் போன்றவர்களுக்கு

அடையாள அட்டை கிடையாது. வெறும் ஆயிரம் ரூபாய் ஊதியத்தில் கஷ்டஜீவனம் நடத்திக் கொண்டிருக்கிறோம்" என்றார் கண்ணீர் வடிக்காத குறையாக. ஆலயத்தை வலம் வந்து லிங்க வடிவாயிருந்த திரிபுராந்தகேஸ்வரரை வணங்கிவிட்டுத் வெளியே வந்தோம்.

அங்கிருந்து ஐந்து நிமிடம் நடந்து, கிராமத்தின் தெற்கேயிருந்த கூவம் ஏரிக்கு வந்து சேர்ந்தோம். ஒரு சின்ன கடலைப்போல, செங்குன்றம், பூண்டி, புழல் ஏரிகளுக்கு இணையான பரப்பளவோடு பாதி நிரம்பிய நிலையில் காட்சியளித்தது ஏரி. சுற்றியிருக்கும் பதினைந்தாயிரம் ஏக்கர் நிலத்தின் சாகுபடிக்குப் பாசனம் நல்கும் இந்த ஏரியின் உபரி நீர்தான் கூவம் ஆறாகத் தொடங்குகிறது. ஒரு சின்ன கால்வாயாகப் புறப்பட்டு, பேரம்பாக்கம், செம்பரம்பாக்கம், அம்பத்தூர் அரும்பாக்கம் என்று பயணப்பட்டு தீவுத்திடல் வழியாக வங்கக் கடலைச் சந்திக்கிறது.

"பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் இந்த ஆறு எங்கிருந்து வருகிறது என்று சென்னை வைசிராய் கேட்டபோது - 'திஸ் ஈஸ் ஃபிரம் கூவம் வில்லேஜ்' என்று கலெக்டர் தந்த பதிலின் அடிப்படையிலேயே இந்த ஆறு கூவம் என்று பெயர் கொண்டு விட்டது. சுதந்திரத்திற்குப் பிறகும்கூட சென்னை மக்கள் நீராடி, படகுப் போக்குவரத்து நடத்திய ஆறு இது." என சென்னை மாநகராட்சியில் பணியாற்றி ஓய்வு பெற்ற மூத்த பொறியாளரான ஆர்.கே.மூர்த்தி வருத்தப்பட்டது நம் நினைவுகளில் மோத, அங்கிருந்து புறப்பட்டோம்.

கூவம் ஏரி நிரம்பி ஐம்பது வருஷத்துக்கு மேல் ஆகிவிட்டது என்று கிராமவாசிகள் வருத்தப்பட்டாலும், மழைக் காலத்தில் வழி நெடுகிலும் ஒன்று சேரும் வடிகால் நீர் சுத்தமாகத்தான் சென்னை நோக்கி ஓடி வருகிறது. அரும்பாக்கத்திற்கு முன்புதான் அதன் தூய்மையை, நகர அரக்கன் குலைத்து விடுகிறான் என்பதைக் கண் கூடாகப் பார்க்க முடிகிறது. முகத்துவார மணல் திட்டு அகற்றப்பட்டு, கூவம் தூர் வாரப்படாவிட்டால் ஒரு வரலாற்று பிழை ஏற்பட தமிழன் காரணமாகிவிடுவான் என்பது உறுதி. காரணம் கூவம் என்கிற ஒரு திருத்தல கிராமத்தில் தனது வேர்களை இன்னும் மிச்சம் வைத்திருக்கும் கூவத்தின் அர்த்தம் 'அசிங்கம்', 'நாற்றம்' என்று அகராதியில் இடம் பெற்று விடக்கூடாது!

- ஜெயந்தன்

படங்கள் : ராஜன்

வீட்டுக்குள் நுழையும்போதே ஒரு அமானுஷ்யமான அமைதியும் இருளும் சூழ்ந்திருந்தது. 'வெள்ளிக்கிழமையும் அதுவுமா வீட்டை இருட்டாப் போட்டு வைக்கலாமா?' என்று எப்போதும் திட்டுகிற மாமியார்கூட இன்று மறந்துவிட்டார்களா தெரியவில்லை. மிதியடியில் காலைத் துடைத்துக் கொண்டு வீட்டினுள் கால் வைத்ததும் ஏதோ தவறாய் உணர்ந்தாள். இன்னும் பழகியிருக்காத புது வீட்டின் சுவரில் தேடிப் பிடித்து ஸ்விட்சைத் தட்டி ஹாலில் வெளிச்சம் பாய்ந்தபோது சோஃபாவில் உட்கார்ந்திருந்த கணவனும் மாமியாரும் கண்ணில் பட்டார்கள். இருவரும் ஒரே நேரத்தில் நெற்றிச் சுருங்க நிமிர்ந்து பார்த்துவிட்டு, வெளிச்சத்துக்குக் கண்கள் பழகினதும் மீண்டும் தலைகுனிந்து கொண்டார்கள்.

"என்னங்க இது? ஏன் இப்படி இருட்டிலே உட்கார்ந்திருக்கீங்க?" கைப்பையைப் பக்கத்திலிருந்த மேஜை மேல் வைத்தபடி முன்னால் வந்தவள் அவர்கள் முன் கிடந்த புத்தகத்தைப் பார்த்ததும் அதிர்ந்து போய் நின்று விட்டாள்.

அந்தச் சினிமாப் பத்திரிக்கையில் 'புது இசையமைப்பாளர்கள், புதுப் பாடகி காதல் கும்மாளம்' என்று அட்டையிலேயே கொட்டை எழுத்தில் கிசுகிசு துவங்கியிருந்தது.

தளர்ந்துபோய் சோஃபாவின் நுனியில் அமர்ந்தாள், தலை வலிப்பது போலிருந்தது. இரண்டு கைகளையும் தலையில் வைத்து அழுத்திக் கொண்டாள், மதியமே இந்தக் கருமத்தைப் படித்தாயிற்று. அப்போதே பயம்தான். ஆனாலும் இத்தனைச் சீக்கிரம் வீட்டில் இருப்பவர்களிடமும் வந்து சேரும் என்று எதிர்பார்க்கவில்லை. அவர்கள் கேட்கப் போகும் எந்தக் கேள்விக்கும் அவளிடம் பதில் இல்லை. ஏற்கெனவே அவளே அந்தக் கேள்விகளைக் கேட்டுக் கொண்டு குழம்பிப் போயிருந்தாள். கொஞ்சமும் எதிர்பார்க்காத அடி. கணவனும், மாமியாரும் நல்லவர்கள்தான். நான் முழுக்க ரெகார்டிங் என்று அலைந்து விட்டுக் களைத்துப் போய் வருகிறவளுக்கு அன்பாய், ஆறுதலாய் இருக்கிறவர்கள்தான். ஆனால் இப்படி ஒரு பிரச்னை தலைதூக்கும்போது அவளை நம்புவார்களா, அவள் பக்கம் பேசுவார்களா என்பது அவளுக்குச் சந்தேகமாய் இருந்தது.

"இதெல்லாம் தேர்ட் க்ளாஸ் பத்திரிகைம்மா, அரிப்புக்குச் சொரிஞ்சுவிடறதுக்கு



எழுதற பொறுக்கிப் பசங்க, இவனுங்க எழுதற தையெல்லாம் பெரிய விஷயம்ன்னு எடுத்துட்டு கவலைப்படுறியே, விட்டுத் தள்ளும்மா, உன் மனசறிஞ்சு நீ சுத்தமா இருக்கிறவரைக்கும் எதையும் எவனுக்கும் நிரூபிக்கணும்ன்னு அவசியமில்லை" ஒய்வறையில் மேஜை மேல் கவிழ்ந்து அழுது கொண்டிருந்தவளுக்கு ஆறுதல் சொல்லித் தேற்றிய ரெகார்டிங் ஸ்டுடியோவின் வெள்ளைத்தாடி உதவியாளர் நினைவுக்கு வந்தார். அந்தப் புரிந்து கொள்ளுதலையும் நம்பிக்கையையும் இவர்களிடம் எதிர்பார்க்க முடியுமா? அந்த இதமான தோழமை இல்லையெனில் உறவுகள் எதற்காக?

கொஞ்ச நேரம் யாரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்காமல் உட்கார்ந்திருந்தார்கள், அவள் தானே பேச்சைத் துவங்குவதுதான் சரியாய் இருக்கும் என்று எண்ணினாள். இல்லையெனில் அது மீண்டும் வீண் சந்தேகங்கள் உண்டாகக் காரணமாகிவிடும். தயக்கமாய் நிமிர்ந்து கணவனைப் பார்த்து "இதை நம்பறீங்களா நீங்க?" என்றாள்.

அவன் பேசவில்லை, சோஃபாவின் மறுமுனையில் அமர்ந்திருந்த அவன் தாயாரைப் பார்த்தான். அந்த அம்மாளின் முகத்தில் எந்த உணர்ச்சிகளும் இல்லை. மீண்டும் இவள் பக்கம் திரும்பி, "இல்லை சாரதா, உன்னைப்பத்தி எங்களுக்குத் தெரியாதா?' என்றான். அவளுக்கு இனம்காண முடியாத நிம்மதி. 'அம்மா' என்று மாமியாரிடம் திரும்பினாள். "நாங்க இவ்வளவு நேரம் இதைப் பத்திதாம்மா பேசிட்டு இருந்தோம், அப்படியெல்லாம் எதுவும் இருக்காது, இந்த பேப்பர்க்காரங்களைப் பத்தி தெரியாதா-ன்னு அம்மா தான் சொன்னாங்க" என்றான் கணவன் அவசரமாய். அவள் திரும்பிப் பார்த்ததும் தலையைக் கவிழ்ந்து கொண்டான். அவள் அப்போதும் விடமால், "அப்புறம் ஏன் இருட்டிலே உட்கார்ந்திருந்தீங்க ரெண்டு பேரும்?" என்றாள்.

"இருட்டா? அதெல்லாம் ஒண்ணும் இல்லை, பேசிட்டே இருந்தோம், நேரமானது தெரியலை, லைட் போடலாம்ன்னு யோசிச்சுட்டே இருந்தப்போ நீ வந்துட்டே" அவள்



கணவன் சொல்லிக் கொண்டிருக்கும்போதே ஃபோன் ஒலித்தது.

ஃபோனுக்கு அருகில் அமர்ந்திருந்த சாரதா அதை எடுக்கக் கைநீட்டும்போது அவள் மாமியார் குறுக்கிட்டு, "ஃபோனை எடுக்க வேண்டாம்" என்றார்.

"இல்லை சாரதா, எல்லாம் நம்ம உறவுக் காரங்க, என் ஆஃபீஸ் ஃப்ரண்ட்ஸ், ஏன் நம்ம ரமாவோட ஸ்கூல் ப்ரின்ஸிபல்கூட ஃபோன் பண்ணியாச்சு. திரும்பத் திரும்ப எல்லோருக்கும் ஒரே பதிலைச் சொல்லி மாளலை, அதான் இப்போ ஃபோன் வந்தா எடுக்கறதில்லை.

அவன் குரலில் தெரிவது ஆயாசமா, வெறுப்பா என்று தெரியவில்லை.

அவள் நடுங்கும் குரலில் "ஏன் இத்தனை ஃபோன், எல்லோரும் என்ன கேட்கிறாங்க?" என்றாள். பதில் தெரிந்திருந்தும் அவன் வாயிலிருந்து வேறு வார்த்தைகள் வர வேண்டும் என்று விரும்பினாள். அவள் பிரார்த்தனை பலிக்கவில்லை, அவள் கணவன் கையில் முஷ்டி அமைத்து வெறுப்பாய் அந்தப் பத்திரிக்கையின் மேல் குத்தியபடி, "எல்லாம் இந்தச் சனியனாலே வந்தது" என்றான். எதைச் சொல்கிறான் என்று புரியவில்லை.

அவளுக்குச் சட்டென்று கண்ணில் நீர் துளிர்த்துவிட்டது, அடக்க முயற்சி செய்து முடியாமல் போய் விசும்ப ஆரம்பித்தாள். எத்தனை தர்ம நியாயங்கள், சட்டங்கள் இருந்த போதிலும் ஒரு பொய்யான வதந்தி இத்தனை சீக்கிரம் பரவி விடுகிறது என்பது அவளுக்குச் சோகமான ஆச்சரியமாய் இருந்தது. அவளுடைய முதல் பாடலுக்காக தமிழக அரசின் விருது கிடைத்த செய்தியும்தான் தொலைக் காட்சியில் வந்தது. ஆனால் மொத்தம் இரண்டு பேர் கூட உடனே ஃபோன் செய்து பாராட்டவில்லை. இப்போது ஒரு கேவலமான விஷயத்திற்காக பிரபலமடைந்திருக்கிறோம் என்பதும், ஊரில் எல்லோருடைய வாயிலும் மெல்லவதற்குத் தன்னுடைய அந்தரங்கம்தான் என்பதும் அவளுக்கு அவமானமாய் இருந்தது. ஒவ்வொருவரும் எத்தனை அசிங்கமாய்த் தன்னைக் கற்பனை செய்து கொண்டிருப்பார்கள் என்று நினைக்கவே கூசியது.

அவள் அழுது கொண்டிருப்பதை யாரும் தடுக்கவோ, ஆறுதல் சொல்ல முயற்சிக்கவோ இல்லை. அதனாலேயே சாரதாவுக்குக் கணவன் மேலும், மாமியார் மேலும் சந்தேகமாய் இருந்தது. இவர்கள் நிஜமாகவே என்னை நம்புகிறார்களா?

ஒருமுறை சொல்லப்படுகிற பொய்யே மிக வலுவானதாய் இருக்கும். மாலை முழுதும் தொலைபேசி வழியாய் விசாரிப்பு, அக்கறை போன்ற போர்வைகளில் ஒரே பொய் திரும்பத் திரும்ப சொல்லப்பட்டால், அது எந்தச் சாமானியனையும் அசைத்திருக்கும். பத்து பேருக்கு 'இல்லை, இல்லை' என்று பதில் சொல்கிற மனது, பதினோராவது முறை கொஞ்சம் தயக்கத்தோடுதான் மறுத்திருக்கும், பதினைந்தாவது தடவைக்குள் சொல்கிற பதிலில் சந்தேகம் வந்திருக்கும்.

"பகலில் தூங்கி பழக்கப்படுத்திக்கிறயா, எதுக்கு?"
"சீக்கிரமே எனக்கு அரசாங்க உத்யோகம் கிடைக்கும்னு ஜோசியர் சொன்னார்!"
— விசு

மணிபாரதி வீட்டிற்கு வந்து பாட அழைத்தபோது மறுத்திருக்க வேண்டும், "கல்லூரிப் பழக்கமெல்லாம் கடைசி நாளோடு சரி. இனி இங்கே வராதே" என்று விரட்டியிருக்க வேண்டும். அதைச் செய்யாமல் விட்டதன் விளைவு. வெள்ளிக்கிழமை மாலை மங்கல நேரத்தில் வீட்டில் ஆளாளுக்கு அழுது கொண்டிருப்பதில் வந்து நிற்கிறது.

கல்யாணம் முடிந்து குழந்தையும் ஆனபிறகு பாடப் போவதா? அதுவும் சினிமாவில்? சாரதாவுக்கு முதலில் தயக்கம்தான். இன்றைக்கு நம்பாத பார்வை பார்க்கிற கணவன்தான் அன்று தைரியம் சொன்னான்.

அந்த முதல் பாடல் பெரிய ஹிட்டாகி மணிபாரதி 'நம்பிக்கை அளிக்கும் இசையமைப் பாளர்' என்று பெரிய பெயர் வாங்கினான். இவளுக்கும் பாராட்டுக்களும், வாய்ப்புகளும் குவிந்தன. விருதுகளும் வந்து சேர, பத்திரிகைப் பேட்டிகளும், கோயிலுக்குப் போகையில் ஆட்டோகிராஃப் கேட்கிற முகம் தெரியாத பெண்களும் அவளுக்கே ஒரு மயக்கம் உண்டு பண்ண, தொடர்ந்து பாட ஆரம்பித்தாள்.

ரமா பள்ளிக்குப் போக ஆரம்பித்துவிட்ட பிறகு வீட்டில் ஓய்வு நேரம் அதிகம் இருந்தது இன்னும் வசதியாகிவிட்டது. இப்படி ஓய்வு நேரத்தில் மட்டும் பாடுவது என்று துவங்கியது, மாமியார் தானாய் முன்வந்து வீட்டு வேலைகள் எல்லாம் பார்த்துக் கொள்வதாய்ச் சொன்ன பிறகு, நாள் முழுக்க ரெகார்டிங் ஸ்டுடியோவில் கழியலானது. எல்லா இசையமைப்பாளர்களிடமும் பாடினாலும், அறிமுகப்படுத்தியவர் என்கிற மரியாதையில் மணிபாரதிக்கு முக்கியத்துவம் கொடுத்தாள். மணிபாரதி இசையில் சாரதா பாடிய பாடல்கள் எல்லாமே பிரபலமாயின. அந்தச் சந்தோஷங்களுக்கெல்லாம் இப்படி ஒரு முடிவு இருக்கும்



என்று தெரியவில்லை.

மணியான இசையமைப்பாளர் ஒரே பாடகியைத் தொடர்ந்து பாட வைத்துக் கொண்டிருப்பது தெரிந்ததே. இயக்குநர்கள் மறுத்தாலும் பிடிவாதமாய் அவருக்கே எல்லா பாடல்களையும் கொடுக்கிறாராம். 'போகிற போக்கைப் பார்த்தால் ஆண் குரலுக்குக்கூட அந்தப் பாடகிதான் வேண்டும் என்றாலும் ஆச்சரியமில்லை' என்று ஓர் இளம் இயக்குநர் நம்மிடம் புலம்பினார். விசாரித்துப் பார்த்ததில் இருவருக்கும் இடையே காதல் பாட்டு அரங் கேறியிருப்பது தெரிந்தது. ராத்திரி பகல் என்று பார்க்காமல் ரெகார்டிங் தியேட்டரிலேயே காதல் கூத்தடிக்கிறார்களாம்.

கவனமாய் விஷம் தோய்த்து எழுதப்பட்ட வார்த்தைகள். லட்சக்கணக்கில் பிரதிகளாய் அச்சாகி தமிழ்நாடு முழுக்க மானம் பறந்து கொண்டிருக்கிறது.

சாரதா, கணவனை நிமிர்ந்து பார்த்தாள், 'நான் வேணும்ன்னா பாடறதை நிறுத்திடட் டுமா?' என்றாள்.

அவன் உடனடியாய் 'ஐயோ, அதெல்லாம் எதுக்கும்மா? இவங்களுக்குப் பயந்து ஏன் பாடறதை விடணும்?' என்றான்.

"இல்லைங்க, என்னால இதைத் தாங்கிக்க முடியலை. என் மேலே தப்பு இல்லைன்னு எனக்குத் தெரியும். ஆனா ஊருக்குத் தெரி யாதே. நாளைக்கு நான் வெளியே போகும் போது யாராவது வேற எதாவது பேசிக்கிட் டாக்கூட, என்னைப்பத்தி பேசறாங்கன்னுதான் நினைக்கத் தோணும்' அவள் சொல்லி முடிப் பதற்குள் அவன் குறுக்கிட்டு, "இப்போ நீ பாடறதை நிறுத்திட்டா மட்டும் இந்த அசிங்கம் மறைஞ்சுடுமா சாரதா?' என்றான். அவள் மௌனமானாள்.

"நீங்க இதை நம்பறீங்களா?" என்றாள் மறுபடி.

"இல்லை சாரதா, நிச்சயமா இல்லை."

அவள் கணவனை நம்பவே விரும்பினாள். ஆனால் தொடர்ந்து பாடுவதும் அவளுக்குப் பிடித்திருக்கவில்லை. இன்றைக்கு இப்படி எழுதுகிறவர்கள் நாளைக்கு என்னவும் செய் வார்கள். "இல்லைங்க, எனக்கு மனசு ஒத்துக் கலை. நான் இனிமே பாடறதா இல்லை" என்றாள்.

அவள் கணவன் பக்கத்தில் வந்து உட் கார்ந்தான். "இதோ பாரு சாரதா, வீட்டிலேயே அடைஞ்சு கிடந்த நீ இப்போதான் நாலு இடம் பார்க்கிறே. நாலு பேரோட பழகறே. உனக்குப் பாடறதுன்னா கொள்ளைப் பிரியம்ன்னு நீயே அடிக்கடிச் சொல்லியிருக்கே. அப்படி மனசுக் குப் பிடிச்ச வேலை செய்யறதாலதான் நீ இப்படிச் சந்தோஷமா இருக்கே. இந்த முகமில் லாதவங்க எழுத்துக்குப் பயந்து நீ பாடறதை விட்டுட்டா, செய்யாத தப்புக்கு உன்னையே தண்டிச்சுக்கற மாதிரி, இல்லையா?" அவளுக் குக் கணவன் பேச்சும் அக்கறையும் பிடித்திருந் தது ஆனாலும் அவனுடைய இயல்பு மீறிய செயலாய் இதை உணர்ந்தாள். இதற்கும் மேலாக ஏதோ ஒரு காரணம் இருக்க வேண்டும்.

அவள் தேடிய காரணம் அவனுடைய அடுத்த வாக்கியத்தில் கிடைத்தது. 'அது மட்டுமில்லை சாரதா, என் சம்பாத்தியம் போக உன் சம்பாத்தியமும் இருக்குங்கற தைரியத்தி லேதான் கடனிலே புது வீடு வாங்கியிருக்கோம். ரமாவை பெரிய பள்ளிக்கூடத்திலே சேர்த் திருக்கோம். நீ பாடறதை நிறுத்திட்டா இது எல்லாமே டிஸ்டர்ப் ஆகும். ரமா கல்யாணத் துக்கு நாம எதாவது சேர்த்து வைக்க வேண் டாமா? அதையும் நீ யோசிச்சுப் பார்க்கணும்."

அவளுக்கு இப்போது எல்லாமே புரிந்தது. அந்தப் பத்திரிக்கைச் செய்தி உண்டாக்கியிருந்த அதிர்ச்சியைவிட இது பெரிய அதிர்ச்சியாய் இருந்தது. எல்லாம் கடைசியில் அவன் சம் பளத்தில்தான் வந்து நிற்கிறதா? மாமியாரும் அதனால்தான் மௌனமாய் இருக்கிறாரோ? நம்பிக்கை என்பது உணர்வாய் மட்டுமே விளைய வேண்டும், வேறு எதன் விளைவாகத் தோன்றினாலும் அது வெறும் நாடகமாகத் தானே இருக்கும். அவளுக்கு இவை யாவும் ஒரு கெட்ட கனவாய்ச் சட்டென்று கலைந்து போய்விடாதா? என்று இருந்தது.

கணவனுடைய எதிர்பார்ப்புகள் புரிந்த பிறகு முடிவெடுப்பது கடினமாய் இருந்தது. 'நீ என்னை முழுமையாய் நம்பினால், திரும்ப பாடப் போகிறேன்' என்று சொல்ல விரும்பி னாள், 'நீயும்தான் தினமும் அலுவலகம் போகிறாய், உன் அலுவலகத்தில் பத்திரிகை நிருபர்கள் இல்லை என்பதாலேயே உன்னை நான் நம்ப வேண்டுமா' என்று கேட்க விரும்பி னாள், ஆனால் அவை யாவும் ஆபாசமாய்த் தோன்றின.

கொஞ்ச நேர யோசனைக்குப் பிறகு அழுத்தமாய்ச் சொன்னாள். "இல்லைங்க, என் னால இனிமே பாட முடியாது, என்னை மன்னிச்சுடுங்க." ○



"சூரியனைக் கொஞ்சம் உற்று கவனிக்க ஆரம்பித்தால் சுற்றிலும் காணப்படுகிற பிசிர் போய்விடும். அப்புறம் கண்ணாடியில் தட்டையாகச் செய்யப்பட்ட ஒன்று ஜலத்தில் மிதப்பதுபோல் தளதள வென்று தோன்றும்... அசைவு தோன்றும்..."

இப்படிச் சொல்லியிருப்பது யாரோ அறிவியல் நிபுணர் என்று நினைத்தால், அது தவறு. மறைந்த காஞ்சி மகாஸ்வாமிகள் கண்டு அனுபவித்துச் சொன்னது இது. இந்த வர்ணனை நூற்றுக்கு நூறு சரியானது!

சந்தியாவந்தனம் செய்யும்போது, நண்பகலில் சொல்லப்படுகிற ஒரு பிரார்த்தனையின்போது இரண்டு கைகளையும் ஒன்றன்மீது ஒன்றாக வைத்து, விரல் இடைவெளி வழியே சூரியனைச் சில விநாடிகள் பார்க்க வேண்டும். 'பஸ்யேம ஸரதஸ் ஸதம்' – நூறு ஆண்டுகள் சூரியனைப் பார்ப்போம், நூறு ஆண்டுகள் உயிர் வாழ்வோம். நூறு ஆண்டுகள் இனிமையான சொற்களையே சொல்வோம் - என்றெல்லாம்

# சூரியனில் ஒரு பு

அந்த மந்திரம் பொருள் தரும்.

இன்றைக்குச் சூரியனை நேரடியாகப் பார்க்கக் கூடாது. புற ஊதாக் கதிர்கள் தாக்கும் என்றெல்லாம் சொல்லப்படுகிறது. தொலைநோக்கி வழியேயும் சூரியனை இன்று நேரே காண முடியாது. அதன் பிம்பத்தைத்தான் வெண் திரையில் விழ வைத்துப் பார்க்கிறார்கள், படம் எடுக்கிறார்கள்.

சூரியன் என்பது பிரபஞ்ச மையம் இல்லை. ஆயிரக்கணக்கில், லட்சக்கணக்கில் விண்ணில் சுழன்று வருகிற 'காலக்ஸி' என்னும் ஒளிக்கூட்டங்களுள் ஒன்றான பால்வழி ஒளிக்கூடத்தின் (milky way galaxy) விளிம்பில் சுற்றி வருகிற ஒன்பது கோள்களுள் மூன்றாவது நம்முடைய பூமி என்பது பள்ளிக்கூடப் பாடம்.

பூமியைப் போல் நூறு மடங்கு பெரிதான சூரியப் பரப்பில் எப்போதும் வெடிப்புகளும் காந்தப் புயல்களும் உருவாகிக் கொண்டே இருக்கின்றன. சூரியப் புள்ளிகள் என்பது ஒரு சுவாரஸ்யமான காட்சி. 'பில்ட்டர்கள்' என்னும் ஒளி வடிகட்டி பயன்படுத்தி, சாதாரண பைனாகுலர்களின் வழியே, சூரியப் புள்ளிகளைக் காண முடியும்.

சூரியப் புள்ளிகளுக்காகச் சூரியனைப் பார்க்க உகந்த நேரம் என்பது, வெப்பம் உறைக்கத் தொடங்குவதற்கு முந்தைய காலை நேரம்தான். உத்தேசமாகக் காலை எட்டு மணிக்கு முன்னால் இப்படிப் பார்ப்பது பாதுகாப்பானது.

சூரியப் புள்ளிகள் இடம் மாறிக் கொண்டும், மறைந்து புதிது புதிதாய்த் தோன்றிக் கொண்டும் இருக்கும். ஒரு லட்சத்து நாற்பதாயிரம் கிமீ குறுக்களவுள்ள சூரியப் புள்ளிகள்கூடத் தென்படும் என்கிறார்கள். அதிர்ஷ்டமிருந்தால் இது போன்ற பெரிய 'புள்ளி'யை வெறும் கண்ணாலேயே காண முடியும். சில புள்ளிகள் ஒன்றிரண்டு நாட்களில் மறைந்து விடும்.

சில புள்ளிகளைப் பதினான்கு நாட்கள் தொடர்ந்து கவனித்திருக்கிறார்கள். சூரிய வட்டத்தின் ஒரு கோடியிலிருந்து மறு கோடிக்குப் போகிற சுழற்சி நேரம் இது.

சூரியப் புள்ளிகள் சில நாட்களில் நூற்றுக்கணக்கில் கூடத் தென்படும். அப்படி இவை அதிகமாகும் நாட்களில் நம்முடைய தொலைக்காட்சி, வானொலி அலைவரிசைகள்கூடத் தடுமாற்றமடையும்.

சூரியப் புள்ளிகளைக் கண்டு ஆராய்வதில் சீன நாட்டவரே முன்னோடியாய்த் திகழ்ந்திருக்கிறார்கள். பழைய சீன நாட்டில் தினமும் காலையிலும் மாலையிலும் சூரியன் தோன்றி மறைகிற நேரங்களில் வழிபாடுகள் நடத்துவதற்கு ஸையா (XIA) வமிசத்தார் ஆண்டபோது பிரத்யேகமாக அதிகாரிகளே நியமிக்கப்பட்டிருந்தார்களாம்.

அவர்கள் சூரிய வட்டத்தில் கண்ட புள்ளிகளுக்கு உருவமே தந்து குறித்து வைத்திருக்கிறார்கள். 'மூன்று கால் காக்கை' உருவம் அவற்றுள் ஒன்று. கி.மு. 165 முதல் பதினேழாம் நூற்றாண்டு வரையில் காணப்பட்ட தோற்றங்களை வரலாற்று

# ன்று கால் காக்கை!

ரீதியில் தேடி, பெய்ஜிங் வான ஆராய்ச்சி நிலையம் தொகுத்து வைத்திருக்கிறது.

கொதிக்கும் ஆவிப்பரப்பில் குளிர்ச்சியான பகுதிகளே இந்தப் புள்ளிகள். பதினோரு ஆண்டுகள் சுழற்சியில் இவை இடம் பெயர்வதாய்ப் பத்தொன்பதாம் நூற்றாண்டில் கருதப்பட்டது. அப்படி







இல்லை என்பதைக் கடந்த நூற்றாண்டின் பிற்பகுதியில் உறுதி செய்தார்கள்.

வெளிச்சம் குறைவான இந்தக் கரும்புள்ளிகள் அதிகம் காணப்படும் போதுதான் சூரிய வெப்ப வெளிப்பாடும் கூடுதலாகிறது. புள்ளித் தலையால் அடங்கிக் கிடந்த பகுதியில் வெப்பம் உடைத்துக்கொண்டு கிளம்புகிற நிலை இது.

சூரியப் புள்ளிகளின் இடப் பெயர்வைக் கவனித்த கலிலியோதான், சூரியன் சுழன்று கொண்டிருப்பதை முதலில் அறிந்து சொன்னார்.

கிபி 1645 - 1715 இடையில் சூரியப் புள்ளிகளே தென்படவில்லை என்றும் இந்தக் காலத்தில் ஐரோப்பாவில் அபரிமிதமான குளிர் நிலவியது என்றும் கண்டறிந்திருக்கிறார்கள்.

ஆக, சூரியப் புள்ளிகளுக்கும், நம்முடைய பூமியின் தட்ப வெப்பத்துக்கும் நிறைய தொடர்பு உள்ளது என்பது உறுதி!

- சுப்ர. பாலன்

● வி. பரமசிவம், மதுரை.

? ரேஷன் அரிசி விலை உயர்வை மட்டும் கைவிட்டதற்குக் காரணம் தாய்மார்களின் ஒட்டுமொத்த எதிர்ப்பு தானே...?

! தாய்மார்களின் எதிர்ப்பைப் பொருட்படுத்துகிறவர்களாக இருந் தால் பதினைந்து ரூபாய் பாக்கெட் அறிவிப்பைப் பயப்படாமல் வெளி யிடுவார்களா!

● எஸ். பவதாரிணி சீனிவாசன், திருத்துறைப்பூண்டி.

? ரனில் விக்கிரமசிங்கே ஆட்சியிலா வது ஈழத் தமிழர்களுக்கு நல்ல காலம் பிறக்குமா...?

! அதிபர் ஆட்சி முறை உள்ள நாட்டில் பெரும்பான்மை பெற்றி ருப்பது ஒரு கட்சி; அதிபர் மற் றொரு கட்சி என்று இருக்கும்போது சென்னை மாநகராட்சியில் ஸ்டாலின் மேயராக இருப்பது போன்ற இழுபறிதான்.

• இலங்கை...



• ...இழுபறி!



● ஜி.ஜி.கிருஷ்ணன், விசலூர். ❐

? பான்பராக் பான்மசாலாவைத் தடை செய்த அரசு மலிவுவிலை மதுவை அறிமுகப்படுத்துவது என்ன நியாயம்?

! சும்மாயிருங்க! இன்னும் கொஞ்சம் காலத்துல மலிவு விலையில அரசே பான் மசாலா தயாரித்து விற்பனைக்குக் கொண்டு வரும்னு அறிவிச்சுடப் போறாங்க!

● காசிதாசன், மருதாடு.

? சட்டம் ஓர் இருட்டறை; நீதி..?

! மெழுகுவர்த்தி. அடிக்கடி அணையும். மீண் டும் மீண்டும் ஏற்ற வேண்டும்.

● வி. லக்ஷ்மிராமன், சேலையூர்.

? 20001ல் தாங்கள் தேர்வு செய்யும் சிறந்த மனிதன்?

! நீங்கள்தான்! '2001' என்று எழுதுவதற்குப் பதில் 20001 என்று எழுதி, பதினெட்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னோக்கித் தாவிய சாதனை யாளராச்சே நீங்க!

● பி.சிவக்குமார்பிரபு, திருப்பூர்.

? விரைவில் திருமணம் செய்து கொள்ள ஆசை. எப்படிப்பட்ட பெண்ணை என் வாழ்க்கைத் துணை வியாகத் தேர்ந்தெடுப்பது?

! உங்களை நிறை குறைகளுடன் ஏற்கக் கூடிய பெண்ணை.



• பல்லவி வித்தகர்!

● பாலு, கௌரிவாக்கம்.

? தன்னம்பிக்கை இல்லாதவர்கள்தான் சுய முன்னேற்ற நூல்களைப் படிப்பார்கள் என்று சுகிசிவம் கூறுகிறாரே?

! வாழ்க்கையின் மேடு பள்ளங்களில் விழுந்து எழும்போது தன்னம்பிக்கை அவ்வப்போது அடி வாங்கும். அத் தகைய நேரத்தில் நல்ல நூல்கள் கைகொடுக்கும் - சுகி சிவம் நூல்கள் உட் பட!

● சின்னஞ்சிறுகோபு, மயிலாடுதுறை. ✱

? நோயைக் குணப்படுத்துவதற் காக, குளோனிங் முறையில் மனிதக் கருவை உருவாக்கு வதை ஏன் எதிர்க்கவேண் டும்? அதில் என்ன தவறு இருக்கிறது?

! நோய்ச் சிகிச்சைக்கு, மனிதக் கருவின் சில செல்கள் (stem cells) மட்டும்தான் தேவைப் படு கின்றன. அதைப் பிரித்தெடுப்பதற்காக கருவை உருவாக்கிக் கொல்வது முறையா என்ற கேள்வி எழுகிறது. மேலும், சிகிச்சை என்கிற நோக்கத்தைத் தாண்டி பரிசோதனைகள் முன் னேறி, சிருஷ்டி லயத்தில் தலையிட்டு விபரீதங்



• சினிமா புண்ணியத்தில்...

❐ ரூ. 100/- பரிசு பெறுபவர்:

ஜி.ஜி.கிருஷ்ணன்,
விசலூர் அஞ்சல்,
திருவாரூர் - 610 101.

✱ ரூ. 50/- பரிசு பெறுபவர்:

சின்னஞ்சிறுகோபு,
1/313-1, காமராஜர் தெரு,
சீனிவாசபுரம்,
மயிலாடுதுறை - 609 001.

கள் விளைவிக்கும் வாய்ப்புகள் இதில் மிக அதிகம். 'திருமணமான ஆணும் பெண்ணும் அன்பில் இணைந்து கருவை உருவாக்குதல் மட்டுமே தர்மம்' என்று கிறிஸ்துவ குருமார்கள் ஆட்சேபணை கூறியிருப்பது கவனத்துக் குரியது. மற்ற மதத் தலைவர்களும் விழித்துக் கொள்ள வேண்டும்.

● ப. இராம் முருகன், சிவகங்கை.

*? ஐம்பது சதவிகிதத்துக்குக் குறைவாக வாக்குகள் பதிவானால் அந்த இடத்தில் மறு தேர்தல் வைக்க வேண்டும் என்கிறாரே திருமாவளவன்?*

! மறு தேர்தலில் வாக்குப் பதிவு மேலும் குறையுமானால் என்ன செய்வார்களாம்? குதிரையைத் தண்ணீர்த் தொட்டி முன் நிறுத்தலாம்; ஆனால் குடிக்கச் செய்ய முடியாது!



• குதிரை கதை!

● கலை அரசு, கோவை - 42.

*? மீரா, கண்ணன் மீது கொண்டது காதலா? பக்தியா?*

! தெய்வீகக் காதல்!

● சின்னை எஸ். ராஜமழை, சின்னமனூர்.

*? பிரபல எழுத்தாளர்களின் பெயர்கள் பெரும்பாலும் 'ன்'னில் முடிவது பற்றி...? (அகிலன், ஜெயகாந்தன், பிரபஞ்சன், அசோகமித்ரன், சாண்டில்யன், பாலகுமாரன், ஜானகிராமன்...)*

! அமரர் கல்கி, சாவி, சிவசங்கரி, லட்சுமி, பாக்கியம் ராமசாமி, சிவகாமி, வாஸந்தி போன்ற பிரபல பெயர்கள் 'இ'யில் முடிவது போல்தான்!

● கே. துரைசாமி, மங்களப்பட்டி.

*? சினிமா என்ற ஒன்று இல்லாவிட்டால்...?*

# சினிமா என்ற ஒன்று இல்லாவிட்டால்..?

! 'பெப்ஸி உங்கள் சாய்ஸ்' நிகழ்ச்சி இருந்திருக்காது; பெப்ஸி உமாவுக்குக் கோயில் கட்டும் பக்த கோடிகளும் இருந்திருக்க மாட்டார்கள்!

● டீ. எஸ். டீ. ராயன், நல்லத்துக்குடி.

*? கட்டண உயர்வு குறித்த கேள்விக்கு ராமதாஸ் 'ஜெவைத் தேர்ந்தெடுத்ததற்காகத் தலையில் அடித்துக் கொள்ள வேண்டும்' என்று கூறியுள்ளாரே?*

! தேர்தலில் தேர்ந்தெடுத்ததற்கு ஒரு தடவை; தேர்தலுக்கு முன் ராமதாஸ் ஆதரவு கொடுத்ததற்கு ஒரு தடவை!

● மதிகணேஷ், உசிலம்பட்டி.

*? குடும்பம் ஒரு கோவில் என்றால், அங்கே மூல விக்ரகம் யார்...? கணவனா? மனைவியா?*

! இருவருமல்ல; குழந்தைகள்!

● எம். பிச்சைக்கனி, நெமிலி.

*? காங்கிரஸில் வாழப்பாடி இணைய விரும்புவதற்கும் பா.ஜ.கவில் திருநாவுக்கரசு சேர விரும்புவதற்கும் அடிப்படைக் காரணங்கள் என்ன...?*

! வேறென்ன! பெட்டிக் கடைகளை சூப்பர் மார்க்கெட்டுகளோடு இணைத்துவிடலாம் என்ற லாப நோக்கம்தான்!

● அஜார், சென்னை - 18.

*? ஆங்கிலம் கலந்து பேசினால் தமிழ் வளரும் என்கிறார்களே சிலர், உண்மையா?...*



• அடிக்கிற கை!...

! அல்ல, சைக்கிள், பஸ், ரப்பர், கம்ப்யூட்டர் போன்ற தமிழாகிவிட்ட சொற்களை அப்படியே பயன்படுத்திக் கொண்டால் மொழி வளரும். இயல்பாகத் தமிழுக்குள் இணையும் சொற்களைக் கஷ்டப்பட்டு செயற்கையாய் மொழிபெயர்த்து அவஸ்தைப்படவேண்டாம். மற்றப்படி கமி தமிழெல்லாம் கொஞ்சம் 'ஓவர்'தான்!



• 'கை' கொடுப்பவர்

● ஆர். ஜேஸ்மின் ரமேஷ், மதுரை - 20.

*? இன்னும் ஆறு மாதங்களில் இந்திய பொருளாதாரத்தில் திருப்பம் ஏற்பட்டு வளர்ச்சி ஏற்படும் என்று மத்திய நிதியமைச்சர் சொல்வது பற்றி...?*

! ஒவ்வொரு ஆறுமாத முடிவிலும் பாடப்படும் அதே பல்லவி. ○

# நான் ஜி.எம் பேசறேன்!



• கார்த்திகை ராணி

''அஞ்சாம் வகுப்பு வரைதான் படிச்சேன். அதுக்கு மேல முடியலை. பிறகு கொத்த வேலை பாத்தேன்'' என்று, இடையிடையே அலறும் செல்ஃபோனுக்குப் பதில் சொல்லி விட்டுத் தொடர்ந்தார் ஆயம்மாள்.

''ஊர் ஊரா நாத்து நடவு, களையெடுக்க இப்படித்தான் அலைஞ்சிட்டிருந்தேன். அப்பதான் களஞ்சியம் அமைப்பைப் பற்றிக் கேள்விபட்டு உறுப்பினராக சேர்ந்தேன்.''

ஞாபகமிருக்கிறதா களஞ்சியம் பற்றி...?

பிரதமர் வாஜ்பாய் காலில் விழுந்து வணங்கி 'ஸ்த்ரீ சக்தி புரஸ்கார் விருது' வழங்கினாரே சின்னப்பிள்ளைக்கு. அதே அமைப்பைச் சேர்ந்தவர்தான் இந்த ஆயம்மாள். அப்பன்திருப்பதி எனும் ஊரைச் சேர்ந்தவர்.

''மக்கள் பணம் மக்களுக்கே பயன்பட வேண்டுங்கற நோக்கத்துலதான் இந்த அமைப்பு ஆரம்பிக்கப்பட்டது. மக்கள் ஒத்துழைப்போட மதுரை மாவட்ட, வைகை வட்டார 'களஞ்சியம்' அமைப்பின் பொது மேலாளராக என்னை நியமிச்சாங்க. பொறுப்புக்கு வந்தப்புறம் சும்மா இருக்க முடியுமா? அதான் கம்ப்யூட்டர் கத்துக்கிட்டேன். இங்கிலீஷ் கஷ்டமாத்தான் இருக்கு. முயன்றால் முடியாதது ஒன்றுமில்லையே... என்ன சொல்றீங்க?'' என்கிறார் ஆயம்மாள். இவரின் தலைமையில் 236 களஞ்சியம் அமைப்புகளும் 26 பணியாளர்களும் 3743 உறுப்பினர்களும் இருக்கிறார்கள்.

இதே அமைப்பில் சமுதாயக் கணக்காளராகப் பணியாற்றும் கார்த்திகை ராணி எம்.காம் முடித்தவர்.



• அய்யாவு

''நானேகூட சில சமயங்கள்ல கணக்கைத் தவறா போட்டுட்டு முழிப்பேன். இவங்க சர்வசாதாரணமா சரி பண்ணிடறாங்க. நான் படிச்சதை விட இவங்க கிட்ட கத்துக் கிட்டது தான் அதிகம்'' என்கிறார்.

படிப்பறிவு அற்ற இந்தக் கிராமத்தில் அனைவருக்கும் கையெழுத்துப் போடச் சொல்லிக் கொடுத்ததும் ஆயம்மாள்தான் என்கிறார்கள் இக்கிராமத்தினர்.

இவர் கணவர் அய்யாவு இதே அமைப்பில் காவலராக பணியாற்றுகிறார்.

''என் மனைவி, அதாவது பொதுமேலாளர் ரொம்ப கண்டிப்பானவங்க. நானே தப்பு செஞ்சாலும் கண்டிச்சு திருத்த வழி சொல்லுவாங்க'' என்கிறார் சிரித்துக் கொண்டே!

- தடாதகை



• ஆயம்மாள்



• சச்சிதானந்தன்



• ரனில் விக்ரமசிங்கே

# தீருமா?

தொடர்ந்து தீராமல் நீண்டு கொண்டேயிருக்கும் இலங்கைத் தமிழர் பிரச்னையை புதிய பிரதமர் ரனில் விக்ரமசிங்கே தீர்ப்பாரா என்ற கேள்வி எல்லோர் மனத்திலும் எழுந்திருக்கிறது.

"கலைகளின் மீது ஆர்வம் கொண்டவர் விக்ரமசிங்கே. தெய்வ பக்தி நிரம்பியவர். பொதுவாக இப்படிப்பட்டவர்கள் பிரச்னைகளைத் தீர்ப்பதில் அதிக கவனம் செலுத்துவார்கள்" என்கிறார் இவரது நண்பரும், அரசியல் ஆலோசகருமான திருவல்லிக்கேணியைச் சேர்ந்த ஜோதிடர் பார்த்தசாரதி.

தேர்தலில் நிற்பதா வேண்டாமா? என்பதைக் கூட இவரிடம் கேட்டுத்தான் முடிவெடுப்பாராம் விக்கிரமசிங்கே. ஈழத் தமிழர் பிரச்னையில் இவரது அணுகுமுறை எப்படி இருக்கும்? இலங்கை பிரமுகர் மறவன் புலவு சச்சிதானந்தனைக் கேட்டோம்.

"ஐக்கிய தேசியக் கட்சியின் சரித்திரத்தைப் புரட்டினால், அது ஆரம்பம் தொட்டே தமிழர்களுக்கு எதிராகச் செயல்பட்டு வந்துள்ளது என்பது புரியும். அவர்கள் ஆட்சியில் இல்லாத கால கட்டத்தில் தமிழர்களை ஒடுக்க ஆளும் மக்கள் கட்சியின் நடவடிக்கைகளுக்கு ஆதரவு அளித்து, தங்களது சிங்கள ஆதரவு நிலைப்பாட்டை உறுதிப்படுத்தியுள்ளது.

தேர்தலுக்கு முன்பு, தமிழ் ஈழப் பிரச்னையைத் தீர்க்க முன்னுரிமை தருவேன் என்றார் விக்ரமசிங்கே. ஆனால், சுய பெரும்பான்மை இல்லாத இந்தச் சூழ்நிலையில், மெஜாரிட்டி சிங்கள எதிர்ப்பை மீறி தமிழர்களுக்குச் சாதகமாக என்ன செய்யப் போகிறார்? என்பது பெரிய கேள்விக்குறியே! தனிப்பட்ட முறையில் அவர் இது விஷயமாய்ச் சரியான பாதையில் செயல்பட நினைத்தாலும், அவரைச் சுதந்திரமாகச் செயல்பட அவர் சார்ந்த ஐக்கிய தேசியக் கட்சி அனுமதிக்குமா என்பதும் கேள்விகுறிதான்.

சுருக்கமாக, தமிழர் சிங்களவர் இடைவெளியைப் பெரிதுபடுத்தினால் தான் ஆட்சியில் நீடிக்க முடியும் என்ற சூழ்நிலையில், ஈழத் தமிழர் பிரச்னையைத் தீர்க்க உருப்படியாக எதுவும் நடக்கும் என நான் நம்பவில்லை" என்கிறார் வருத்தம் தோய்ந்த குரலில்.

- மானஸா

படம் : ஜரிஸ்



# வராதே வராதே நோயே!

திரிகோணாசனம்... பெயரைக் கேட்டாலே பொருள் விளங்குமே! முக்கோண நிலையில் உடலை அமைத்துச் செய்வதால், இந்தப் பெயர்!

இடுப்பின் பின்புறத்திலிருந்து, தொடையின் பின்பக்கமாக கணுக்கால் வரையிலும் ஒரு நேர்கோடு இழுத்தது போல கன்னென்று வலி ஏற்படும். வலி தாங்க முடியாது. இது ஒரு வகை வாத ரோகம். 'ஸையாடிக் நெர்வ்' என்னும் ஒரு நரம்பில் ஏற்படும் கோளாறினால் இந்த வலி ஏற்படுகிறது. ஆங்கில மருத்துவத்தில் 'ஸையாடிகா' என்றும், ஆயுர்வேதத்தில் 'கிருத்ரஸி' என்றும் சித்த மருத்துவத்தில் 'கொருக்கு வலி நோய்' என்றும் கூறப்படும். இந்த நோய் விரைவில் தீவிரமாகிவிடும் தன்மை கொண்டது. வாத ரோகங்கள் வரவழைக்கும் இந்த வலிகள் பொதுவாக மழை, குளிர், பனிக் காலங்களில் அதிகம் காணப்படும். மூட்டுவலி, கழுத்துவலி, சில சமயங்களில் சேர்ந்து கொண்டு வேதனைப்படுத்தும். 'வந்த பிறகு பார்த்துக்கலாம்' என்ற நினைப்புடன் அசட்டையாக இராமல், திரிகோணாசனம், பார்கவ திரிகோணாசனம் போன்ற ஆசனங்களைத் தவறாது பழகி வருவது நல்லது. ஒருமுறை வாத நோயால் அவதிப்பட்டவர் கூட, அடுத்த பனிக் காலத்தில் அவ்வாறு வராமல் தடுக்கலாம்.

**திரிகோணாசனம் செய்வதால் ஏற்படும் பலன்கள்:**

1) இடுப்பின் பக்கவாட்டில் உள்ள கூடுதல் தசையைக் குறைக்கிறது.
2) இடுப்புவலி, முதுகுவலி, பக்கப் பிளவை, கண்ட மாலை கிளாண்டு வீக்கம் முதலிய நோய்களைப் போக்குகிறது.
3) கழுத்தில் உள்ள இறுக்கத்தைப் போக்கி, அதனால் ஏற்படும் தலைவலியைப் போக்குகிறது.
4) கண் பார்வை தெளிவடைகிறது.
5) உடல் எடை கணிசமாகக் குறையும்.
6) தொந்தி காணாமல் போகும்.
7) தட்டையான பாதத்தைத் திருத்தி, சாதாரண நிலைக்கு வர உதவும்.
8) இடுப்பு, கழுத்து, முழங்கை, முழங்கால், முதுகு போன்ற இடங்களில் துர்நீர் சேர்ந்து வீக்கம் காரணமாக தோன்றும் வாத நோய்கள் நீங்கும்.
9) உதரவிதானத்தைப் பலப்படுத்தி வயிற்று இறக்கம், குடல் இறக்கம் வராதபடி தடுத்துவிடும்.
10) சிறுநீரகக் கோளாறுகளைச் சரி செய்கிறது.
11) இரத்தக் குழாய்களில் அடைப்பு, இருதயவலி, இரத்த இயக்கக் கோளாறுகள் போன்றவற்றைச் சரி செய்கிறது.
12) நுரையீரல் பலவீனம், ஆஸ்துமா போன்ற நோய்களைக் குணப்படுத்துகிறது.

**செய்முறை:**

விரிப்பின் மீது கால்களை

எச்சரிக்கை: இங்கே தரப்பட்டுள்ள யோகாசன பயிற்சி முறைகள் தகவலுக்காக மட்டுமே. இவை வழிகாட்டி முறைகள் அல்ல. யோகாசன நிபுணரின் நேரடி கண்காணிப்பில்தான் பயிற்சி தொடங்க வேண்டும்.

ஒன்றரை அடி தூரம் விலக்கி வைத்து நிமிர்ந்து நிற்கவும்.

● கைகளைப் பக்கவாட்டில் பூமிக்கு இணையாக நீட்டி நிறுத்தவும்.

● வலது புறமாக பக்கவாட்டில் பிணைந்து வலது கால் முட்டியை வலது கையால் இறுகப்பற்றவும்.

● கால் முட்டியை வளைக்காது, தலையைத் திருப்பி இடது கையை உயர்த்தி தொண்ணூறு டிகிரிக்கு நேராக வைத்து கைகட்டை விரலைப் பார்க்கவும்.

● முப்பது எண்ணிக்கைகள் அப்படியே சாதாரண மூச்சில் இருக்க வேண்டும்.

● இப்போது நிமிர்ந்து எழுந்து நிற்கவும். கைகள் பக்கவாட்டில் நேராக இருக்கட்டும்.

● மாற்று ஆசனமாக இடதுபுரம் வளைந்து முப்பது எண்ணிக்கைகள் செய்ய வேண்டும். இருமுறை செய்தால் போதுமானது.

குறிப்புகள்: பழகப்பழக, கால் முட்டிக்குப் பதிலாக, முட்டிக்குக் கீழே புறங்காலைப் பிடித்துப் பழகலாம்.

கால்முட்டியை வளைக்கக் கூடாது.

## பார்சுவ கோணாசனம்:

திரிகோணாசனத்தை அடுத்து, பார்சுவ கோணாசனம் செய்வது நல்ல பலனைத் தரும். குறிப்பாக நரம்புத் தளர்ச்சி, ஆண்மை குறைவு போன்ற கோளாறுகள் குணமாகும்.

செய்முறை: விரிப்பின் மீது கால்களை மூன்று அடி இடைவெளிவிட்டு வைத்து நிற்க வேண்டும்.

● வலது கால் பாதத்தை வலது புறமாகத் திருப்பி வைக்கவும்.

● வலது கால் முட்டியை முன்புறமாக நீட்டி வளைத்து வலது புறங்காலை தொண்ணூறு டிகிரிக்கு அதாவது வலது முட்டிக்குக் கீழ் காலை செங்குத்தாக வைக்க வேண்டும்.

● வலது உள்ளங்கையை வலது பாதத்துக்குப் பக்கத்தில் வெளியே ஊன்றி வைத்து, இடது கையை மடிக்காமல் தலைக்கு மேலே கொண்டு வந்து, காதை ஒட்டியவாறு வைத்து, எதிரே உள்ள பொருளை நேராகப் பார்க்க வேண்டும். சாதாரணமூச்சில் 30 எண்ணிக்கை இருக்கவும்.

# புதுயுக யோகா -12

## டாக்டர் ஏ.எஸ். அசோக்குமார்

● எழுந்து நிமிர்ந்து நின்று வலது கால் பாதத்தை முன்போல் திருப்பி வைக்கவும். அதுபோல இடது புறமாக 30 எண்ணிக்கை செய்து முடிக்க வேண்டும். இரண்டு தடவை செய்யுங்கள்.

குறிப்பு:

1) பக்கவாட்டில் உள்ளங்கையை ஊன்ற முடியாதவர்கள் விரல் நுனிகளைத் தரை மீது வைத்துப் பழகலாம்.

2) விரிப்பின் மீது தனியாகச் செய்ய முடியாதவர்கள் சுவரை ஒட்டியவாறு நின்று பழகலாம். சில வாரப் பயிற்சிக்குப் பிறகு தனியே நின்று பழகலாம்.

3) கையை முன்புறமாக வைத்துச் செய்யக் கூடாது.

முனக வைக்கும் மூட்டுவலிக்கு முடிவு கட்டும். கோமுகாசனம் பற்றி தெரிந்து கொள்ள ஆவலா? அடுத்த இதழில் சொல்லிவிட்டால் போச்சு!

படங்கள்: ஸ்ரீஹரி

# செ. ஏக்நாத் ராஜ்

பயலுக்குக் காய்ச்சல். உடம்பு தகதகன்னு கொதிக்கு. பாய் டாக்டர் வந்து ரெண்டு ஊசிப் போட்டும் கேக்கலை. போர்வையை இழுத்து மூடிட்டுப் படுத்தவன்தான். மூணு நாளாச்சு. அம்பா சமுத்திரம் தர்மாஸ்பத்திரிக்குச் சாயந்தரமா கூட்டிட்டுப் போவணும்னு வீட்ல பேசிகிட்டாங்க.

"அங்க இங்கன்னு அலைஞ்சா காய்ச்ச வராம என்ன செய்யும் எடுப்பெடுத்தப் பயலுக்கு? யார் சொல்லையாவது கேக்கணும். செவ்வாக்கிழமையும் அதுவுமா சாமத்துல ஒரு மணிக்கு வந்து படுக்காம். அப்ப காய்ச்ச வராம என்ன செய்யும்"னு அவ(ன்) அம்மா ஏசிட்டே இருந்துச்சு.

அந்தப் பய எங்க போனான்னு எனக்குத்தான தெரியும்.



அங்க போனதால கண்டா காச்ச வந்திருக்குமோ? அப்படின்னா எனக்கும் வந்திருக்கணுமே.

செவ்வாக்கெழம அன்னிக்குக் கருக்கல்ல பூவங்குறிச்சில சொடலைக்குப் பூடம் (பீடம்) கொடுக்கணும்னு கம்பர் தாத்தா புறப்பட்டுட்டு இருந்தாரு. செரி, அவங்க கூட போவுமேன்னு நான் பெறப்டேன். இவனும் வாரம்னான். ஏல வேண்டாம். உங்கம்மா தேடுவான்னு சொன்னேன். கேக்க மாட்டேன்னுட்டான். எங்கூடதான் வருவேன்னு நிக்கான். சரி வான்னு கூட்டிட்டுப் போய்ட்டேன்.

ரயில்வே கேட் தாண்டி ரெண்டு சைக்கில்ல போனோம். நானும் தாத்தாவும் ஒரு சைக்கில்ல. தாத்தா கையாள் பாட்டையாவும் அந்தப் பயலும் இன்னொரு சைக்கில்ல. பறையாங்குளத்தைத் தாண்டிப் போகும்போது குளத்துல நிறைய தண்ணி இருந்ததைப் பாத்ததும், அந்தப் பய 'ஏல குளிச்சுட்டு போவுமால'ன்னான். எனக்குச் 'சுள்'ளுனு கோவம் வந்துட்டு. 'கூறுகெட்ட பயல! எங்க போய்ட்டிருக்கோம். என்ன கேள்வி கேக்கன்னு அதட்டுனேன். 'ஈ'ன்னு இளிச்சான். பெறவு பேசவே இல்லை.

கருத்தப்பிள்ளையூர் ரோட்டுக்கு மேக்க இருந்துச்சு சொடலை கோயிலு. நாங்க வாரது தெரிஞ்சு அந்த ஊர்க்காரங்க நிறையபேர் அங்கன நின்னாங்க. எல்லாரும் திருநீறை நெத்தி நெறைய கமகமன்னு பூசிட்டு வெள்ளையும் சுள்ளையுமா நின்னாங்க.

ஒரு சாமி கொண்டாடி மட்டும்,

"உன்னை மதியாண்டி

என்னையும் மதியாண்டி
சுடரில் தோன்றினாண்டி
சொடலையாக வந்தாண்டி
கோமணாண்டி கூத்தாண்டி
கோபக்கார மாயாண்டி!''னு பாட்டுப்பாடிக் கும்பிட்டுட்டு இருந்தாரு.

எங்களுக்குப் பலமான வரவேற்பு. முன்னபின்ன தெரியாதவங்களெல்லாம் நாங்களும் கம்பரு வூட்டுக்காரங்கதான்னு நெனச்சி நல்ல மரியாதக் குடுத்தாங்க. ரெண்டு கையையும் கட்டிட்டு 'வாங்க வாங்க'ன்னு எங்களையும் அவங்க கூப்ட்டு வரவேற்றதைப் பாத்ததும் எனக்குப் புல்லரிச்சுப் போயிட்டு.



சைக்கிளை ஸ்டாண்டு போட்டுட்டு பூப்பெட்டியோட இறங்குனாரு கம்பரு தாத்தா. பெட்டிக்குள்ள பூசை சாமான்லாம் இருந்தது. அதக் கொண்டு சொடலை செலை கிட்ட வச்சுட்டு சாமியை கும்புட்டாரு. ''ஏல கும்புடுங்களே'ன்னு எங்களைப் பாத்தும் சொன்னாரு. நாங்களும் கும்புட்டோம்.

சொடலை கோயிலு சின்ன தாதான் இருந்தது. ஒருத்தர் மட்டும்தான் உள்ள நிக்க முடியும். கொஞ்சம் அப்படியும் இப்படியுமா ரெண்டு பேரு நிக்கலாம். நானும் அந்தப் பயலும் வெளிய வாசல் பக்கத்தில நின்னுகிட்டோம். எங்களுக்குப் பின்னாலதான் எல்லாரும் நின்னுட்டிருந்தாங்க. 'ஏல பூவ எடு, குங்குமத்தை எடு'ன்னு தாத்தா எங்ககிட்டதான் கேட்டாரு. நாங்க கொடுப்போம்.

கொஞ்ச நேரம் கோயில் வெளி வாசலை துணியைப் போட்டு மறைச்சுட்டாரு தாத்தா. எல்லாரும் கோயிலை விட்டு கொஞ்சம் தள்ளி நின்னுட்டாங்க. நாங்களும் தள்ளி போகலாம்னு நெனச்சோம். தாத்தா வேண்டாம்னுட்டாரு.

பெறவு தாத்தா என்ன செய்தாருன்னு மெதுவா பாத்தோம். செலையில ஒரு நூலை கட்டி அந்த நூலை தரையிலிருந்த ஒரு சொம்புக்குள்ள வுட்டாரு. நூலைப் போய் ஏன் இதுல விட்டாருன்னு தெரியலை. பெறவு கண்ணை மூடிட்டு என்னமோ

மந்திரம் சொன்னாரு.

திடீர்னு பெறத்தாலயிருந்து சப்தம். என்னன்னு பாத்தா ஒருத்தருக்கு அருள் வந்து "ஏய்... ஏய்..."னு சாமி ஆடுதாரு. பல்லை கடிச்சுக்கிட்டு அவரு அங்கயும் இங்கயும் தடுமாற மாதிரி இருக்கதைப் பாக்க பயமா இருந்துச்சி. அவருதான் இந்தக் கோயில்ல சொடலைக்கு ஆடுதவராம். கொஞ்ச நேரத்துல அவரு போட்ட சப்தம் நின்னு போச்சு.

தாத்தாவைப் பார்த்தேன். அவரு கண்ணை மூடிட்டு என்னமோ முணுமுணுத்துட்டே இருந்தாரு. அந்த நூலைப் பாத்தேன். கொஞ்ச நேரத்துல ஆத்துல போய் கொடத்துல தண்ணி எடுத்துட்டு பாட்டையா வந்துட்டாம். தண்ணிய கோயிலுக்குள்ள வச்சுட்டு அவனும் எங்ககூட நின்னுகிட்டாம். நான் மெதுவா குசுகுசுன்னு கேட்டேன். அந்த நூலு எதுக்குன்னு.

'சாமி அருள் அந்த நூலோடி சொம்புக்குள்ள எறங்கும். இறங்குனதும் சொம்பை மூடி எங்க பூடம் கொடுக்கணுமோ அங்க கொண்டு போய் பூசை பண்ணி, இந்த நூல்லயிருந்து உயிருட்டணும் சாமிக்கு. அதுக்குப் பெறவு புது பூடத்துக்குச் சாமி அருள் ஏறிரும்னு சொன்னான். நான் 'ஆ'னு கேட்டுட்டே இருந்தேன். இந்தப் பய, நூலோடி எப்படிண்ணே சாமி எறங்கும்?'னு கேட்டான். பாட்டையா அண்ணனுக்குக் கோவம் வந்துட்டு. இந்த மாதிரி எடக்கு மடக்கா கேள்வி கேட்ட... சாமி ஏதாவது பண்ணிரும் ஆமா. அதுவும் சொடலை பொல்லாத சொடலையாக்கும்னு சொன்னான்.

நாங்க இங்க குசுகுசுன்னு பேசிக்கிட்டிருக்கும் போதே தாத்தா சொம்பைத் தூக்கிட்டு வந்துட்டாரு. அங்க, நெடு நெடுன்னு பனை மாதிரி வளந்து இருந்த ஒருத்தர்ட்ட மெதுவா என்னமோ சொன்னாரு. அதாவது சொம்பைத் தூக்கிட்டுப் பூடம் கொடுக்கற இடத்துக்குப் போவணும், எதிர்ல யாரும் வந்துராம பாக்கச் சொல்லுன்னு சொன்னதா நான் பெறவு தெரிஞ்சுகிட்டேன்.

தாத்தா அந்தச் சொம்பை அடைச்சுத் தூக்கிட்டு வந்தார். எங்கிட்டயும் அந்தப் பயகிட்டயும் ரெண்டு பைய கொடுத்தாரு. கூடவே போனோம்.

தூரத்துல ரெண்டு பேரு பேசிட்டே வந்தாங்க, அந்த ஊர்க்காரங்க. தாத்தாவைப் பாத்ததும் வெஷயம் புரிஞ்சுபோய் ஒதுங்கி நின்னுக்கிட்டாங்க. இதேபோலதான் வயலுக்குப் போய்ட்டு வந்த பொம்பளைகளும்.

வயக்காட்டுக்கு நடுவுல சின்னதா மண் மேடு. அதுல சமதளமா மணல்போட்டு அலங்காரம் பண்ணி வச்சிருந்தாங்க. ஒருத்தரு அந்த இடத்துல ஒரு கோழியப் புடிச்சுட்டு நின்னாரு. அவரு பக்கத்துல ரெண்டு மூணு பேர் நின்னாங்க. கீழ கரண்டி சட்டி, மணல், சிமெண்ட்டு கொழப்பி பூசத்துக்கு ரெடியா இருந்துச்சு. யாரும் ஒரு சப்தமும் போடலை. கப்சிப்புனு இருந்தது. அங்க போனதும் தாத்தா சொம்பை ஒரு இடத்துல வச்சாரு. அந்த இடத்துல கொஞ்சம் குழி தோண்டியிருந்தது. அதுக்கு முன்னால இருந்த சொம்பைப் பாத்து கைய ரெண்டையும் ஒண்ணாக்கித் தாத்தா மந்திரம் சொல்லிக் கும்புட்டாரு. பெறவு சொடலைக்கு ஆடுதவரும் அங்க நின்ன அந்த வூர்க்காரங்களும் கும்புட்டாங்க.

தாத்தா பெறவு என்னமோ சொன்னாரு. ஒடனே ரெண்டு பேர் வந்து சொம்பு இருந்த இடத்துக்குப் பக்கத்துல பெரிசா குழி தோண்டுனாங்க. குழி தோண்டுன பெறவு அதுக்குள்ள சதுரமா செங்கல்லை வச்சு கட்டுனாங்க. பூமிக்கு அடியிலயிருந்து தரைக்குச் சமதளத்துக்குக் கட்டி முடிச்சதும் ஒரு சிலாப்பைத் தூக்கிட்டு வந்தாங்க. அத வச்சிட்டு அவங்க ரெண்டு பேரும் தாத்தா மூஞ்சியப் பாத்தாங்க. தாத்தா அவங்களைத் தூரப் போவச் சொல்லிட்டு இலையையும், திருநீறையும் கொஞ்சமா போட்டாரு.

"ஆனாலும் அந்த டாக்டர் ரொம்ப சிடுமூஞ்சி..."

"எப்படி?"

"மாத்திரையை எப்படி டாக்டர் சாப்பிடணும்னு கேட்டதுக்கு, 'நான் சாப்பிட்டுக் காட்டணுமா'ன்னு கேக்கறாரே!"

- சீர்காழி ரேவதி



பின்னால திரும்பிப் பாத்தாரு.

கோழிய புடிச்சிட்டு நின்னவன் அதக் கொண்டு வந்தான். தாத்தா அத வாங்கி கால்ல கட்டியிருந்த கயிறை அவுத்துவிட்டு கோழியப் பாத்தாரு. அது பறக்கதுக்கு முயற்சிப் பண்ணுச்சு. காலைக் கெட்டியாப் புடிச்சிட்டாரு. ஆட்களைக் கண்டு மிரண்டு கூவிட்டே இருந்தது.

சதுரமா செங்கல் வச்சிக் கட்டுன குழியில தாத்தா கோழிய வுட்டாரு. அது பறக்கப் பாத்துது. ஆனா அந்த ஆளு கோழிய உள்ள வச்சு அதுக்கு மேல சிலாப்பை வச்சு மூடிட்டான். அதுக்கு மேல பூடத்தைக் கட்ட ஆரம்பிச்சுட்டாங்க. உள்ள இருந்து கோழி றெக்கையை அடிக்க, சப்தம் மட்டும் 'டப்டப்'னு வந்தது. உயிர் போவப் போற வேதனைல அடிக்க சப்தம். துடிதுடின்னு துடிச்சு செத்துப் போயிரும் கோழி.

இந்தப் பய என்னயப் பாத்தான் ஒரு மாதிரி. இந்த நேரத்துல எதையும் கேட்டுரப் போறான்னு ஒத்தை விரலை உதட்டு மேல வச்சு 'மூச்'சுனு சைகை செஞ்சேன் அவனுக்கு.

கொஞ்ச நேரத்துல பூடம் ரெடியாயிட்டு. சிமெண்ட் வச்சு பூசி விடதுதான் பாக்கி. தாத்தா திரும்பவும் பூசைய ஆரம்பிச்சுட்டாரு. நான் மணியடிச்சேன். எல்லாரும் பய பக்தியோட ஒடுக்கமா நின்னாங்க. பூசை முடிஞ்சதும் தாத்தா சொடலைக்கு ஆடுதவருட்ட என்னமோ சொன்னாரு. ஒடனே அவரு வேட்டி மடிப்புல இருந்து அவுத்து ரூவா கொடுத்தாரு. பழம் தேங்காய், அரிசி எல்லாத்தையும் தாம்பாளத்துல வச்சி எங்க எல்லாருக்கும் கொடுத்தாங்க. நாங்க வாங்கி, பழத்தை மட்டும் எடுத்து தின்னுட்டு மத்ததைத் தாத்தாகிட்ட கொடுத்துட்டோம். அத வீட்டுக்குக் கொண்டுட்டுப் போனா, 'எங்கல போனே'ன்னு கேட்டு இம்சை பண்ணுவாங்க. தேவையா?

**மை**யிருட்டுல வீட்டுக்குக் வந்துட்டோம். தாத்தா வீட்டுக்கு எதிர்லதான் எங்க ரெண்டு பேரு வீடும். வீட்டுக்குப் போறோம்னு தாத்தாட்ட சொல்லிட்டு, எங்க ரெண்டுபேர் வீட்டுக்கும் எதிர்ல இருக்க நார்த்தங்காய் மரத்துக்குக் கீழ் உட்காந்தோம்.

அந்தப் பய முகமே மாறிப் போயிருந்துச்சு. என்னல இந்த முழிமுழிக்கன்னு கேட்டேன்.

"ஏல அந்தக் கோழி என்னல ஆயிருக்கும்"னு கேட்டான்.

செத்துருக்கும்னேன்.

"ஐயோ... பாவம்ல... எனக்கு ஒரு மாதிரியா இருக்கு. துள்ள துடிக்க அது எப்படி செத்துருக்கும். மூச்சுவிட முடியாம எகிறி எகிறி முட்டி, மோதி என்ன துடி அது..."ன்னான்.

"ஏல.. ஒனக்கு என்னாச்சு. கோழிய கறி வச்சா மட்டும் இங்கலையாலே... இப்ப மட்டும் என்னவாம்"னேன்.

"இப்பதாம் உயிர்னா என்னன்னு தெரியுதுல... எனக்குப் பயமா இருக்கு"ன்னான்.

"போல போக்கத்தப் பயல. இதுக்குலாம் பயந்தா ஒண்ணும் செய்ய முடியாது. இதுக்கு முன்ன காலத்துலயெல்லாம், மனுஷன உசுரோட உள்ள புதைச்சு பூடம் கொடுத்திருக்காங்களாம் தெரியுமா?"ன்னேன்.

"அப்பன்னா இப்ப இருக்க ஒவ்வொரு சாமி பூடத்துக்கும் அடியில பெணம் இருக்குன்னு சொல்லு"ன்னான்.

"ஏல... ஒனக்கு என்னாச்சு. வேண்டாத தையெல்லாம் யோசிக்காதல. நீ போய் இப்ப தூங்கு. நாளக்கிப் பேசிக்கிடுவோம்"னு சொல்லிட்டுக் கௌம்பிட்டேன். பாவம்ல அந்தக் கோழின்னு சொல்லிட்டே இருந்தான். அவன் மொகமே மாறிப் போய் இருந்தது.

காலைல வெளையாட அவனைக் கூப்பிடப் போனா, அவன் அம்மா அவனுக்குக் காய்ச்சல்னு சொன்னா. அவனைப் போய்ப் பாத்தேன். போர்வையை இழுத்து மூடிட்டுப் படுத்திருந்தான். அவன் அம்மா, 'நேத்து எங்க போயிருந்தான் இவன்?'னு எங்கிட்ட கேட்டா. நான் சொல்லுவனா? சொன்னா என் தோலையில்லா உரிச்சிருவா.



"எனக்குத் தூக்கத்துல நடக்கற வியாதி இருக்கு டாக்டர்."
"இருக்கட்டும். அதெல்லாம் சரி? அதை ராத்திரி ரெண்டு மணிக்கு, தூக்கத்திலேயே நடந்து வந்து, வீட்டுக் கதவைத் தட்டியா சொல்லணும்?"
- தஞ்சை தாமு



# சிவகாமியின் சபதம்

முப்பத்து ஒன்பதாம் அத்தியாயம்

## கமலியின் மனோரதம்

விவரிக்க முடியாத இன்பத்தையும் வேதனையையும் ஒருங்கே தந்த, மேற்கூறிய நிழல் நினைவுகளைப் பொறுக்க முடியாமல், சிவகாமி சாளர மாடத்திலிருந்து எழுந்தாள். அறையின் பின்புறக் கதவை ஓசைப் படாமல் மெதுவாய்த் திறந்துகொண்டு பூந்தோட்டத்துக்குள் பிரவேசித்தாள். அப்போது இரவின் மூன்றாம் ஜாமம் நடந்துகொண்டிருந்தது. பிறைச் சந்திரன் விரித்த இளம் நிலவின் மோகன ஒளியில் அந்தப் பூந்தோட்டம் கனவு உலகத்தில் காணும் ஒரு காட்சி போல் தென்பட்டது.

பூந்தோட்டத்தில் உலாவி வர எண்ணிப் புறப்பட்ட சிவகாமி, வீட்டுச் சுவரோரமாகச் சற்று தூரம் சென்றபோது, பேச்சுக்குரல் கேட்டுத் திடுக்கிட்டு நின்றாள். கமலியும் கண்ணபிரானும்தான் பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் இருந்த அறையின் பின்புறப் பலகணி வழியாக அவர்களுடைய பேச்சு, தெளிவாகக் கேட்டது. அந்தப் பக்கம் போகாமல் திரும்பிவிட வேண்டுமென்று எண்ணிய சிவகாமியின் செவியில், "மாமல்லர்", "குமார சக்கரவர்த்தி" என்ற வார்த்தைகள் விழுந்தன. பிறகு அவளுடைய கால்கள் திரும்பிச் செல்ல மறுத்துவிட்டன. பலகணியின் அருகில் சுவர் ஓரமாக நின்று, அவர்கள் பேசுவதைக் கேட்டாள்.

"மாமல்லருக்குப் பெண் கொடுக்கிறேன் என்று பாண்டிய மன்னர் தூது அனுப்பியதில் என்ன ஆச்சரியம்? பூலோகத்திலுள்ள ராஜ ராஜாக்கள் எல்லாம் நான் முந்தி, நீ முந்தி என்று அவருக்குப் பெண் கொடுக்கப் போட்டியிட மாட்டார்களா?" என்றாள் கமலி.

"மாமல்லருக்குச் சீக்கிரத்தில் கல்யாணம் செய்து வைக்க வேண்டுமென்று

**அமரர் கல்கி**

மகாராணிக்கு ஆசை. மூன்று தேசத்து ராஜாக்களுக்குத் திருமணத் தூது அனுப்ப வேண்டுமென்று ஏற்பாடு செய்திருந்தார். அதற்குள்ளே இந்த யுத்தம் வந்துவிட்டதால் அது தடைப்பட்டுப் போயிற்று. இப்போது பாண்டிய ராஜாவே தூது அனுப்பியிருப்பதில் மகாராணிக்கு அசாத்திய சந்தோஷம்!'' என்றான் கண்ணபிரான்.

''சரி, அப்புறம் என்ன நடந்தது?'' என்று கமலி கேட்டாள்.

''அரண்மனையில் மாமல்லரை விட்டேன். உடனே, தாயாருக்கும் பிள்ளைக்கும் சண்டை ஆரம்பமாகிவிட்டது...!''

''சண்டையா! எதற்காக?''

''குமார சக்கரவர்த்தியிடம் 'கல்யாணம்' என்று யாராவது சொன்னாலே, அவருக்குப் பிரமாதமான கோபம் வந்துவிடுகிறது. 'இதற்குத்தானா இவ்வளவு அவசரமாகக் கூப்பிட்டு அனுப்பினீர்கள்! போர்க்களத்திலிருந்துதான் ஏதோ செய்தி வந்திருக்கிறதாக்கும் என்று நினைத்தல்லவா ஓடி வந்தேன்?' என்று அவர் மகாராணியிடம் கோபமாகப் பேசினார்...! கமலி! உனக்கு ஒரு இரகசியம் சொல்லட்டுமா? மிகவும் முக்கியமான இரகசியம், கேட்டால் பிரமித்துப் போவாய்!'' என்றான் கண்ணன்.

''பெண் பிள்ளைகளிடம் இரகசியம் சொல்லக்கூடாது என்று உனக்குத் தெரியாதா கண்ணா?'' என்றாள் கமலி.

''ஓஹோ! நீ பெண் பிள்ளையா? மறந்து போய்விட்டேன்!'' என்று கண்ணன் நகைத்துக்கொண்டே கூறினான்.

''ஆமாம்! நீ ஆண்பிள்ளை என்பதையும் மறந்துபோய் விடுவாய்! யுத்தம் வருகிறதல்லவா?''

''யுத்தம் வரட்டும்! அப்போது தெரிகிறது, யார் ஆண்பிள்ளை, யார் பெண் பிள்ளையென்று! நீ என் காலில் விழுந்து, 'கண்ணா! யுத்தத்துக்குப் போகாதே!' என்று கதறப் போகிறாய், நான் உன்னை உதறித் தள்ளிவிட்டுப் போகப் போகிறேன்...''

''அப்படியா நினைத்துக்கொண்டிருக்கிறாய் உன் மனத்தில்? யுத்தம் கிட்டி வரும்போது நீ போகாவிட்டால் நானே உன்னைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளமாட்டேனா...? கல்யாணம் ஆன பிறகு நீ இப்படிப் பயங்கொள்ளியாகப் போனதைப் பார்த்துவிட்டுத்தான் குமாரச் சக்கரவர்த்தி 'கல்யாணம்' என்றாலே எரிந்து விழுகிறார் போலிருக்கிறது!''

''இப்படித்தானே நீ எண்ணிக் கொண்டிருக்கிறாய்? யுத்தம் வந்திருக்கிறபடியால் குமாரச் சக்கரவர்த்தி கல்யாணம் வேண்டாம் என்கிறார் என்றுதான் எல்லோருமே நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். பிசகு, கமலி, பெரும் பிசகு!''

''எது பிசகு, கண்ணா?''

''எல்லாரும் நினைத்துக்கொண்டிருப்பது பிசகு. மாமல்லர் கல்யாணப் பேச்சை வெறுப்பதற்கு வேறு காரணம் இருக்கிறது. அது பெரிய இரகசியம். அதிலும் உன் தங்கச்சி சிவகாமியைப் பற்றிய இரகசியம், கமலி!''

''என்ன? என்ன? என் தங்கச்சியைப் பற்றி எனக்குத் தெரியாத இரகசியம் என்ன இருக்கிறது? ஏதாவது இசைகேடாகச் சொன்னாயோ, பார்த்துக்கொள்!''

''இசைகேடு ஒன்றுமில்லை; பெருமையான விஷயந்தான்! - சொன்னால், எனக்கு என்ன தருகிறாய்?''

''சொல்லிவிட்டுக் கேள்! பொருளைப் பார்த்து விட்டல்லவா விலையைத் தீர்மானிக்க வேண்டும்?'' என்றாள் கமலி.

''அப்புறம் ஏமாற்றக்கூடாது, தெரியுமா? பல்லவ சாம்ராஜ்யத்தின் குமார சக்கரவர்த்தி, - வீரத்தில் அர்ஜுனனையும், அழகில் மன்மதனையும், ரதம் ஓட்டுவதில் கண்ணபிரானையும் ஒத்தவரான மாமல்ல நரசிம்மர், - உன்னுடைய தங்கச்சி சிவகாமியின் மேல் காதல் கொண்டிருக்கிறார், கமலி!''

''ஆ!'' என்னும் சத்தம் மட்டுந்தான் கமலியின் வாயிலிருந்து வந்தது. அவள் ஆச்சரியத்தினால் திகைத்துவிட்டாள்.

வெளியிலிருந்து கேட்டுக்கொண்டிருந்த சிவகாமியின் நெஞ்சில் அந்த 'ஆ!' சத்தமானது கூரிய அம்பைப்போல் புகுந்தது. தன்னிடம் இவ்வளவு ஆசையும் நம்பிக்கையும் வைத்துள்ள அருமைத் தோழியிடம் தனது அந்தரங்கத்தை வெளியிடாமல் இத்தனை நாளும் ஒளித்து வைத்திருந்தது பற்றி அவள் வெட்கினாள். அறைக்குள்ளே

சம்பாஷணை மேலும் தொடர்ந்து நடந்தது.

"கமலி! நான் சொன்ன செய்தி உனக்கு அதிசயமாயிருக்கிறதல்லவா?'' என்று கண்ணபிரான் கேட்டான்.

"அதிசயம் என்ன? நம்முடைய குமார சக்கரவர்த்தி புத்திசாலி என்றுதான் அடிக்கடி நான் சொல்லியிருக்கிறேனே? அதனால்தான் அவருக்கு என் தங்கச்சியின் மேல் மனம் சென்றது" என்று கமலி சமத்காரமாக விடை சொன்னாள்.

''ஓஹோ! அப்படியா? நீயும் உன் தங்கையும் சேர்ந்து பேசிக்கொண்டுதான் இந்த வேலை செய்தீர்கள் போலிருக்கிறது! உன்னுடைய வலையில் என்னை நீ போட்டுக்கொண்டாய்! உன் தங்கச்சி மாமல்லரையே வலை போட்டுப் பிடித்து விட்டாள்!"

"என்ன சொன்னாய்?'' என்று கமலி கம்பீரமாகக் கேட்டுவிட்டு மேலும் சொல்லம்புகளைப் போட்டாள் - "நானா உன்னைத் தேடி வந்து என்னுடைய வலையில் போட்டுக்கொண்டேன்? நானா வீட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம் உன்னைத் தொடர்ந்து வந்து கையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, 'கண்ணே! பெண்ணே! நீ கருணை செய்யாவிட்டால் நான் உயிரை விடுவேன்!' என்று கதறினேன்? நானா 'என்னைக் கல்யாணம் செய்துகொள்' என்று கெஞ்சினேன்...?"

"இல்லை, கமலி, இல்லை! நீ உன்னுடைய கண்ணாகிற வலையை வெறுமனே விளையாட்டுக்காக விரித்தாய்! அதிலே நானாக ஓடி வந்துதான் அகப்பட்டுக் கொண்டேன்!"

''நம்முடைய கதை இருக்கட்டும். மாமல்லருக்கும் என் தங்கைக்கும் நேசம் என்கிற விஷயம் உனக்கு எப்படித் தெரிந்தது? அதைச் சொல்லு!" என்றாள் கமலி.

"ஆ! பாம்பின் கால் பாம்புக்குத் தெரியாதா, என்ன? கள்ளனுக்குத் தெரியாதா கள்ளனின் சமாசாரம்? நான் உன்னை உன் தகப்பனார் வீட்டில் அந்தக் காலத்தில் என்னமாய்ப் பார்த்தேன்! ஞாபகம் இருக்கிறதா? அம்மாதிரியே உன் தங்கையை இப்போது மாமல்லர் ஆர்வத்தோடு பார்க்கிறார்!"

"இவ்வளவுதானா?"

"இன்னும் என்ன வேண்டும்? நாவுக்கரசர் மடத்தில் அபிநயம் பிடித்தானதும் உன் தங்கை மூர்ச்சையாகி விழுந்து விட்டாள் என்று சொன்னேனல்லவா? உடனே மாமல்லர் ஓடிவந்து சிவகாமியைத் தூக்கி ஆயனர் மடியின் மீது வைத்தார். கமலி, அப்போது அவருடைய கைகளும் தேகமும் எப்படிப் பதறின தெரியுமா? இதுவரையில் எனக்குக் கொஞ்சம் சந்தேகமாயிருந்தது. இன்றைக்குத்தான் சர்வ நிச்சயமாயிற்று."



இதைக் கேட்டுக் கொண்டிருந்த சிவகாமியின் தேகமெல்லாம் சிலிர்த்தது. விம்மலுடன் அழுகை வரும் போலிருந்தது. சமாளித்துக் கொண்டு மேலும் நடந்த சம்பாஷணையைக் கேட்டாள்.

"இவ்வளவு கூர்மையாய்க் கவனித்தாயே; நீ ரொம்பப் புத்திசாலிதான்! மாமல்லரும் பாக்கியசாலிதான்!" என்றாள் கமலி.

''மாமல்லர் பாக்கியசாலி என்றா சொல்கிறாய்? இதனால் ஏற்படப் போகிற சங்கடங்களையெல்லாம் நினைத்தால்..."

"சங்கடம் என்ன வந்தது?"

"குமார சக்கரவர்த்தியின் கல்யாணம் என்றால், நம்முடைய கல்யாணத்தைப் போல் என்று நினைத்துக் கொண்டாயா? எத்தனை எத்தனையோ யோசனைகள் செய்வார்கள்..."

"கண்ணா! என் தங்கையை மட்டும் சாமானியமான பெண் என்று நினைத்தாயா? தமயந்தியை மணந்துகொள்ளத் தேவலோகத்திலிருந்து தேவர்கள் வந்தது போல் சிவகாமியைத் தேடிக்கொண்டு வர மாட்டார்களா? ஏதோ தமயந்தி மனம் வைத்து நள மகாராஜனுக்கு மாலையிட்டாள்...!"

"ஆனால் தமயந்தி அரண்மனையில் பிறந்த ராஜகுமாரியாச்சே, கமலி!"

''என் தங்கை ஆயிரம் ராஜகுமாரிகளுக்கு இணையாவாள். கண்ணா! நீ வேணுமானால்பார்! என்னுடைய மனோரதம் ஒருநாள் கட்டாயம் நிறைவேறப் போகிறது!"

"அது என்ன மனோரதம் கமலி?"

"இந்த யுத்தமெல்லாம் முடிந்த பிறகு, மாமல்லருக்கு மகுடாபிஷேகம் நடக்கப் போகிறது. தங்க ரதத்தில், நவரத்ன



சிங்காசனத்தில்
அமர்ந்து நரசிம்ம சக்கர
வர்த்தி இராஜ வீதிகளில்
பவனி வருகிறார். அவருக்குப் பக்
கத்தில், தேவேந்திரனுக்கு அருகில்
இந்திராணியைப் போல் என் தங்கை சிவ
காமி அமர்ந்திருக்கிறாள். தங்கரதத்தின்
முன் தட்டில் நீ ஜம் என்று உட்கார்ந்து
ரதத்தை ஓட்டிக்கொண்டு வருகிறாய்.
நான் அரண்மனைக் கோபுர வாசலில்
மேல் மாடத்தில் நின்று கொண்டிருக்
கிறேன். ரதம் அரண்மனை வாசலில்
வந்து நின்றதும் கூடை கூடையாக மல்
லிகை மலர்
களையும் சண்பகப்
பூக்களையும் அவர்கள் மேல்
கொட்டுகிறேன். நடுவில் உன் தலையிலும்
ஒரு கூடைப் பூவைக் கவிழ்க்கிறேன்.
இப்படி நடக்க வேண்டும் என்பதுதான்
என் மனோரதம், கண்ணா!"

"கமலி, உன் மனோரதம் நிறைவேறி
னால் எனக்கும் அளவில்லாத சந்தோஷந்

தான்'' என்றான் கண்ணன்.

சிவகாமி திரும்பித் தன்னுடைய அறைக்குள்ளே சென்று படுக்கையில் படுத்துக்கொண்டாள். இருதயத்தின் அடிவாரத்திலிருந்து பொங்கி வந்த விம்மலையும் அழுகையையும் ஆனமட்டும் முயன்றும் அவளால் அடக்கிக் கொள்ள முடியவில்லை.



ரவு நாலாவது ஜாமத்தில், விழிப்புமில்லாமல் நித்திரையுமில்லாமல் அரைத் தூக்க நிலையில் சிவகாமி படுக்கையில் புரண்டு கொண்டிருந்தபோது, முன்னர் அவள் மனக் கண்முன் தோன்றிய நிழல் தோற்றங்கள் உருவம் எடுக்க ஆரம்பித்தன.

ஒரு செண்பக மரத்தின் கிளையில் இரண்டு புறாக்கள் உட்கார்ந்து ஒன்றோடொன்று கொஞ்சி விளையாடிக் கொண்டிருக்கின்றன. திடீரென்று சுற்றியிருந்த மரங்கள் எல்லாம் தீப்பட்டு எரியத் தொடங்குகின்றன. ஆண் புறாவானது பெண் புறாவைப் பார்த்து, "நீ இங்கேயே இரு; நான் திரும்பி வந்து உன்னைக் காப்பாற்றுகிறேன்!'' என்று சொல்லிவிட்டுப் பறந்து செல்கிறது. அது போன வழியையே பெண் புறா பார்த்துக் கொண்டிருக்கிறது. தீயோ நாலு புறமும் நெருங்கி வந்து கொண்டிருக்கிறது. ஆண் புறா திரும்ப முடியாதபடி பெண் புறாவை நாலாபுறமும் புகை வந்து சூழ்ந்து விடுகிறது. அந்த நேரத்தில் அவ்விதம் புகையினால் சூழப்பட்டிருப்பது பெண் புறா அல்ல - தானே என்று சிவகாமி பிரமையுறுகிறாள்.

கற்பனை உலகக்காட்சி மாறுகிறது. மல்லிகைத் தோட்டத்தில் ஆணும் பெண்ணுமான ஒரு கலைமானும் ஒரு புள்ளிமானும் துள்ளி விளையாடிக் கொண்டிருக்கின்றன. விளையாட்டின் இடையே புள்ளிமானானது மல்லிகைப் புதருக்கு அருகில் மறைந்து நிற்கிறது. மல்லிகைப் புதரில் பூத்துச் சிரித்திருக்க வெள்ளி மலர்களுக்கும், புள்ளி மானின் மீது அள்ளித் தெளித்திருந்த வெள்ளிப் பொருட்களுக்கும் வித்தியாசம் தெரியாமல் கலைமான் புள்ளி மானைத் தாண்டிக்கொண்டு அப்பால் போகிறது. அதைக் கண்டு புள்ளி மான் சிரிக்கிறது. இப்படி அவை விளையாடிக் கொண்டிருக்கையில், ஒரு தடவை பெண்மான் ஒளிந்துகொண்டிருந்தபோது சற்றுத் தூரத்தில் ஒரு மல்லிகைப் புதரில் இரண்டு பிரகாசமான நட்சத்திரங்கள் ஜொலிப்பதைக் கண்டு அதிசயித்தது. பிறகு, அவை நட்சத்திரங்கள் அல்ல, அனல் கட்டிகள் என்று தோன்றியது. பின்னர், அந்த இரண்டு அனல் கட்டிகளும் ஒரு பெரிய புலியின் இரண்டு கண்கள் தான் என்று தெரியவே, பெண் மானின் சகல நாடியும் ஒடுங்கிவிட்டது. கலைமானைக் கூவி அழைக்க அது முயன்றது. ஆனால், அதன் தொண்டையிலிருந்து சத்தமே உண்டாகவில்லை.

மேலே என்ன ஆயிற்று? புள்ளிமான் தப்பித்துச் சென்றதா? கலைமானுடன் சேர்ந்ததா? - அதுதான் தெரியவில்லை. அத்தகைய பயங்கர அபாயத்தில் அகப்பட்டுக் கொண்டிருந்த பெண்மான் உண்மையில் மான் அல்ல, - தானே அந்த மான் என்று மட்டும் சிவகாமிக்கு அந்தக் கணத்தில் தெரிய வந்தது.

## நாற்பதாம் அத்தியாயம்

# கட்டாயப் பிரயாணம்



கேந்திர விடுதியிலிருந்து அதிகாலையில் கிளம்பிய பரஞ்சோதி அன்று பகலெல்லாம் பிரயாணம் செய்து, வட பெண்ணையுடன் பாபாக்கினி நதி கலக்கும் இடத்திலுள்ள புத்த விஹாரத்தைச் சூரியாஸ்தமன நேரத்தில் அடைந்தான்.

விஹாரத்தின் வாசலில் புத்த பிக்ஷு ஒருவர் நின்றுகொண்டிருந்தார். மாலை நிறத்து மஞ்சள் வெயிலில் பிக்ஷுவின் காவி உடையானது தங்க நிறமாகப் பிரகாசித்தது. பரஞ்சோதி குதிரையிலிருந்து

இறங்கிப் பிக்ஷுவை அணுகியதும், அவர் இவனை என்னவோ கேட்டார். அவர் பேசிய பாஷை பரஞ்சோதிக்குப் புரியவில்லை. ஆனாலும் தான் யார் என்பதை விசாரிக்கிறார் என்று ஊகித்துக்கொண்டு, தமிழிலேயே, தான் நாகார்ஜுன பர்வதத்துக்குப் போவதாகவும், தன்னை இவ்விடம் தங்கி வழி கேட்டுக் கொண்டு போகும்படி நாகநந்தியடிகள் பணித்தார் என்றும் கூறினான்.

நாகநந்தி என்று கேட்டதும் அந்தப் பிக்ஷுவின் முகத்தில் மாறுதல் காணப்பட்டது. சமிக்ஞையினால் "கொஞ்சம் இங்கேயே இரு!" என்று பரஞ்சோதிக்குச் சொல்லிவிட்டு, பிக்ஷு உள்ளே சென்றார். சற்று நேரத்துக்கெல்லாம் அவர் திரும்பி வந்து, பரஞ்சோதியையும் விஹாரத்துக்குள் அழைத்துச்செறார். அந்தப் பௌத்த விஹாரம் காஞ்சியில் பார்த்த இராஜ விஹாரத்தைப் போலக் கல், மரம், சுண்ணாம்பினால் கட்டப்பட்டதல்லவென்பதையும், குன்றிலே குடைந்து அமைக்கப்பட்டதென்பதையும் பரஞ்சோதி கவனித்தான். காஞ்சி இராஜ விஹாரத்தைப் போல் இது அவ்வளவு பெரிதாக இல்லை; அவ்வளவு விலையுயர்ந்த பூஜாத்திரவியங்களும் இங்கே காணப்படவில்லை. ஆனால் விஹாரத்தின் அமைப்பு முறை அதேமாதிரி இருந்தது. நடுவில் பிக்ஷுக்கள் கூடிப் பிரார்த்தனையும் தியானமும் செய்வதற்குரிய சைத்யமும் அதன் பின் பக்கத்துப் பாறைச் சுவரில் பிரம்மாண்டமான புத்தர் சிலையும் இருந்தன. அந்தப் புத்தர் சிலையும், சிலைக்கு மேலே கவிந்திருந்த போதி விருட்சமும், புத்தர் மீது புஷ்பமாரி பொழிந்துகொண்டிருந்த கந்தர்வ வடிவங்களும், - எல்லாம் பாறையில் குடைந்து அமைக்கப்பட்டிருந்தன. அலங்கார தீபங்கள் வரிசை வரிசையாக ஒளிர்ந்தன. புத்தபகவானுக்கு எதிரில் பலவித வர்ண மலர்கள் தனித் தனிக் கும்பலாகக் குவிக்கப்பட்டுக் கண்ணைக் கவரும் காட்சியளித்தன. புஷ்பங்களின் நறுமணத்துடன் அகிற் புகையின் வாசனையும் சேர்ந்து சிந்தையை ஒருமுகப்படுத்த உதவி செய்தது.

சைத்யத்துக்கு இருபுறத்திலும் புத்த பிக்ஷுக்கள் தங்குவதற்கும் மாணாக்கர்கள் கல்வி பயில்வதற்கும் உரிய குகை அறைகள் குடையப்பட்டிருந்தன. ஒரு பக்கத்தின் கோடியில் மச்சுப்படிகள் போன்ற படிக்கட்டுகள் காணப்பட்டன. அந்தப் படிகளின் வழியாகப் பரஞ்சோதியைப் பிக்ஷு அழைத்துச் சென்றார். கீழேயுள்ள அறைகளைப் போல் மேலேயும் பாறையில் குடையப்பட்ட அறைகள் காணப்பட்டன. அவற்றில் விசாலமான அறை ஒன்றில் பத்மாசனமிட்டு அமர்ந்திருந்த பெரிய புத்த பிக்ஷுவிடம் பரஞ்சோதி அழைத்துச் சென்று விடப்பட்டான்.

அந்த விஹாரத்தின் தலைமைப் பிக்ஷு அவர்தான் என்பதைப் பரஞ்சோதி ஊகித்துக்கொண்டு அவரைக் கைகூப்பி வணங்கினான். "புத்தம் சரணம் கச்சாமி," "தர்மம் சரணம் கச்சாமி," "சங்கம் சரணம் கச்சாமி" என்று தலைமைப் பிக்ஷு கூறி மூன்று புத்த பகவானுக்கு வணக்கம் செலுத்திவிட்டு, பரஞ்சோதியைப் பார்த்துத் தமிழ் பாஷையில் "குழந்தாய்! நீ யார்? என்ன காரியமாக வந்தாய்? யார் உன்னை அனுப்பினார்கள்?" என்று கேட்டார்.

பரஞ்சோதி நாகநந்தியடிகள் தன்னை ஓலையுடன் அனுப்பி வைத்தது பற்றி விவரமாகக் கூறினான்.

"நாகநந்தி கொடுத்தனுப்பிய ஓலை எங்கே? அந்த ஓலையை நான் பார்க்கலாமா?" என்று பிக்ஷு கேட்டார்.

"மன்னிக்க வேண்டும். ஓலையை சத்யாச்ரயரைத் தவிர வேறு யாரிடமும் கொடுக்கக் கூடாதென்று நாகநந்தியடிகளின் கட்டளை" என்றான் பரஞ்சோதி.

சத்யாச்ரயர் என்ற பெயரைக் கேட்டதும் பிக்ஷுவின் முகத்தில் ஒரு மர்மமான புன்னகை தோன்றியது. அதைப் பரஞ்சோதி கவனித்தானாயினும் அதன் பொருளை அறியமுடியவில்லை.

"நாகநந்தியடிகள் என்ன கட்டளையிட்டாரோ, அவ்விதமே செய். இன்றிரவு இங்கேயே படுத்துக்கொள். ஸ்ரீபர்வதத்துக்குப் போகும் வழியெல்லாம் இப்போது அபாயம் நிறைந்ததாயிருக்கிறது. இன்று ராத்திரியே அவ்விடத்துக்குப் போகும் வீரர்கள் சிலர் இங்கே வரக்கூடும். அவர்களுடன் சேர்ந்து அனுப்பி வைக்கிறேன். அவர்கள் உனக்கு வழி காட்டுவதுடன் பத்திரமாகவும் கொண்டு போய்ச் சேர்ப்பார்கள்!" என்று ஆசார்ய பிக்ஷு கூறி

## அருள்வாக்கு

வியாகரண சாஸ்திரத்தில் சப்தத்தையே ப்ரம்மமாக நிலை நாட்டியிருக்கிறது. இதற்கு சப்த ப்ரம்மவாதம் என்று பேர். பாஷை இலக்கணத்தைச் சொல்லும் போது இப்படி வையாகரணிகள் (வியாகரண சாஸ்திரக்காரர்கள்) அதை ப்ரம்ம ஸ்வரூபமாகச் சொல்லியிருப்பதையே இன்னொரு விதத்தில் ஸங்கீத சாஸ்திரக்காரர்களும் ஸ்தாபித்திருக்கிறார்கள். ஸங்கீதத்திலே நாதப் பிரம்ம உபாஸனை, நாதோபாஸனை என்கிற இடத்திலும் நாதம் என்பது வெறும் சப்தம் மட்டுமில்லை; பாடுகிறவன் ஒரு ஸ்வர ஸ்தானத்தை ச்ருதியோடு, சுத்தமாக, தீர்க்கமாகப் பிடித்து அது பூரணமாக ஓங்கி முடிந்து விழுந்து லயிக்கிற இடத்தில் - இதை மூர்ச்சனை என்பார்கள் - அது ச்ருதியோடு கவ்வி அத்வைதமாகக் கரைந்து நிறைந்து போகிறதே அதைத்தான் நாதம் என்பது. இந்த இடத்திலே பாடுகிறவனும் அதோடு கரைந்து நிறைந்து விடுவான். அவன் மட்டுமில்லை. கேட்கிற ஸஹ்ருதயர்களானவர்களும் அப்படியே சொக்கித் தங்களை மறந்து அந்த நாதத்தில் ஐக்யமாகியிருப்பார்கள். இதிலே பெறுகிற ஆனந்தந்தான் ஆத்மானந்தம், பிரம்மானந்தம் என்று மத சாஸ்திரங்களின் உச்ச லக்ஷ்யமாய்ச் சொல்லியிருப்பது. நாதம் பிரம்மத்துக்குக் கொண்டு போகிறது, சப்தம் நாதத்துக்குக் கொண்டு போகிறதென்றால் இதில் ஒன்றின் தன்மை இன்னொன்றுக்கு இல்லாவிட்டால் எப்படி முடியும்? அதனால்தான் சப்தமே பிரம்மம் என்று சொல்வதாகச் சாஸ்திரம் ஏற்பட்டிருக்கிறது.



- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சாரிய சுவாமிகள்

இன்னொரு பிக்ஷுவைப் பார்த்துச் சமிக்ஞை செய்தார்.

அவர் பரஞ்சோதியை அங்கிருந்து அழைத்துச் சென்று உணவருந்தச் செய்த பிறகு, கீழே ஓர் அறையில் அவன் படுத்துக் கொள்வதற்கு இடம் காட்டினார். சென்ற இரவில் நல்ல தூக்கம் இல்லாமையாலும் நெடுந் தூரப் பிரயாணத்தினாலும் களைப்புற்றிருந்த பரஞ்சோதி, இன்று படுத்தவுடன் நிம்மதியாகத் தூங்கலானான்.

தோளைப் பிடித்து யாரோ குலுக்குவதறிந்து பரஞ்சோதி திடுக்கிட்டுக் கண் விழித்தான். முதல்நாள் அவனை மடத்துக்குள் அழைத்து வந்த பிக்ஷுதான் அவனை எழுப்பிக்கொண்டிருந்தார். பக்கத்தில் பெரிய பிக்ஷுவும் நின்றார்.

"தம்பி! நாகார்ஜுன பர்வதத்துக்குப் போவோர் புறப்படுகிறார்கள். நீயும் கிளம்பு!" என்றார் பெரிய பிக்ஷு.

பரஞ்சோதி அவசரமாக எழுந்து, தலைமாட்டில் வைத்திருந்த ஓலைக் குழாயை எடுத்து இடுப்பில் செருகிக் கொண்டான். பிக்ஷுக்களைப் பின் தொடர்ந்து மடத்தின் வாசலுக்கு வந்தான்.

அங்கே அவனுடைய குதிரையைத் தவிர, இன்னும் ஆறு குதிரைகளும், ஒவ்வொரு குதிரைக்கும் அருகில் ஆஜானுபாகுவான வீரன் ஒருவனும் நிற்பதைக் கீழ் வானத்தில் தோன்றிய பிறை மதியின் மங்கிய நிலவொளியில் பரஞ்சோதி கண்டான்.

"இந்த வீரர்கள் அவசர காரியமாக ஸ்ரீபர்வதத்துக்குப் போகிறார்கள். இவர்களுடன் போனால் குறுக்கு வழியாக வெகு சீக்கிரம் போய்ச் சேர்ந்து விடலாம்" என்று பெரிய பிக்ஷு கூறினார்.

மனத்தில் காரணம் தெரியாத தயக்கத்துடன் பரஞ்சோதி குதிரை மீது ஏறினான். குதிரைகள் வடபெண்ணை நதிக்கரையோடு மேற்குத் திசையை நோக்கி விரைந்து சென்றன.

(தொடரும்)



மருத்துவப் பக்கம்

அலர்ஜி - ஆஸ்த்துமா சிகிச்சை நிபுணர் டாக்டர் ஆர். ஸ்ரீதரன் நம் கேள்விகள் சிலவற்றுக்கு விளக்கம் தருகிறார்:

**டாக்டர், அலர்ஜி என்றால்...?**

அலர்ஜி என்றால் ஒவ்வாமை, ஒத்துக் கொள்ளாத தன்மை என்று தமிழில் சொல்லலாம். நமது உடலில், நோய் எதிர்ப்புச் சக்திகள், இரத்தத்தில் உள்ள வெள்ளை அணுக்களின் செயல்பாடு மூலமும், பிளாஸ்

# அலர்ஜி

மாவில் உள்ள நோய் _ எதிர்ப்பு - புரதப் பொருட்கள் மூலமும், பாக்டீரியா, வைரஸ் காரணமான பலவித தொற்றுநோய்களிலிருந்து நம்மைக் காக்கின்றன. நோய் வராது தடுக்கவும், நோயின் கடுமையைக் கட்டுப்படுத்தவும், மீண்டும் வந்து தாக்காமல் இருக்கவும் நோய் எதிர்ப்புச் சக்தி எனப்படும் இம்யூன் மெகானிசம் நன்றாக இயங்க வேண்டும்.

இந்த இயக்கத்தின் ஒரு பகுதிதான் IGE எனப்படும் இம்யுனோகுளோபின் - E. இது தான் ஒவ்வாமையை உண்டாக்கும் புரதக்கூறு. பாரம்பரியமாக, மரபு அணுக்கள் மூலம் அலர்ஜி தலைமுறை தலைமுறையாகப் பலரையும் பாதிக்கிறது.

நமது குடலைப் பாதிக்கும் புழு பூச்சிகளின் தாக்கத்திலிருந்து புரொட்டீன் இம்யுனோகுளோபின் - E பாதுகாப்பு அளிக்கிறது. இதன் அளவு ஒவ்வொரு வயதிற்கும் சிறிது மாறுபடும். சரியான அளவு IGE இருப்பது மிக அவசியம். மிக அதிக அளவு IGE இருப்பவர்கள், அலர்ஜிக்கு உள்ளாகிறார்கள். இரத்தத்தில் IGE யின் அளவு, சரியான அளவைவிட நாலு மடங்குக்கு மேல் இருப்பவர்கள், பலவித அலர்ஜி பாதிப்புக்கு உள்ளாகிறார்கள். சில குழந்தைகளுக்கு நூறு மடங்குகூட அதிகமாக இருக்கும். இந்தக் குழந்தைகள் பலவிதமான அலர்ஜியினால் அவஸ்தைப்படுவார்கள்.

**அலர்ஜி உடலின் எந்தெந்த பாகங்களைப் பாதிக்கும்?**

அலர்ஜி நமது உடலின் எந்த உறுப்பையும் பாதிக்கலாம். ஆனால் மிக அதிக அளவு பாதிக்கப்படுவது: 1. தோல், சருமம் உலர்ந்து போவது, சிவப்பாக மாறுவது, அரிப்பு உண்டாவது, கடினத் தன்மை பெற்று, செதில் செதிலாக உருமாறுவது, சருமத்திலிருந்து ஒருவித நீர் வடிவது, சீழ் பிடித்த கொப்புளங்கள் உருவாவது. 2. மூக்கு, சைனஸ் பாதிப்பு. மூக்

• அலர்ஜிக்கு நண்பர்கள்







# அறியப்படாத உண்மைகள்!

கின் உள்ளேயிருக்கும் சவ்வுப் பகுதி வீக்கம் அடைவது, அதிகமான அரிப்பு, மெகா சீரியல் போல நீண்ட, தொடர்ந்த தும்மல், சளி கொட்டுவது, அடைப்பு ஏற்படுவது.

இதன் தொடராக சைனஸ் எனப்படும், மூக்கைச் சுற்றியுள்ள காற்றறைகளில் சளி சேர்ந்துகொள்ளும். அதில் நீண்ட சதை வளர்ச்சி ஏற்பட்டு, தொடர்ந்து இன்ஃபெக்ஷன் உண்டாவது சகஜம்.

குழந்தைகளுக்கு மூக்கில் ஏற்படும் தூசு அலர்ஜியின் பாதிப்பால், மூக்கின் பின் உள்ள அடினாய்டு என்ற சதை பெரிதாகி, குழந்தை மூக்கினால் மூச்சு விட முடியாமல் வாயைத் திறந்து மூச்சு விடும். தூங்கும்போது குறட்டை ஒலி எழும். காதில் உள்ள டிம்ப்பனிக் மெம்ப்ரேன் அருகே ஒரு வித நீர் சேர்ந்துகொண்டு, கேட்கும் திறன்கூடப் பாதிக்கப்படலாம்.

**ஆஸ்துமா கூட அலர்ஜியின் பாதிப்புத்தானா?**

அலர்ஜியினால் மூச்சுக்குழலில் ஏற்படும் மோசமான பாதிப்புத்தான் ஆஸ்த்துமா.

மூச்சுக்குழலில் அனிச்சையாக அடிக்கடிச் சுருக்கம் ஏற்படுவது; மூச்சுக்குழலின் உள்சவ்வு வீங்கி, காற்றுப் போக முடியாமல் அடைப்பு உண்டாவது; அதிகமான சளி; மூச்சுக்குழல் மிகவும் எளிதில் சுருக்கம் அடைவது – இவை அறிகுறிகள்.

• டாக்டர் ஸ்ரீதரன்

ஆஸ்த்துமா நோயினால் மரணம் ஏற்படாது என்பது தவறு. உலகில் ஆஸ்த்துமா நோயால் இறப்பவர்கள் எண்ணிக்கை 50% அதிகமாகி இருக்கிறது. அதுவும் 5 வயது முதல் 31 வயது வரை உள்ள ஆஸ்துமா நோயாளிகளின் மரணம் கணிசமா[illegible] உயர்ந்துள்ளது. ஆஸ்த்துமா ஒ[illegible] ஆரவாரமற்ற உயிர்க்கொல்லி நோய். முறையான சிகிச்சை மூலம் இந்த நோயின் தீவிரத்தை நல்ல முறையில் கட்டுப்படுத்தி, இந்த நோயாளிகள் இயல்பான, ஆக்க பூர்வமான வாழ்க்கை வாழ முடியும்.

ஆஸ்த்துமா நோய் மீண்டும் மீண்டும் வந்து தொல்லை தராமல் இருக்கவும், அதன் தீவிரத்தைக் குறைக்கவும் சிறந்த இன்ஹேலர் மருந்துகள் இருக்கின்றன. எளிதான சிகிச்சை முறைகள் இருக்கின்றன. ஆனால் ஆயிரத்தில் ஒரு ஆஸ்த்துமா நோயாளிக்குக்கூட இவை கிடைப்பதில்லை. இதற்கு மருத்துவர்களின் அறியாமையும் ஒரு

முக்கிய காரணமாக இருப்பது தான் வருத்தத்துக்குரிய உண்மை.

**அலர்ஜி உண்டாக்கும் முக்கிய காரணிகள் என்னென்ன?**

காற்றின் மூலம் (ஏரோ அலர்ஜன்) உண்டாகும் அலர்ஜிக்கு, கண்ணுக்குத் தெரியாமல் காற்றிலே மிதந்து வரும் மகரந்தத் தூள் (போலன்); காளான்களின் நுண் துகள்கள்; ஹவுஸ் டஸ்ட் மைட் எனப்படும் – படுக்கை சோபா போன்ற வீட்டுப் பொருட்களில் இருக்கும் சிறு பூச்சிகளின் கழிவுப் பொருட்கள், தூசுகள்; வாகனப் புகை, சிகரெட் புகை, தொழிற்சாலைப் புகை என காற்றில் உள்ள நச்சுத் தன்மை; காற்றிலுள்ள ஈரப்பதம் மாற்றம்; வைரஸ் எனப்படும் பலவித நுண்கிருமிகள்; செல்லப்பிராணிகளான பூனை, நாய் இவற்றின் உரோமங்கள் – இவையே காரணிகள்.

இவை தவிர, உணவுப் பொருட்களின் மூலம் வரும் அலர்ஜியும் உண்டு.

பால், முட்டை, இறால் மீன், நண்டு, கடலை, தேங்காய் இப்படிப் பல பொருட்கள் சிலருக்கு ஒவ்வாமல் இருப்பதுண்டு. துல்லியமான பரிசோதனைகள் மூலம் யாருக்கு எதனால் அலர்ஜி என்று கண்டறிந்து, அந்த உணவை அறவே விலக்கிவிட்டால் குணம் பெறலாம். வேர்க்கடலை அலர்ஜியினால் சிலர் இறந்த செய்தி பலருக்கும் அதிர்ச்சிகூடத் தரலாம். ஆனால் மருத்துவ உலகில் இது உண்மையான நிகழ்ச்சி!

செய்யும் தொழில் காரணமாக வரும் அலர்ஜி இன்னொரு வகை. கெமிக்கல் தொழிற்சாலையில் வேலை செய்பவர்கள்; சிமெண்ட், ஆஸ்பெஸ்டாஸ் தொழிலில் ஈடுபட்டிருப்போர், மளிகைக் கடை, ரேஷன் கடைகளில் பலவித நெடிகளுக்கு இடையே வேலை செய்வோர்; மரத்தச்சு வேலை செய்வோர் - என்று இவர்களைக் குறிப்பிடலாம்.

உலகில் கிட்டத்தட்ட 20 சதவிகிதம் மக்களைப் பாதிக்கும் இந்தப் பரவலான நோய் பற்றிய உண்மைகள் முழுமையாகப் பலருக்கும் தெரியாமல் இருப்பதும் உண்மையே!

சந்திப்பு: **சாருகேசி**

• ஆல்பம் வெளியீட்டு விழாவில்...



'விடுதலைக்கு ஏழு படிகள்– முதல் படி' என்று டிரீம்ஸ் ஆடியோ நிறுவனம் இசை ஆல்பம் ஒன்றை வெளியிட்டிருக்கிறது. இந்திய இசைக்கலைஞர்கள் வயலின், கடம் வாசிக்க, ஜெர்மனி கலைஞர்கள் கிதார் வாசிக்க, உருவாக்கப்பட்ட இந்த ஆல்பத்தை வழங்கி இருக்கும் இசைக் குழுவின் பெயர் 'அஹிம்ஸா!' இப்பெயரைத் தேர்ந்தெடுத்துச் சூட்டியவர் ஜெர்மனியைச் சேர்ந்த கிதார் கலைஞரான மத்யாஸ் முல்லர்!

ஒரு ஜெர்மன்காரர் எப்படி 'அஹிம்ஸா'வைத் தேர்ந்தெடுத்தார்? முல்லருடன் இணைந்து ஆல்பம் உருவாக்கியுள்ள வயலின் கலைஞர் நெய்வேலி ராதாகிருஷ்ணாவிடம் கேட்டோம்.



• யோகராஜ், முல்லர், ராதாகிருஷ்ணா, ருஷிம்டெட்ஸ், சங்கர்.

# "அஹிம்சா!"

"மத்தியாஸ் முல்லர், இந்தியா வந்திருக்கிறார். மகாத்மா காந்திபற்றி நிறைய தெரிந்தவர். தலாய்லாமா முகாமில் சில நாட்கள் தங்கிய அனுபவமும் உண்டு. கிழக்கும் மேற்கும் சங்கமிக்கும் எங்கள் இசைக்குழுவுக்கு என்ன பெயர் சூட்டலாம்? என்று யோசித்தபோது, சட்டென்று அவர் சொன்ன பெயர்தான், 'அஹிம்ஸா!'என்கிறார்.

ராதாகிருஷ்ணாவும், மத்தியாஸ் முல்லரும் சந்தித்ததுகூட சுவாரசியமானதுதான். ஜெர்மனியில் நடந்த இவரது வயலின் கச்சேரியைக் கேட்கவந்த மத்தியாஸ் முல்லர் கச்சேரி முடிந்ததும், ராதாகிருஷ்ணாவை ஏகத்துக்கும் புகழ்ந்து தள்ளி தன் வீட்டுக்கு அழைத்திருக்கிறார். வீட்டுக்குப் போனதும் அவர் தம் கிதாரில் வாசித்துக் காட்டியது, நம் தோடி ராகம் போல இருந்தது. உடனே இவர் வயலினில் தோடி ராகம் இசைக்க, அவருக்கு ஆச்சரியம். இருவரும் இணைந்து, "ப்யூஷன் மியூஸிக் முயற்சி செய்து பார்க்கலாமே" என்று அந்தக் கணமே முடிவு எடுத்து விட்டார்களாம்.

உடனடியாக இந்தியாவுக்குத் தகவல் சொல்லி, கடம் போன்ற சக கலைஞர்களை வரவழைக்க, அவர்கள் ஜெர்மனியில் வந்து இறங்கிய சுபயோக சுபதினம் சரஸ்வதி பூஜை நாள்! சென்ட்டிமென்டலாக இவர்களுக்குச் சந்தோஷம் தந்த விஷயம், முல்லரின் வீட்டில் இருந்த சரஸ்வதி பொம்மை! அன்றே ஒரு பூஜை போட்டுவிட்டு, அடுத்தநாள் ஆயுத பூஜையன்று, 'அஹிம்ஸா' இசைக்குழு தன் பணிக்குப் பிள்ளையார் சுழி போட்டது!

இப்படி இவர்கள் உருவாக்கிய ப்யூஷன் இசைதான் இன்று ஆல்பமாக வெளியாகியுள்ளது.

— கௌதம்

'ஜெமினி' படத் தொடக்க விழாவில் எல்லோரையும் சிரிக்கவும் சிந்திக்கவும் வைத்த பேச்சு விஜுசக்கர வர்த்தியினுடையது. சின்ன சின்னப் பாத்திரங்களில்கூட கைதட்டல்களை அள்ளிக்கொண்டு போய்விடும் இவர், தமது எழுநூற்று இருபத்து ஏழாவது படத்தில் நடித்துக் கொண்டிருக்கிறார் என்றால் நம்ப முடிகிறதா? நடிப்பிற்காக ரயில்வே அதிகாரி வேலையை உதறிவிட்டு வந்த இவர் தமது இன்னொரு பக்கத்தை நம்மிடம் திறந்து வைக்கிறார்:

''நான் பிறந்தது வளர்ந்தது எல்லாம் மதுரையில். கூத்துக் கலைக்குப் பெயர் போன அந்தக் கூடல்நகரில், 'உடையப்ப தேவர்' நடிக்கிறார் என்றால் அங்கே ஓடி விடுவேன். கூத்து எனக்குள் தாக்கத்தை ஏற்படுத்திய போது நான் பத்து வயதுச் சிறுவன். எனது வீட்டிற்குப் பக்கத்திலேயே ஒரு நாடகக் கம்பெனி. அன்றையதினம் அவர்கள் நிகழ்த்த இருந்த கூத்தில், 'குலசேகரன்' என்ற இளவரசன் பாத்திரத்தில் வழக்கமாக நடிக்கும் சிறுவனுக்குக் காய்ச்சல் என்பதால் வரவில்லை. கையைப் பிசைந்துகொண்டிருந்த நேரத்தில் நான் உள்ளே புகுந்து. ''தினமும் உங்கள் கூத்தைப் பார்க்கிறேன். குலசேகரனாக நான் நடிக்கட்டுமா?'' என்றேன். கட்டிப் பிடித்து உச்சி முகர்ந்தார்கள். அரிதாரம் பூசி, உடைகள் அணிந்து மேடையில் தோன்றி, கம்பீரமாக நான் பாடியபோது கைதட்டல்! அதுதான் எனக்குக் கிடைத்த முதல் ஆஸ்கர்.

பதினைந்து வயதில் குத்தூசி குருசாமி, கண்ணகி படத்திற்குக் கதை வசனம் எழுதிய எழுத்தாளர் இளங்கோவன் போன்றோரின் உரைநடைத் தமிழும், விடுதலை இதழின் மொழியும் எனக்குள் புதிய மாற்றங்களை உண்டு பண்ண, சமூக நாடகங்களை எழுதினேன். பிறகு நாடகங்கள் போட ஆரம்பித்தேன். அப்படி நான் எழுதி இயக்கிக் கொண்டிருந்த ஒரு நாடகம் 'ரங்கநாயகி'. அந்த நாடகத்தை மைசூரில் நடத்தினோம். 'புட்டண்ணா கனகல்' என்ற கன்னட திரைப்பட இயக்குனர் நாடகத்தைப் பார்த்து விட்டு, அங்கேயே ஐயாயிரம் ரூபாய் கொடுத்து அதன் சினிமா உரிமையை வாங்கிக்கொண்டார். 'ரங்கநாயகி' மிகப் பெரிய வெற்றி பெற்றது. அவரது அழைப்பின் பேரில் அவரிடமே உதவியாளராகச் சேர்ந்தேன்.

அசோசியேட் இயக்குனராகும் வரை தொடர்ந்து ஆறு படங்களுக்கு அவரிடம் பணியாற்றினேன். ஆனால்



தமிழ் சினிமாவில் ஒரு தரமான இயக்குனராகிவிட

# “டைரக்டராகப்

வேண்டும் என்ற தாகம் காரணமாகச் சென்னை வந்தேன்.

தமிழில் முதல்முறையாக 'ரோஜாப்பூ ரவிக்கைக்காரி' படத்திற்குத் திரைக்கதை வசனம் எழுதினேன். சிவகுமாரின் சினிமா வாழ்க்கையில் பெரிய திருப்புமுனையாக அமைந்த 'வண்டிச் சக்கரம்' படத்தின் கதை திரைக்கதை, வசனம் எழுதினேன். அதன் பிறகு நடிகர் திலகம் சிவாஜி நடித்த பல படங்களுக்குக் கதை வசனம் எழுதிக்கொண்டிருந்தேன். இயக்குனராகும் எல்லா முயற்சிகளும் கைகூடி வந்த நேரத்தில் 'கோபுரங்கள் சாய்வதில்லை' படத்தில் முதன் முதலாக நடித்தேன். பூதலிங்கம் என்ற பெயரில் ஒரு கரிசனமான மாமனார் பாத்திரம். ரசிகர்கள் மத்தியில் பரபரப்பாகப் பேசப்பட்ட பாத்திரம். பாரதிராஜா எனது நடிப்பைப் பார்த்துவிட்டு, "உனக்குள் ஒரு நடிகன் இருக்கிறான். அவனைச் சாகடித்து விடாதே" என்றார். கையோடு மண்வாசனை படத்தில் 'மலைச்சாமி'த் தேவர் என்ற பாத்திரத்தில் வாழ வைத்தார்.

அன்றைக்குத் தொடங்கியதுதான் ஒரு முழு நேர நடிகனாக எழுநூற்று இருபத்தாறு படங்களில் நடித்து முடித்து விட்டேன். இருபத்தாறு வயதில் கதைவசனம் எழுதுகிறவனாக சினிமாவில் நுழைந்து, இயக்குனராக வேண்டும் என்ற இலட்சியத்தோடு உழைத்து, எதிர்பாராமல் நடிகனாகிய எனக்கு இப்போது ஐம்பத்தாறு வயதாகிவிட்டது. இடைப்பட்ட முப்பது வருடத்தில் நான் ஒரு கதாசிரியன் என்பதை ஒருவினாடி கூட மறந்து போனதில்லை. தினசரி வாசிப்பது எனக்குச் சுவாசிப்பது மாதிரி. நான் எழுதாத நாளே இல்லை. இப்போது கையில் இருபத்தைந்து கதைகளைத் தயாராக வைத்திருக்கிறேன். இப்போது தொடங்கினாலும் தொடர்ந்து என்னால் பத்து வெற்றிப் படங்களைக் கொடுக்க முடியும். ஒரு நல்ல தயாரிப்பாளருக்காகக் காத்திருந்தேன். அப்படியொரு தயாரிப்பாளர் ஆஸ்கர் ரவிச்சந்திரன் கிடைத்துவிட்டார். 2002 ஜூன், ஜூலையில் என்னை இயக்குனராகப் பார்க்கலாம். மண்வாசனையும், தமிழ் அடையாளமும் என் இயக்கத்தின் இதயமாக இருக்கும்.

**- வினுசக்கரவர்த்தி**

'சேரன், லிங்குசாமி போன்ற நம்பிக்கையூட்டும் இளம் இயக்குனர்களைப் பார்க்கிறபோது, தமிழ் சினிமா செத்துப் போய்விடாது என்று எண்ணத் தோன்றுகிறது. ஆனால் முதல் படத்திலேயே உச்சங்களைத் தொட வேண்டும் என்பதற்காக ஹாலிவுட் உதிர்த்தவற்றைப் பொறுக்கி வந்து, 12B மாதிரி படமெடுக்கும் 'ஜீவா' போன்ற திறமையான இளைஞர்கள், தவறான பாதையில் போவது கவலை தருகிறது. இங்கே ஒவ்வொரு கதவுக்குப் பின்னாலும் ஒரு கதை இருக்கிறது. பிறகேன் இங்கிலீஷ்காரன் வீட்டுக் கதவைத் தட்டிப் பிச்சை கேட்க வேண்டும்?

# போறேன்!"

சந்திப்பு: ஜெயந்தன்




# இன்று முதல் காதல்!

மது தியாகராஜனுக்குக் கடலூர் அருகேயுள்ள வண்டிப்பாளையம்தான் பிறந்த ஊர். படித்ததோ சென்னை கிண்டி பொறியியல் கல்லூரியில் ஆட்டோமொபைல் இஞ்சினியரிங்.

ஆனால் இவருக்குப் புகழ் சேர்த்தவை இவர் தயாரித்த, பணியாற்றிய பிரெஞ்சு, ஆங்கில குறும்படங்களும், திரைப்படங்களும்தாம்!

''எம்ப்ளாய்மென்ட் நியூஸ் இதழில், சினிமாடோகிராஃபி படிக்க ஸ்காலர்ஷிப் கிடைக்கும் என்ற அறிவிப்பைப் பார்த்து விண்ணப்பித்தேன். மேற்கு ஜெர்மனியிலுள்ள ஸீகனில் மூன்று வருட போட்டோகிராஃபி அன்ட் ஃபிலிம் ஸ்டடீஸ் பயிற்சிக்கு அழைப்பு வந்தது. பயிற்சிக்குப் பிறகு பாரிஸ் நகருக்குச் சென்று விட்டேன். சினிமாடோகிராபராகப் பணியாற்றத் தொடங்கினேன்.''

தெற்கு பிரான்ஸில் உள்ள ஏர்ன்ஸ் நகரில் தங்கி, ஏராளமான குறும்படங்களையும், திரைப்படங்களையும் இயக்கியிருக்கிற மதுவுக்கு, ஐரோப்பியர்கள் ஏற்றுக் கொள்ளும் அளவுக்கு ஒரு தமிழ்ப்படம் தயாரித்துக் காட்ட வேண்டும் என்ற ஆசை உந்தியது. பிரெஞ்சு நாடகம் 'த கேம் அஃப் லவ் அன்ட் சான்ஸ்', திரைப்பட வடிவத்துக்கு ஏற்றது என்று அதைத் தேர்ந்தெடுத்தாராம். படத்தின் பெயர்: 'இன்று முதல் காதல்' பாண்டிச்சேரியில்: இதற்காக புதுவை பிக்சர்ஸ் இன்டர்நேஷனல் என்ற நிறுவனத்தைச் சமீபத்தில் தொடங்கியிருக்கிறார் மது.

ஸ்டீவ் கோல்மன் என்ற ஜாஸ் இசைக் கலைஞரை மையமாக வைத்துத் தயாரித்த 'எலிமென்ட்ஸ் அஃப் ஒன்' என்ற முழு நீளத் திரைப்படம் இவருக்குப் புகழ் தேடித் தந்தது. 6 நிமிடம், 10-15 நிமிடங்களுக்கு வரும் குறும் படங்கள் ஏராளம்.

''அந்தக் குறிப்பிட்ட நேரத்துக்குள் அடங்குகிற படத்தை மட்டுமே அங்கே இருக்கிற இயக்குநர்களும், ஹாலிவுட் இயக்குநர்களும் பார்க்கிறார்கள். அதற்குள் உங்கள் திறமையைக் காட்டத் தெரிந்திருக்க வேண்டும். அதைப் பார்த்துவிட்டு அவர்கள் இம்ப்ரஸ் ஆனால்தான் உங்களிடம் கேமராமேன் பொறுப்பைத் தருவார்கள்.''

மாவட்ட அளவிலும், அரசு அளவிலும் பிரெஞ்சு கிராமங்களில் உள்ள இளைஞர்களிடையே சினிமா குறித்த உணர்வுகள், தூண்டுதல்கள் எப்படி இருக்கின்றன என்று ஆராய்ந்து பிரெஞ்சு அரசாங்கத்திடம் ஒரு திட்டம் அளித்திருக்கிறார் மது.

இந்தியா, பிரான்ஸ் இரு நாடுகளுக்கிடையே சினிமா குறித்த பரிவர்த்தனையை வளர்க்க ஃபிராங்கோ இந்தியன் பிலிம் சொஸைட்டியையும் நிறுவியிருக்கிறார் இவர்.

- சித்தார்த்

ஓம் ஸ்ரீ ஹரி: ஓம் ஸ்ரீ ஹரி: ஓம் ஸ்ரீ ஹரி: ஓம் ஸ்ரீ ஹரி: ஓம் ஸ்ரீ ஹரி: ஓம் ஸ்ரீ ஹரி: ஓம் ஸ்ரீ ஹரி: ஓம் ஸ்ரீ ஹரி:

ஸ்ரீமதே ராமானுஜாய நம:
ஸ்ரீநீலமேக, மணிபர்வத, வீரநரஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:



## தஞ்சாவூர் அரண்மனை தேவஸ்தானம் தஞ்சை மாமணிக் கோயில் அருள்மிகு
## தஞ்சை நாயகி தாயார் ஸமேத ஸ்ரீவீரநரஸிம்ஹப் பெருமாள்
## திருக்கோயில் திருச்சுற்று ஆலயங்களின் மஹா ஸம்ப்ரோக்ஷணப் பெருவிழா

ஆஸ்திகப் பெருந்தகையீர்,

எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் தன்னடியார்க்கு எங்கே என்று அருளும் திருவுடைத்திருநாரணன் உறையும் 108 ஸ்ரீவைணவத் திருத்தலங்களுள் ஒன்றாகிய, (தஞ்சன்னூர்) தஞ்சாவூர் வெண்ணாற்றங்கரையில் எழுந்தருளியுள்ள அருள்மிகு தஞ்சை நாயகித்தாயார் உடனுறை ஸ்ரீ வீர நரஸிம்ஹப் பெருமாள் மார்க்கண்டேய, பராசர முனிவர்களுக்குப் ப்ரத்யக்ஷமாகி, பூதத்தாழ்வாரால் பாடப்பெற்று, இங்கே திருமந்திர உபதேசம் பெற்ற திருமங்கை மன்னனால் துதிக்கப்பெற்று, பக்த கோடிகளுக்கு நித்தம் நிலைத்தருள் பாலித்துக் காட்சியளித்து வருகின்றார்.

தாயார், ஆண்டாள், ஆழ்வார்கள், ஆசார்யர்கள் ஸந்நிதிகளுடன் தஞ்சை மாமணிக் கோயில் எனப் புகழ்பெற்று, சோழ, நாயக்க மன்னர்களால் சிறப்புடன் போற்றிப்பாதுகாக்கப்பட்டு, இன்று மராட்டிய மன்னர் பரம்பரை வாரிசாகிய தஞ்சையின் மூத்த இளவரசரும், தஞ்சை அரண்மனை தேவஸ்தான பரம்பரை அறங்காவலருமாகிய ஸ்ரீமான் S. பாபாஜி ராஜா பான்ஸ்லே, B.E., அவர்களின் நிர்வாகத்திற்கு உட்பட்டதாய் விளங்கும் இத்திருக்கோயில், இறைவழிபாட்டுக் குழுவினர்தம் பொருளுதவியுடன் ஜீர்ணோத்தாரணம் செய்யப்பட்டு, ஸ்வஸ்தி ஸ்ரீ விஷு வருஷம் தை மீ 14உ ஞாயிற்றுக்கிழமை 27.01.2002 புனர்பூச நக்ஷத்திரமும் ஸித்த யோகமும் கூடிய சுபயோக சுபதினத்தில் முற்பகல் மணி 11.05க்கு மேல் 11.45க்குள் மீன லக்னத்தில் குருஹோரையில் மஹாஸம்ப்ரோக்ஷணம் கண்டருளவிருக்கிறது. ஆஸ்திக அன்பர்கள் அனைவரும் வருகை புரிந்து எம்பெருமானைத் தரிசித்து க்ருபா கடாக்ஷம் பெற்றுய்யுமாறு கேட்டுக் கொள்கின்றோம். இயன்ற பொருளுதவி செய்யவும் வேண்டுகிறோம்.

இப்படிக்கு,
ஸ்ரீமதி, **Dr.** சரசுவதி இராமநாதன், **M.A., Ph.D.,** கௌரவத் தலைவர்,
ஸ்ரீமான் **K.** விசுவநாதன், **D. Pharm.** தலைவர். தஞ்சை மாமணிக்கோயில்
இறைவழிபாட்டுக்குழு மற்றும் நகர வாசிகள், வெண்ணாற்றங்கரை, தஞ்சாவூர் - 3.

ஓம் ஸ்ரீ ஹரி: ஓம் ஸ்ரீ ஹரி: ஓம் ஸ்ரீ ஹரி: ஓம் ஸ்ரீ ஹரி: ஓம் ஸ்ரீ ஹரி: ஓம் ஸ்ரீ ஹரி: ஓம் ஸ்ரீ ஹரி: ஓம் ஸ்ரீ ஹரி:

---

S. ஸ்ரீ ரங்கராஜபட்டாசாரியார்
ஸ்ரீ சுதர்சன மஹா யக்ஞ்ய கமிட்டி
32, கேசவ பெருமாள் சன்னதி
தெரு, மைலாப்பூர்,
சென்னை - 4.

நான் கல்கி 9.12.01 இதழிலும் மங்கையர் மலர் டிசம்பர் மாத இதழிலும் கொடுத்த "ஸ்ரீ ஹனுமத் ஜெயந்தி மஹோத்ஸவம்" விளம்பரம் யாதும் சில எதிர்பாராத காரணத்தினால் விழா ரத்து செய்யப்பட்டது. இது தொடர்பாக மேற்கண்ட முகவரியில் தொடர்பு கொள்ள வேண்டாமென்று இதன்மூலம் கேட்டுக் கொள்கிறோம்.

---



# "கல்கி ஷாப்பிங்"

பக்கங்களில்
விளம்பரம்
செய்ய ரூ.1250/-
மட்டுமே. செய்து
பயனடைவீர்!

47, ஜவாஹர்லால் நேரு
ஈக்காடுதாங்கல், சென்னை
போன்: 2345622 2345623

பொதுவாக கதை கேட்டபின் ஏற்படுகிற சுவாரஸ்யப் பகிர்தலில் சரவணனும், சகாக்களும் ஈடுபட்டிருக்க, வீரையன் மட்டும் சிந்தனைவயப்பட்டிருந்தான். மணி பெருமூச்சுடன் சொன்னான், ''அந்தக் காலத்துல கிழவனுங்க 'வாழ்ந்திருக்காங்கடா... வீட்ல ஒரு பொண்டாட்டி, அங்கங்கே கிப்பு... நடுவுல யாராவது பஞ்சம் பொழைக்க பூவரசி, நாவரசின்னு வந்தா அப்படியே ஒரு குடிசையப் போட்டுக் கொடுத்து, தோட்டத்துல வேலை செய்யச் சொல்லி மலிவா கரெக்ட் பண்ணிடுறது...''

சுந்தர் வயிற்றெரிச்சலுடன் இதனை ஆமோதித்தான். ''ஆமாடா.. உன் கொள்ளுந்தாத்தா எவ்வளவு விவரமான ஆளு? அந்தப் பொம்பளைகிட்ட வேலையும் வாங்கிக்கிட்டு... அப்படியே ஜாலியா வேற இருந்திருக்காரு... நம்மளுந்தேன் இருக்கோம்.. வயசு இருபத்திரண்டு, இருபத்தி மூணுன்னு ஆயிப்போச்சு... சினிமாவைத் தவிர வேற என்னத்தை யாவது அனுபவிச்சு இருக்கமா?'' சரவணன் புன்னகை செய்தான்.... ''புஸ் தகத்தை விட்டுட்ட...''

சுந்தர், ''ஆமா, சினிமா, புஸ்தகம்னு எல்லாம் தியரிலயே

# 21

போய்க்கிட்டு இருக்கு... பிராக்டிகலா? என்னத்துக்குடா இந்தக் கேவலத்தை வெளிய சொல்லிக்கிட்டு...'' என்று இழுத்தான்.

நண்பர்கள் நால்வரும் அவர்களது வயதுக்கோளாறு காரணமாக மெயின் கதையை விட்டுவிட்டு அதன் கிளர்ச்சிகரமான பகுதியைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்க...

வீரையன் அவற்றைக் கடந்து விட்டதனாலோ என்னவோ, வேறு ஒரு விஷயத்தை யோசித்துக் கொண்டிருந்தான். அவனது முகத்தோற்றத்தைக் கவனித்த பாலா கேட்டான், ''என்ன வீரையண்ணே நாங்க பாட்டுக்குப் பேசிக்கிட்டிருக்கோம்... நீங்க வேற ஏதோ யோசனைல இருக்கீங்க?''

''ம்...'' என்று இழுத்தான் வீரையன்.

''என்னண்ணே'' என்றான் சரவணன்.

''ஏன் சரவணா, கதையெல்லாஞ் சரி... அந்தச் சிலை என்னாச்சு?'' என்றான் வீரையன்.

பசங்களுக்குச் 'சட்'டென்று மனத்தில் தோன்றியது, ''பார்றா... நம்ம யாருக்குமே இந்த விஷயம் தோணவே இல்லையே... என்னருந்தாலும் அண்ணன் வெவரமானவர்தாண்டா'' என்றான் பாலா. சரவணன் விழித்



தான். "பாட்டி இதைப் பத்தி ஒண்ணும் சொல்லலை அண்ணே."

"அது சொல்லாட்டியென்ன... நீ கேட்டிருக்க மாட்டியா?" என்றான் வீரையன்.

"இல்லையண்ணே, தாத்தா இடி விழுந்து செத்துப் போனார்னு கிழவி சொல்லுச்சு.. அதுக்கப்புறம்னு நான் ஏதோ கேட்டேன். கிழவி தூக்கம் வந்திருச்சு போல.. மத்ததை அப்புறம் ஒரு நாள் சொல்றேன்னு சொல்லிருச்சு" என்றான் சரவணன்.

"அதுதாண்டா இதுல முக்கியமான விஷயம்" என்றான் வீரையன்.

"ஏண்ணே அப்படிச் சொல்றீங்க?" என்றான் மணி.

"பின்ன...! இந்த மாதிரி ஆயிரங்கதைகள் உண்டுரா கிராமத்தில.. அந்தச் சிலையை வீட்டுக்கடியில புதைச்சதா சொல்லி கிழவி சொல்லிச்சில்ல.. அதுக்கப்புறம் அந்த வீட்டோட கொளுத்திக்கிட்டு பூவரசி செத்துப் போனா... அங்க ஒரு பூவரச மரம் முளைச்சது... கரெக்டா!"

"கரெக்ட்டுத்தான்..."

"உங்க கொள்ளுத்தாத்தா புதைச்சு வச்ச சிலை என்னாச்சு? உங்க தாத்தா ஏதும் அதை எடுத்தாரா? யாராவது தோண்டிப் பாத்தீங்களா?"

"தெரியலையே" என்றான் சரவணன் அப்பாவியாக...

"படிச்சவன் நீ... உங்க கிழவிகிட்ட இதைப் பத்தி எல்லாம் விசாரிக்க வேண்டாமா?"

**பாஸ்கர் சக்தி**

# பூவரசம் வீடு



"அப்ப தோணலை... இப்ப என்ன? போயிக் கேட்டுர்றேன்."

"சட்டுன்னு கேக்காதடா... கிழவி சந்தேகப்பட்டுப் பொய்ச் சொல்லிடும்... எதார்த்தமாக் கேக்குற மாதிரிகேளு..." என்றான் வீரையன்.

"நீங்க இதுல பயங்கரமா இன்ட்ரஸ்ட் காட்டுறீங்க வீரையாண்ணே" என்றான் மணி.

வீரையன் முகம் 'சட்'டென்று மாறியது.

"அப்படியெல்லாம் ஒண்ணுமில்லையே... உங்க மாதிரிதாண்டா நானும்..." என்றான்.

ஆனால் அது உண்மையல்ல...

கிருஷ்ணவேணியும் சகோதரிகளும் கோயிலுக்குப் போய்விட்டு வீட்டுக்குள் நுழைந்தார்கள். லீலா சுவரில் சாய்ந்து அமர்ந்திருந்தாள். கையிலொரு நோட்டுப் புத்தகம். அதில் விடாது எழுதிக் கொண்டிருந்தாள். வேணி தாண்டிச் செல்கையில் இலேசாக எட்டிப் பார்த்தாள். நோட்டின் பக்கங்களை, ஸ்ரீராம ஜெயம் எழுதி நிரப்பிக் கொண்டிருந்தாள் லீலா...

அம்மா மனம் அமைதியாய் இல்லை என்பது கிருஷ்ணவேணிக்குப் புரிந்தது. லீலா

ஸ்ரீராமஜெயம் எழுதும் சந்தர்ப்பங்கள் எப்போதுமே கொந்தளிப்பு நிறைந்தவை. மனம் பிரச்னைகளால் அல்லலுறும் சமயத்தில் அதனை நிலைப்படுத்த லீலா அவளாகவே தேடிக் கொண்ட வழிதான் இப்படி அமர்ந்து 'ஸ்ரீராமஜெயம்' எழுதுவது. இது மகள்களுக்கு ஓரளவு தெரிந்த விஷயம்தான். எனவே தங்களது நடவடிக்கைகளை இயல்பாக வெளிப்படுத்தாமல் மூன்று பெண்களும் அடக்கி வாசித்தனர். கோவிலிலிருந்து கொண்டு வந்த விபூதி, குங்குமத்தைச் சாமி படத்தின் முன்பு வைத்துவிட்டு ஓசையெழுப்பாமல் பின்புறம் சென்று கால்,கை அலம்பிக் கொண்டு வந்தனர். பெரியவள் போய் சாமி படத்தின் முன்பிருந்த விபூதிப் பொட்டலத்தை எடுத்து வந்து அம்மாவின் முன்பு நீட்டினாள். லீலா அவளை நிமிர்ந்து பார்த்தாள். அமைதியாக விபூதியை எடுத்து நெற்றியில் இட்டுக் கொண்டு மேற்கொண்டு ஏதும் பேசாமல் எழுத ஆரம்பித்தாள்.

அம்சவேணி கிருஷ்ணவேணியிடம் வந்து காதில் கிசுகிசுத்தாள்.

"அம்மா ரொம்ப கோபமாயிருக்கு போலிருக்கு..." கிருஷ்ணவேணி தலையசைத்தாள். "என்னன்னு கேப்பமா?"

"பயமாயிருக்குடி."

பெரியவள் பயந்ததில் அர்த்தமுண்டு. லீலாவின் கோபத்தை இவர்களால் தாங்க முடியாது. அவ்வளவு உக்கிரமானதாய் அது இருக்கும். மகள்களைத் திட்டித் தீர்த்து, மற்றவரையும் ஏசி, செத்துப்போன புருஷனை நொந்து கொண்டு கடைசியில் தன்னைத் தானே திட்டித் தலையிலடித்துக் கொண்டு.... என்றெல்லாம் லீலாவின் கோபம் விதவிதமான வடிவங் கொண்டு நீண்டு கொண்டே செல்லும்... எப்போது இவள் தணிந்து அமைதியாவாள் என்று பயந்தபடியே மகள்கள் காத்துக் கொண்டிருப்பார்கள். ஆனால் அந்தத் துன்பமான நேரத்தைச் 'சட்'டென்று வடியச் செய்கிற பழக்கம் லீலாவுக்குக் கிடையாது. மகள்கள் தனது வேதனையைப் பொறாமல் தவிப்பதும், கண்ணீர் விடுவதும் உணர்ந்த அவள் தனது அழுகையையும், ஆங்காரத்தையும் முடிந்த அளவு நீடிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தாள். இதன் மூலம் மகள்கள் மீதான தனது கடிவாளத்தைப் போதுமான அளவு அவளால் இறுக்கிக் கொள்ள முடிந்தது.

அழுது அடங்குவதுபோலிருக்கும். தாயிடம் மகள்கள் சென்று அமர்ந்து கொண்டு, "நாங்க நீ சொல்றதை மீறி எதும் செய்ய



மாட்டோம்மா" என்று பரிதாபமாக தங்களது சரணாகதியை அறிவிப்பார்கள். அதனை உள்ளூர ஒரு பெருமிதம் பொங்க லீலா ஏற்றுக் கொள்வாள்.

எந்த இளைஞனின் பார்வையேனும் தனது பெண்களில் யாரையேனும் நெருங்குவதை உணரும் சந்தர்ப்பங்களில் இதுவே லீலாவின் இயல்பாக இருந்தது.

தனிமையில் சில சமயம் யோசிக்கையில், லீலாவுக்குத் தோன்றியது உண்டு. தனது மகள்களை அடக்கி வைக்க தான் நடந்து கொள்கிற முறை மிகவும் குரூரமானது என்பது அவளுக்கும் பட்டிருக்கிறது. ஆனாலும் "எனக்கு வேறு என்ன வழி இருக்கிறது? 'தகப்பனென்று ஒருவன் இருந்தால் இந்தப் பெண் பிள்ளைகளைத் தனது ஆணின் தோரணையில் அவன் அடக்கி வைப்பான். ஆனால் பெண்ணாகிய நான் இப்படி



அமைதியாக, பணிவாக அமர்வதை உணர்ந்த லீலா தொடர்ந்து எழுதிக் கொண்டேயிருந்தாள். இதுவும் அவளது யுக்திதான். 'என்ன விஷயம்?' என்று தான் பேச்சைத் துவங்கக் கூடாது... அதனைக் குற்ற உணர்ச்சியுடன் மகள்கள் கேட்பது தான் சரி.

தயங்கிய குரலுடன் அம்சவேணி கேட்டாள்,

"அம்மா..."

ஸ்ரீராம ஜெயம்.. மேலும் மூன்று முறை எழுதப்பட்டது. "அம்மா... ஏம்மா ஒரு மாதிரியா இருக்கே?"

ஒரு வினாடி எழுதுவதை நிறுத்தி மூன்று பேரையும் உற்றுப் பார்த்து விட்டு மீண்டும் எழுதுவதைத் தொடர்ந்தாள் லீலா...

"அம்மா.. என்னம்மா பிரச்னை? எதுக்காக 'உம்'முன்னு இருக்கே.."

"சொல்லும்மா...ப்ளீஸ்."

"அம்மா... நாங்க எதும் தப்பு பண்ணினமா?"

'சட்'டென்று எழுதுவதை நிறுத்தினாள் லீலா. மூவரையும் கண்கள் பளபளக்கப் பார்த்தாள்.

"பயமாருக்குடீ.. உங்களை நினைச்சா பயமாருக்கு...

"நாங்க ஒண்ணும் பண்ணலைம்மா."

"யாருக்குடீ தெரியும். யாருக்குத் தெரியும்....

"நான் பெத்ததுகதான்.. ஆனா.. அதது வளர்ந்து நிற்கிறதைப் பார்க்கிறப்ப... கை மீறி நிக்குதுகளேன்னு கவலையாருக்குடீ.."

கிருஷ்ணவேணிக்கு மனசுக்குள் குற்றம் குறுகுறுத்தது. ஆனால் அம்சவேணி தாயிடம் சாதாரணமாகப் பேசினாள்.

"அம்மா... ஏம்மா ரெண்டு மாசத்துக்கு ஒரு தரம் இந்த மாதிரி நீயும் சங்கடப்பட்டு எங்களையும் சங்கடப்படுத்துறே... இப்ப என்ன நடந்துச்சு?"

"ம்... வீரையன் வீரையன்னு ஒரு தடிமாடு இருக்கானே அவன் இன்னிக்கு அவம் பாட்டுக்கு வீட்டுக்குள்ள வர்றான்.. என்னன்னு கேட்டா சும்மா வந்தேங்கரான்.."

"அதுக்கு நாங்க என்ன பண்ணுவோம்?"

"எதுக்குடி இங்க அவன் வரணும்... உங்க மூணு பேர்ல யாரு மேலயோ அவன் கண்ணு வச்சிருக்கான்.. ஏழு கழுதை

அழுது, ஆங்காரம் பண்ணி அவர்களது மனத்தில் என் மீதான பரிதாபத்தையும், பயத்தையும் ஒருங்கே ஏற்படுத்தி அவர்களைக் கட்டுக்குள் வைத்திருப்பதில் என்ன தப்பு! என்று தனது செய்கையை நியாயப் படுத்திக் கொள்வாள் லீலா.

நோட்டுப் புத்தகத்தின் தாள்கள் புரண்ட வண்ணமிருந்தன. ஸ்ரீராம ஜெயங்களின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே போனது.

கனத்த அமைதி மிகவும் சங்கடத்தை விளைவித்தது. டிரான்ஸிஸ்டர் ரேடியோவை கையிலெடுத்த கடைசி வேணியை பெரியவள் பார்வையாலேயே அடக்கி டிரான்ஸிஸ்டரைப் பிடுங்கி ஓரமாக வைத்தாள்.

தன்னைச் சுற்றிலும் மூன்று பெண்களும்

வயசாகுதுடி அவனுக்கு... பெரியவனே உன்னையெல்லாம் விட ஏழெட்டு வயசு அவனுக்கு ஜாஸ்தியாத்தான் இருக்கும்."

"என்னம்மா சம்பந்தமில்லாம என்னென்மோ பேசுற? அந்த நாயிக்கு எத்தனை வயசானா என்ன! அவன் இங்க வந்தாத்தான் என்ன! 'வராதடா'ன்னு சொல்லி விரட்டு."

"அதெல்லாம் நாக்கைப் புடுங்கற மாதிரி வைஞ்சு விட்டுட்டேன்."

"அப்புறமென்ன... அதுக்காக எங்க தலையை ஏன் உருட்டுற?"

லீலாவின் கண்களில் கரகரவென்று கண்ணீர் வழியத் துவங்கியது.

"உங்க தலையை நான் உருட்டுறனா? எந்தலை உருண்டுறக் கூடாதுன்னுதான்டி நான் வயித்துல நெருப்பைக் கட்டிக்கிட்டுக் கெடக்கேன்."



"இவ்வளவு பெரிய அளவில் எல்லா மதிப்பிலும் எதற்காக கள்ள ரூபாய் நோட்டுக்கள் அடித்தாய்...?"

"அரசாங்கமெல்லாம் கடுமையான நிதி நெருக்கடியில் கஷ்டப்படுதுன்னு கேள்விப்பட்டேனுங்க!"

— ஆர். சுந்தரி

"இப்ப ஏம்மா அழுற? நாங்க மூணுபேரும் ஏதாச்சும் தப்புப் பண்ணமா? நாங்களே இருக்கற இடம் தெரியாம எங்களை வச்சுக்கிட்டிருக்கோம்!"

"என்னடி பிரயோசனம்? ராத்திரியில எவனோ வீட்டுக்குள்ள குதிச்சிருக்கான். பகல்ல கண்ட நாயும் வீட்டுக்குள்ள நுழையுது."

"அம்மா... திருடன் வந்ததுக்குக் கூட நீ எங்களைக் குறை சொன்னா எப்படிம்மா?"

"யாருக்குடி தெரியும்? வந்தவன் திருடத்தான் வந்தானா? இல்லை வேற எண்ணத்தோட வந்தானான்னு யாரு கண்டா?"

கிருஷ்ணவேணிக்குச் 'சுருக்'கென்றது. கூடவே இலேசான கோபமும் வந்தது.

"பாரும்மா... இல்லாததையெல்லாம் நீயே கற்பனை பண்ணி பயந்துக்கிட்டா.. அதுக்கு நாங்க பொறுப்பாக முடியாது."

லீலாவுக்குத் துக்கத்திலும் ஒரு ஆச்சர்யம்.. தான் அழுதால் 'சரண்டர்' ஆகி விடுகிற வழக்கத்திலிருந்து மாறி முதன் முதலாக ஒரு ஆட்சேபக் குரல்.

"என்னடி எதுத்துப் பேசுற?"

"அவ எதித்துப் பேசலை... நம்ம குடும்ப நிலைமை தெரிஞ்சு நாங்க எவ்வளவோ அமைதியா இருக்கோம்மா... நீ தேவையில்லாம இப்படிச் சங்கடப்படற" என்றாள் அம்சவேணி.

"ஒருத்தியைப் பெத்திருந்தா பரவாயில்லைடி... மூணு பேரு நீங்க. அதாண்டி என் கவலை" என்றாள் லீலா கண்களைத் துடைத்தபடி.

சற்று நேரம் அமைதி நிலவியது. யாரும் பேசத் துணியவில்லை.

கடைசியாக லீலாவே பேசினாள்.

"இந்த வீரையன்கிட்டருந்தும்... அந்த நாலு பயலுக கிட்டயிருந்தும் இனிமே நீங்க விலகியே இருக்கணும்.. எவன் கிட்டயாவது, எவளாவது பேசினீங்க.. நான் தூக்குல தொங்கிடுவேன்" என்றாள் தீர்மானமான குரலில்.

(தொடரும்)

# மானுடம்

கே.ஜி.ஜவஹர்

"என்னதான் சொல்லு, அந்தக் காலத்து ஆட்கள் மாதிரி இப்ப இல்லடா... சுயநலம், கோபம்... அடிதடி ரகளை..!ச்சே... மானுடம் சுத்தமா செத்துப் போச்சு... மனுஷனுக்கு மனுஷன் கருத்து வேறுபாடுகள் இருக்கலாம்... ஆனா அடிப்படையா மனித நேயம்னு ஒண்ணு இருக்கணும்டா... அப்பத்தான் ஒவ்வொரு மனுஷன் மனசுலயும் சந்தோஷம் வரும்... தனிமனித சந்தோஷம் குடும்ப சந்தோஷமா மாறும். குடும்ப சந்தோஷம் சமுதாய மகிழ்ச்சியாக பரிணமிக்கும்... சமுதாயம் மகிழ்ச்சியாக இருந்தால் மறுபடியும் தனிமனிதன் சந்தோஷமாக இருப்பான்... இது ஒரு வட்டம்..!"

பரமேஸ்வரன் சீவலை மென்று கொண்டே சீலனிடம் பேசிக் கொண்டிருந்தார். ஆபீஸ் கிளம்பும் நேரத்தில் இப்படி ஒரு தர்க்கத்தில் மாட்டிக் கொண்ட சீலனுக்கு எரிச்சல் வந்தது.

"போங்க தாத்தா. அது அந்தக் காலம். இது இந்தக் காலம். அந்தக் காலத்துல காய்ச்சல் வந்தா கம்பவுண்டர் தர ஒரு அவுன்ஸ் தண்ணி மருந்துல குணமாகிடும். இப்ப அப்படியா..? டாக்டர் கன்ஸல்டேஷன், லாப் டெஸ்ட், 'ஆன்டிபயாடிக்' என்று நூத்தம்பது ரூபாய் முழுங்கிட்டுதான் ஃபீவரே இறங்குது... சும்மா பேசிக்கிட்டு இருக்காதீங்க..!"_ என்றான் அவசரம் அவசரமாக ஷூ லேசுகளை இறுக்கிக் கொண்டே.

கதகதப்பான டிஃபன் பாக்ஸை அவன் கைகளில் திணித்த பூரணி, கண்ணைக் காட்டி விட்டுச் சென்றாள். இதன் அர்த்தம், 'ஆபீஸிற்கு நேரமாச்சு... சும்மா வளவளன்னு பேசிக்கிட்டு இருக்காதீங்க' என்பதாகும்.

வேகமாக வெளியே வந்தான் சீலன். ஸ்டார்ட் செய்வதற்காக வண்டியை எடுக்கும்போது...

"மைகாட்!"



பூரணி டாட்டா காட்ட வந்தாள், "என்னாச்சுங்க?" என்று பதறிவிட்டாள்.

"டயர் பங்சர்! இப்ப என்ன செய்யறது?"

"என்னவாவது செய்யுங்க... மணி இப்பவே ஒன்பதரை!" என்ற பூரணி டென்ஷனுக்குத் தூபம் போட்டாள்.

வசதிகள் அதிகமாக அதிகமாக பிரச்னைகளும் அதிகமாகின்றன. இன்றேல் இப்படி ஒரு நிலை ஏற்பட்டிருக்குமா?

'சீக்கிரம் ஆபீஸ் போகலாம்..' என்று

## ஜயப்பேரிகை!

காட்சிக்கு வைக்கப்பட்டது மூன்றே நாட்கள் என்றாலும் சமீபத்தில் நிறைய பார்வையாளர்களை வசீகரித்த ஓவியங்கள் மாரி ஆனந்துடையவை. ரஷ்ய கலாசார மையத்தில் ஜயபேரிகை ப்ளஸ் தூரிகை என்ற தலைப்பில் மையங் கொண்டிருந்த இவரது



ஓவியங்கள், பாமரனுக்கும் புரிகிற யதார்த்தமும், நவீனமும் கலந்த கண்கவர் வண்ணக் கலவை. ஒவ்வொரு ஓவியத்திற்கும் பாரதியின் புகழ்பெற்ற வரிகள்தான் அடிப்படை என்பது ஆனந்த் ஓவியங்களின் சிறப்பு. 'காக்கை குருவியெங்கள் ஜாதி - நீர் கடலும் மலையும்



எங்கள் கூட்டம்' என்ற வரிகளுக்கு, ஒரு இயற்கை காட்சிதான் ஓவியம். பாரதியின் மீசை பறவைகளாக அணிவகுக்க, அவனது நெற்றிப் பொட்டுதான் சூரியன்! வானத்து வெண் மேகங்கள் அந்த முண்டாசுக் கவிஞனின் தலைப்பாகை!

— ஜெ.

படம்: ராஜன்

நினைத்து 'பூஜ்ய' வட்டியில் மாதம் 999ரூபாய் தவணையில் ஒரு பைக் வாங்கினால் இப்போது அதுவே அவன் ஆபீஸ் போவதற்கு லேட்டாக்கிவிடும் போல் இருந்தது.

லேட்டாகப் போனால் கூட சமாளித்துவிடலாம். ஆனால் செக்ஷன் ஆபீஸரின் கோர முகத்தைத்தான் சகிக்க முடியாது. பல்லை நறநறப்பார். மாஸ்க் மனிதனின் பச்சை நிற முகம் நினைவுக்கு வரும்... ஃபைலை தடார் என்று அடிப்பார்.

அவசரம் அவசரமாகக் கிளம்பி மெயின் ரோட்டுக்கு வந்தால்தான் தெரிகிறது ஒருவருக்கும் அவன் பிரச்னை தெரியவில்லை என்று. லிஃப்ட் கேட்டு கேட்டு அலுத்துப் போய் கட்டை விரல் கூட 'ஸ்டிஃப்'ஆகிவிட்டது.

இந்த லிஃப்டை நம்பாமல் இருந்திருக்கலாம். பஸ்கள் வேறு ஓடவில்லை. அவை 8க்கும் 33க்கும் இடையில் மாட்டிக் கொண்டு டிப்போக்களில் முடங்கிவிட்டதாக தகவல் சொன்னது. ஆட்டோவை நிறுத்தினான். அவன் கேட்ட தொகை அடிவயிற்றில் புளி கரைத்தது.

வாட்சைப் பார்த்தான். மணி ஒன்பதே முக்கால். 'சரி இன்றைக்கு மண்டகப் படிதான்..' என்று நினைத்தவன் பத்தரைக்குள் போனாலாவது பஸ் ஸ்ட்ரைக்கைக் காரணம் காட்டித் தப்பிக்கலாம் என்று நினைத்தான்.

ஆனால் அதுவும் முடியாது போலிருக்கிறதே?

நடையின் வேகத்தை மேலும் கூட்டுகையில் கிரீச் கிரீச் என்று பின்னால் சப்தம். கூடவே "தம்பீ!" என்ற குரல்.

திரும்பினான்.

தும்பைப் பூவாய் நரைத்த தலை. பொக்கை வாய். நல்ல தூய வெள்ளை அரைக்கை ஷர்ட். மல் வேஷ்டி. கண்களில் கனிவு.

ஒரு கிழவர் நின்று கொண்டிருந்தார்!

"தம்பி... எல்லார்கிட்டயும் கை நீட்டி நிறுத்தினீங்க... யாரும் நிக்கல... பார்த்துக்கிட்டுதான் வந்தேன். அவசரமா போறீங்க போலிருக்கு... வாங்க தம்பி டபுள்ஸ்ல போலாம்..." என்று சிரித்தார்.

சேகரால் தன் கண்களை நம்ப முடியவில்லை. ஆகா... மானுடன் இத்தனை அழகா!

‘தலையலங்காரம் புறப்பட்டதே’ என்று பாடி மாட்டிக் கொண்ட அம்பிகாபதி பற்றி உங்களுக்குத் தெரியும். ‘தலையலங்காரம் புறப்பட்டதே’ என்று பார்க்கப் போய் மாட்டிக் கொண்டவர்களின் நிலை தெரியுமா? தெரியாவிட்டால் என்னுடன் ‘வர்ல்ட் ட்ரேட் சென்டருக்கு’’ (அட... மும்பையில் உள்ளது தாங்க) பயணியுங்கள்.

சர்வதேச கண்காட்சிகள் நடத்துவதில் பழைமையும் பிரசித்தியும் பெற்ற ‘Messe Frankfurt’காரர்களால், அண்மையில் நடத்தப் பட்ட, ப்யூட்டி அண்ட் ஹெல்த் இந்தியா ட்ரேட்ஃபேர் நடந்த முதல் மாடியில் நுழை யுங்கள். அங்கே...

ஐரோப்பிய ராஜா ராணி, இளவரச - அரசிகளின் ‘முடி’யிலும், ஐரோப்பிய சினி ஸ்டார்களான ஜுலியா ராபர்ட்ஸ், ஜீடி ஃபாஸ்டர், கேதரின் டெனூவா (இன்னும் பெரிய லிஸ்ட் உண்டு... யாருக்குப் புரியப் போகிறது?), ஸுப்பர் மாடல்களான நவோமி காம்ப்பெல், க்ளாடியா ஷிஃபர், லிண்டா ஈவான்ஜலிஸ்டா, ஓபரா ஆட்டக்காரர்கள். இத்யாதிகளின் சிகையில் சித்து வேலைகள், செய்தவருமான, உலகப் பிரசித்தி பெற்ற ‘ஹேர் ப்யூட்டி ஸ்டைலிஸ்ட்’ யுடோ வால்ஸுடைய வர்க்ஷாப்புக்குள் நுழைந்தோம்.

ஜெர்மன் டாக்டர் விக்டோரியா காரீப், சருமம் சுருங்காமல் என்றும் இளமையாய் இருப்பது எப்படி? என்று லெக்சரடித்துக் கொண்டிருந்தார். வைட்டமின் சி, ஈ ஐக் காட்டிலும் சக்தி வாய்ந்த மெலடோனின் புகழை அவிழ்த்துவிட்டார் அம்மையார். சுற்றுச் சூழலினால் நம் தோலுக்கு ஏற்படும் பாதிப்பை, ஃபேஸ் க்ரீமும், பாடி லோஷனும் எப்படித் தடுத்து, நம்மை என்றும் பதினாறாக வைத் திருக்கும் என்பதை விவரித்தார்.

வயதைக் கேட்டால் கண்ணடித்துச் சிரித் தார். ஒரு பெண்மணி, ‘‘30 இருக்குமில்லை?’’ என்றதும் பெரிதாகச் சிரித்தார். (ப்ரெஸ்காரர் கள் குறிப்பில் அவர் வயது 34 என்றிருந்தது) முடிவில் ‘இவர் 4ம் நம்பர் ஸ்டாலில் இருப் பார். நட்போடு சிரித்தால் அன்போடு க்ரீம்

# தலையை மிருதங்க மாச

தருவார்’ என்று அறிவித்ததும், மற்ற ஸ்டால்கள் ஈயடிக்கையில், 4ம் நம்பர் ஸ்டால் களை கட்டியது. ஒரு பாட்டி லையோ சாஷேவையோ இலவசமாக எதிர் பார்த்துச் சென்ற கூட்டத்திடம், அழகான பாட்டிலை நீட்டி, ‘குங்குமம் இட்டுக் கொள் ளுங்கள்’ என்பதுபோல், ‘க்ரீமை எடுத்துக் கொள்ளுங்கள்’ என்றார். வழிந்து கொண்டே அனைவரும் கொஞ்சம் முகத்திலும், கையிலும் தடவிக் கொள்ள ‘சரி... ஒன்றை வாங்கித் தான் பார்ப்போமே’ என்று விலை கேட்டால், மூவா யிரத்து ஐந்நூறு என்றார்கள். (டைகர் பாம் சைஸ் பாட்டில்!)

ப்ளஸ் ஒன், டூ, என்று அக்கம் பக்கத்து ஸ்டால்களில் நிறைய ஸ்விஸ் க்ரீம்கள், நரிஷிங் க்ரீம்கள், டோனர்கள், நீண்ட நேரம் நிற்கும் லிப்ஸ்டிக்குகள், பர்ஃப்யூம்கள் (ஆர்சீஸ் பழவாசனையில் ஒன்றும், பூவாசனையில் ஒன்றுமாக இரண்டை அறிமுகப்படுத்தினர்). ஒரே வாரத்தில் பற்களை வெண்மையடிக்கும் ஒயிட்டனிங் க்ரீமிலிருந்து ஒரே நிமிஷத்தில் நகத்தை சுத்தப்படுத்தும் டிஷ்யூ பேப்பர் வரை (ஆறு ரூபாய் தான்!)... நிறைய அழகு சாத னங்கள். எல்லாம் இயற்கை பொருள்களிலிருந்து (பூ, பழம், இலை...) தயாரிக்கப் பட்டவை, கெமிக்கல்கள் குறைவு என்பது நிறைவான விஷயம்.

கேரள ஹெல்த்



• ஜெமீமா நாக்பால்

• யுடோ வால்ஸ்

ரிசார்ட்டுகள், ஆயுர்வேத மஸாஜ் சம்பந்தப் பட்ட ஸ்டால்கள் இருந்தன. ‘தாஜ்’காரர்கள் வைத்திருந்த ஒரு மஸாஜ் பார்லரில் கொஞ்சம் ‘க்யூ’ இருக்கவே, என்னவோ இலவசம் என்று மோப்பம் பிடித்துச் சென்ற இந்திப் பத்திரிகை யாளர் ஆர்த்தி, ‘தலைக்கும் பாதத்துக்கும்



• மாடலுடன் யுடோ வால்ஸ்

இலவச மஸாஜ்' என்று வருத்தத்தோடு திரும்பினார்.

பார்த்தால்... மஸாஜ் செய்யப்பட்ட பெண்ணின் பாதங்கள், 'அனிச்சமும் நெருஞ்சிமுள்'ளாக பாவிக்கக் கூடிய பஞ்சுப் பொதிகள். அதை அழுத்தி, பிசைந்து, இதமாகத் தட்டி, சுளுக்கெடுத்து, விரல் நீவி விடுவதைப் பார்ப்பதே சுகமாயிருந்தது. தலையை மிருதங்க மாக்கியப் பெண்களுக்கும், ஷாம்பூ பரந்த கிராப்புத் தலை! என் எண்ணெய் வடியும் தலையையும், வெடிப்புகள் கொண்ட பாதத்தையும் நீட்டவே பயமாயிருக்கிறதே' என்று ஆர்த்தி நொந்து கொண்டார்.

அழகு சம்பந்தப்பட்ட மாகஸீன்களுக்கும் ஸ்டால்கள் இருந்தன. திருமண உடைகளை,

## ிய பெண்கள்!

கண்கவர் புகைப்படங்களுடன் அள்ளித் தந்த ஒரு 80 ரூபாய் இதழை, பலர் புரட்டிப் பார்த்தனர்.

அட... ரவுண்ட்ஸ் முடியவும் இரண்டடிக்கவும் சரியாக இருக்கிறதே! யுடோ வால்ஸின் வர்க்ஷாப்புக்கு விரைவோமா?

அங்கே நாலு பெண்கள், தலையை இவரிடம் கொடுக்கத் தயாராய் நாற்காலிகளில் காத்திருந்தார்கள். கழுத்தில் மாலை எல்லாம் போட்டுக் கொண்டு, கூடவே ஆக்னீயா என்ற ஜெர்மன் சூப்பர் மாடலை அழைத்துக் கொண்டு, அட்டகாசமாக உள்ளே நுழைந்தார் யுடோ.

ஒரு பெண்ணுக்கு 'தாஜ்'ஜிலிருந்து வந்திருந்தவர் முடிவெட்ட, மற்றவர்களை யுடோ கவனித்துக் கொண்டார். சருக், சருக்கென்று, நிமிட நேரத்தில், கத்திரியை இரு விரல்களிலும், சீப்பை இரண்டிலுமாக செருகிக் கொண்டு, மற்றொரு கையில் ஸ்ப்ரே'யைப் பீசுக்கிக் கொண்டு, லாகவமாக வெட்டித் தள்ளினார். அந்தப் பெண்களைக் குனியச் செய்து, தலையைச் சிலுப்பி விட்டார். அழகாக, பளபளவென்று, ஒரே சீராக இருந்த முடி, காச் மூச் சென்றானது.

கடைசிப் பெண்ணுக்குச் சுருள் முடி. அதில் ஒரு குருவிக் கூட்டைக் கட்டினார். மரக்கிளை போன்ற ஏதோ ஒன்றை எடுத்துச் செருகினார். (இரண்டு குருவிகளையும் விட்டிருந்தால் குடித்தனமே ஆரம்பித்திருக்கும்.) அதனிடம் வந்து, தலையை ஒரு உலுக்கு உலுக்கினார். அதுவும் கலைந்தபின், நால்வரையும் நிற்க வைத்து, ஒவ்வொருவரிடமும் வந்து, 'பட்பட்'டென்று கைதட்டினார். 'என்னடா இது, சுயபாராட்டா?' என்று நாங்கள் விழிக்கையில், கையில் தடவியிருந்த க்ரீமைக் காட்டினார். அதை ஒரு தூரத்திலிருந்து தட்டினால், தலைமுடியில் அது தெறித்து, அழகு சேர்க்குமாம். பிறகு எல்லோரையும் பார்த்து ஒரு பெருமிதச் சிரிப்புடன், 'ஓ.கே. டன்' என்றார். ('அன்புடன்' என்றால் பொருத்தமாயிருந்திருக்கும்!) கூட்டம் கைதட்டியது!

பிறகு டாக்டர் கீதா பாண்ட்யா ஹார்மோன்களின் ஒழுங்கீனம் பற்றி ஒரு மணி நேரம் போரடித்தார் - ஸாரி லெக்சரடித்தார். 14 வயதில் ஒரு பஞ்சாபிப் பெண்ணுக்குத் திடீரென்று ஹார்மோன் கோளாறால் உடம்பெல்லாம் முடி வளர, அவர் ஆணாகி விட்டதாக வீட்டில் எல்லோரும் புலம்ப, இவரது ஆபரேஷனால் அந்த முடி உதிர்ந்த கதை மட்டும் கொஞ்சம் வினோதமாயிருந்தது. 'மோக்ஷா'வைப் பற்றிய அடுத்த வர்க்ஷாப் கான்சலாகி விட்டது. மோட்சத்தையே அடைந்த நிம்மதியில் பலர் மூட்டை கட்டிவிட்டனர்.

முந்நூறு ரூபாய் நுழைவுக் கட்டணமும் நூறு ரூபாய் வர்க் ஷாப் கட்டணமும் கட்டி வந்தவர்களுக்கு எப்படி இருந்திருக்குமோ என்று ஒரு பக்க கவலை. ஆனால் மறுபக்கம் திருமதி ஷம்மி நாக்பால் (எம்.டி., ஃப்ராங்க்பர்ட் - இந்தியா) இதைப் பெரிய வெற்றி என்கிறார். உலக அரங்கில் நல்ல வரவேற்பு என்கிறார். ஆன்ட்ரூஸ் லிஷ்ஷர் எனும் இக்கம்பெனியின் சர்வதேச டைரக்டர் 500க்கு மேற்பட்ட என்கொய்ரிகள் வந்துள்ளன என்கிறார். இருக்கலாம்... இருக்கட்டும்... நன்மையே நடக்கட்டுமே... அழகும் ஆரோக்யமும் பெருகட்டுமே...

- ஜெயஸ்ரீ ராஜ்

# "சங்கீத நூலில் சிக்கல்கள்"

'நூல்களை வெளியிடுவதென்பது கலபமான விஷயமல்ல' என்பதுதான் பெரும்பாலான பதிப்பகங்களின் முறையீடு. அதிலும் சங்கீதம் தொடர்பான நூல்களை வெளியிடுவதென்பது அதிகக் கடினமானது என்பது தெரிந்ததுதான். ஆனால் இசைப் புத்தகங்களை வெளியிடும் ஒருவரை சந்தித்துப் பேசிய போதுதான் அதில் நாம் நினைத்ததைவிட அதிக அவஸ்தைகள் உண்டு என்பதை அறிய முடிந்தது.

சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான முத்துஸ்வாமி தீட்சிதர் எழுதிய பாடல்களைத் தொடர்ந்து பதிப்பித்து வருகிறார் வீணைக் கலைஞரான கல்லிடைக்குறிச்சி வெங்கடேசன்.

"இன்று தீட்சிதரின் பாடல்கள் மக்களுக்குக் கிடைத்துள்ளன என்றால் அதற்கு என் அப்பாதான் காரணம். முத்துஸ்வாமி தீட்சிதரின் தம்பி மகன் சுப்பராம தீட்சிதர். அவரது மகனான அம்பி தீட்சிதரிடம் பாடல்களை ஓலைகளில் எழுதிப் பாதுகாப்பாகப் புதைத்து வைத்திருந்தார்கள் அந்தக் குடும்பத்தினர். பாடல்கள் சமஸ்கிருதத்தில் எழுதப்பட்டவை என்றாலும் அவற்றை அப்படியே (மொழிபெயர்த்தல்ல) தெலுங்கில் எழுதியிருந்தார்கள்.

"கும்பகோணத்தில் காஞ்சிப் பெரியவர் இருந்தபோது அங்கே ஆஸ்தான வித்வானாக விளங்கிய என் அப்பாவிடம் 'முத்துஸ்வாமி தீட்சிதரின் கீர்த்தனைகளை புஸ்தகமாகப் போடு. பலரையும் அவரது பாடல்கள் அடையணும்' என்றார். ஓலைகளிலிருந்து எழுதுவதென்பதே சிரமமான காரியம்தான். தெலுங்கில் கிரந்தத்தில் எழுதப்பட்ட சமஸ்கிருதப் பாடல்களை, உச்சரிப்பு மாறாமல் தமிழில் எழுவதென்பதே ஒரு பெரிய கலை. எனினும் காஞ்சிப் பெரியவர் சொன்னதுக்காக என் அப்பா இந்தப் பணியை லாப நோக்கமில்லாமல் செய்தார். என் அப்பா தொடங்கிய பணியை நானும் பின்பற்றி வருகிறேன்" என்கிறார் வெங்கடேசன்.

தனது பதிப்பகமான மியூசிக் புக்ஸ் பப்ளிஷர்ஸ் மூலமாக 'முத்துஸ்வாமி தீட்சிதர் கீர்த்தனமாலா (16 பாகங்கள்)' வெளியிட்டிருக்கிறார். சமீபத்திய நூல் 'ஸங்கீத கான போதினி.'

"தொடக்க காலத்தில் இசைப் புத்தகங்களை வெளியிடுவதற்கு உகந்த அச்சகமே இல்லை. ஏனென்றால் கர்நாடக இசை நூல்களை வெளியிட சில ஸ்பெஷல் அமைப்புகள் வேண்டும்.

உதாரணமாக 'ஸ' என்ற எழுத்தின் மேலே இரண்டு புள்ளிகளை வைத்தால் அதை அதிதார ஸ்தாயியில் பாட வேண்டும் என்று அர்த்தம். 'ஸ'வுக்குக் கீழே ஒரு புள்ளி என்றால் மந்த்ர (கீழ்) ஸ்தாயி.

'ஸ' என்ற ஸ்வரத்தின் மேலே ஒரு கோடு போட்டால் அந்த ஸ்வரம் எந்த காலத்தில் உபயோகப்படுகிறதோ அந்தக் காலத்தில் பாதி அளவாகும். ஸ்வரங்களின் மீது '~ ~~ ~' என்ற வளைவுக் கோடு இருந்தால் அது அந்தப் பகுதியை 'கமகமாகப்' பாட வேண்டும் என்பதற்கான அடையாளம். இந்த வளைவுகளைக் கையிலேயே போட்டுக் கொடுக்க வேண்டி வந்தது.

பழம், பஜனை, பலம் ஆகியவற்றில் ஒவ்வொரு வார்த்தையிலும் வெவ்வேறு விதமாக உச்சரித்தாலும் 'ப' என்ற ஒரே எழுத்தைத்தான் பயன்படுத்துகிறோம். நமக்குப் பழகிய மொழி என்பதால் நம்

மால் இந்த வார்த்தைகளைச் சரியாக உச்சரிக்க முடிகிறது. ஆனால் சங்கீத நூல்களில் தெளிவான உச்சரிப்பையும் தெரிவிக்க வேண்டியிருக்கிறது. சமஸ்கிருதம் போன்ற பெரும்பாலான பிற இந்திய மொழிகளில் 'ப' போன்றே பல எழுத்துக்களை நான்கு விதமாக எழுதுவார்கள். ஒவ்வொன்றுக்கும் ஒருவித உச்சரிப்பு. எனவே நாங்கள் உச்சரிப்பும் புரிய சில பிரத்யேகக் குறிகளைத் தர வேண்டியிருக்கிறது.

கம்ப்யூட்டர் அச்சகத்தில் (DTP) மூன்று ப்ரூஃப் பார்ப்பதற்குள் (இசை நூலென்றால் மூன்று ப்ரூஃப் நிச்சயம் தேவை) 'டோனர் போயிடுமே சார்' என்று அங்கலாய்த்துக் கொள்வார்கள்.



# ...ன்றய.!”

ஒரு ஆர்ட் போல சங்கீத நூலை உருவாக்குவது சிரமமான, அதிக நேரம் எடுத்துக் கொள்ளும் விஷயம். அதுவரை கர்ப்ப வேதனைதான். எழுதிய பிறகு அதை அச்சு வடிவில் பார்க்க ஆறு மாதங்களாகும்.

நல்லவேளையாக 1986ல் ஃபோட்டோ டைப்செட்டிங் வந்துவிட்டது. புரோமைடு தாள்களில் (நீளமாகக் கோவணம் போல்) ப்ரூஃபை அச்சடித்துக் கொடுப்பார்கள். எந்த அளவு எந்தப் பக்கத்தில் இடம் பெறும் என்பதே தெரியாது.

அடிக்கடிப் பிரித்துப் படிக்கப்படும் நூலென்பதால் செக்ஷன் பைண்டிங்தான் செய்ய வேண்டும். இப்போது சுலபமாக இருக்கும் 'பெர்ஃபெக்ட் பைண்டிங்'கை விட இது சற்று அதிக விலையாகும்.

இவ்வளவு சிரமங்களுக்கு நடுவே புத்தகத்தைக் கொண்டு வந்து அதில் ஏதாவது சின்ன தவறு இருந்தால் சங்கீத உலகத்திலிருந்து கடுமையான விமரிசனங்கள் வந்து சேரும்.

தவிர வரவர தமிழ் படிக்கும் மாணவர்கள் குறைந்துவிட்டனர். ஆனால் சங்கீதத்தில் ஆர்வம் இருக்கிறது. ஆங்கிலத்தில் புத்தகம் போடுங்களேன் எனும்போது அவர்கள் விருப்பத்தையும் பூர்த்தி செய்ய வேண்டியிருக்கிறது.

புத்தகங்களைச் சரியான முறையில் பாதுகாத்து வைத்துக் கொள்ள இடம் இல்லை. எனவே இதற்காக ஒரு கிடங்கை வாடகைக்கு எடுத்துக் கொண்டிருக்கிறேன். இதுபோன்ற செலவுகளும் உண்டு.

வீடு தொடர்பான வழக்கொன்றில் என் வழக்கறிஞர் செய்த குளறுபடி காரணமாக ஒரே நாளில் என் வீட்டைக் காலி செய்யும்படி ஆனது. வண்டியிலேற்றுவதற்காக திண்ணையில் வைக்கப்பட்டிருந்த சங்கீதப் புத்தகங்களில் சுமார் 30 சதவீதத்தை யாரோ திருடிக் கொண்டு போய்விட்டார்கள். அப்போது நான் பட்ட வேதனை கொஞ்சநஞ்சமல்ல.

இவ்வளவையும் மீறி இது போன்ற நூல்களை நான் தொடர்ந்து கொண்டு வருவதற்குக் காரணம் என் அப்பாவுக்கு நான் செய்து கொடுத்த வாக்குறுதிதான். இப்போது என் சகோதரி மகனிடம் நான் இதேபோன்ற வாக்குறுதியை வாங்கிக் கொண்டிருக்கிறேன், எனக்குப் பிறகு இந்தப் பணியைத் தொடர வேண்டுமென்று!”

- ஜி.எஸ்.எஸ்.

படம்: வெங்கடேஷ்

காஞ்சி கவுல். கொலம் பஸ் படநாயகி. இயக்குனர் தன் கதைக்கான நாயகியைத் தேடி. மும்பை, கொல்கத்தா என்று ஆறுமாதம் அலைந்து விட்டு களைப்புடன் சென்னை திரும்பி, அறை யில் இருந்த தொலைக் காட்சியை முடுக்கிவிட்டு அமர்ந்திருக்கிறார். மதுரை ராஜ்மஹால் ஜவுளி விளம் பரத்தில் வந்த இவரின் முகத்தைப் பார்த்ததும் 'யுரேகா' என்று வாய்விட்டுக் கத்தாத குறை. உடனே தயாரிப்பாளர்கள் ராஜா கணேஷ், ஜி.கே.லோகநாதன் இருவரையும் சந்தித்து, கதா நாயகி ரெடி என்று சொல்ல, ஓகே. ஆனார் இவர்.

'கல்கியின் நாவல்கள்மீது எனக்கு அதீத காதல்' என்று சொல்லும் இயக்குனர், நாயகிக்கு 'வானதி'யின் பெயரையே வைத்துவிட்டேன் என்கிறார். படத்தின் நாயகன் ராஜு சுந்தரம்.

### வாராது வந்த நாயகி

குழந்தைப் பருவத்திலிருந்தே கன்னடப் படங்களில் நடித்துக் கொண்டிருக்கும் அனுபிரபாகர், சூப்பர் குட் பிலிம்ஸ் படம் என்றதும் ஒத்துக் கொண்டு கன்னடத்திலிருந்து தமி ழுக்கு வந்திருக்கிறார். நடிக்கும் படம் 'அற்புதம்'. இவர், அர் ஜுனின் உறவினர். அப்புறம் 'அற்புதம்' படத்தின் இயக் குனர் பெயர் அற்புதன்!

### நடிப்புக்குக் கிடைத்த வாய்ப்பு!

தமது 'ஏழுமலை' படத் திற்குக் கதாநாயகி கிடைக் காமல் காத்திருந்த அர் ஜுனுக்கு, எடிட்டர் மோகன் சிபாரிசு செய்த





முகம்தான் கஜாலா. தென்காசிப் பட்டணத்தின் தெலுங்கு ரீமேக் படத்தின் நாயகி. படத்தைப் பார்த்ததும் கஜாலா வின் நடிப்புக்காக ஓகே செய்திருக்கிறார் அர்ஜுன். கும்பகோணம், காரைக்குடி புதுக்கோட்டை ஆகிய இடங் களில் ஏழுமலை படத்தை ஒரே மூச்சில் கட்டுத் தள்ளிக் கொண்டிருக்கிறார்கள்.

### கதவைத் தட்டிய அதிர்ஷ்டம்!

அலாவுதீன் பட நாயகி அஷீமா விவகாரத்தில் அதிர்ஷ்டம் வீடு தேடி வந்து கதவைத் தட்டி யிருக்கிறது என்றால் பொருத்தம். படத்தின் இயக்குனர் ஒரு விளம்பர மாடலின் முகவரியோடு மும்பை சென்று அவ ரது வீட்டுக் கதவைத் தட்டியிருக் கிறார். கதவைத் திறந்து "அவர்கள் வீட்டைக் காலி செய்து கொண்டு போய்விட்டார்களே... நாங்க புது டெனன்ட்" என்று தகவல் தந் திருக்கிறார் அஷீமா! 'நீங்கள் என்ன செய்து கொண் டிருக்கிறீர்கள்.. நடிக்க விருப் பமா?" என்று இயக்குனர் கேட்க, அடுத்த கணம் ஓகே சொல்லியிருக்கிறார். பின்னே, பாலிவுட்டில் சினிமா வாய்ப்பு தேடிக் கொண்டிருந்த அஷீமா வுக்குக் கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்த மாதிரி ஆகி விட்டது!

- விஷுவல் தாசன்




# கோடம்பாக்கத்துக்கும் புக்க!

“செம்பூர் என்றால் (காஸ் செம்பூர்) (gas chembur) என்றுதான் நினைத்துக் கொண்டிருந்தேன்; அதை ஆர்ட் செம்பூர் (art chembur) ஆக மாற்றி விட்டீர்களே” என்று, எங்கள் முதல்வரே வியந்தாரென்றால்... கார் ஷெட்டிலிருந்து கலைக் கோட்டமாய்ச் செம்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் உயர்ந்த கதையை நாம் தனியாகச் சொல்ல வேண்டியதில்லைதானே? அங்கே வெகுகாலமாக வசித்த ருத்ர வீணைக் கலைஞரின் பெயரைத்தான், கட்டடம் எழுப்பி நிற்கும் வீதிக்குச் சூட்ட வேண்டும் என்று கிளப்பப்பட்ட காகிதப் புயலை ஊதித் தள்ளிவிட்டு, எல்லா கலைஞர்களின் - கலைகளின் சங்கமமான ‘ஃபைன் ஆர்ட்ஸ் சௌக்’ என்ற நாமகரணத்தையே முதல்வரும் கௌரவித்தார்.

தமிழர்களைத் தலை நிமிரச் செய்ய ஒரு ஷண்முகானந்தா தவிர, அதன் வழியில் இரண்டாவது இடத்தைப் பிடித்து விட்டதே செம்பூர் ஃபைன் ஆர்ட்ஸ்? இவர்களின் கனவுத்திட்டமான "Academy of fine Arts - College of Music & Dance" கட்டடத்திற்குச் சங்கராச்சாரியார் அடிக்கல் நாட்டியிருக்க, முதல்வர், கார்னர் ஸ்டோனைத் திறந்து வைத்து, கலைகளின் வளர்ச்சிக்கு ஆன்மிகம் - அரசியல், இரண்டின் கூட்டுறவும் எத்தனை அவசியம் என்பதை நிலை நாட்டினார். சுருக்காக வந்து, சுருக்காக விஸிட்டடித்து, நறுக்கென்று பேசி, விழாவை முடித்துவிட்டார். மேடையில் மராத்தியில் பேசிய தமிழர்களால் குஷியாகி, “உங்களுக்கு உதவி செய்ய நானாச்சு... இந்த மராத்திய அரசாச்சு” என்று மார் தட்டினார். சுபக்கென்று பிடித்துக் கொண்ட நம்மவர்கள், “ஷண்முகானந்தாவுக்குக் கொடுத்தது போல் ஒரு கோடி கொடுக்கவில்லை என்றால் பரவாயில்லை; இரண்டு கோடிகளாகவே கொடுத்து விடுங்கள்” என்று ஒரு கோடி காட்டினர். உழைப்பும், அர்ப்பணிப்பும் செம்பூர் ஃபைன் ஆர்ட்ஸ்காரர்களிடமிருக்கும்போது என்ன கவலை... கோடிகள் தேடி வராதா?

தேடி வந்தால் பெருமை, நாடிப் போனால் சிறுமை என்பது எல்லா விஷயங்களிலும் பொருந்த மாட்டேனென்கிறதே? விவேகானந்தா இங்கிலீஷ் ஸ்கூல் தலைமையாசிரியரையும், சோமையா காலேஜ் பிரின்சிபாலையும் தேடித்தான் பத்திரிகையாளர்கள் சென்றார்கள்.

# போனால் கால்வலி; போகாவிட்டால் தலைவலி!

‘முகமது ரஜாக் உங்கள் மாணவனாமே?’ என்று விசாரித்தார்கள். ‘ஆமாம்’ என்று



• விளக்கேற்றி...

பெருமைப்பட முடியவில்லையே அவர்களால்? செப்.11 அன்று, பிரிட்டிஷ் ஹவுஸ் ஆஃப் காமன்ஸில் விமானத் தாக்குதல் நடத்த, ஆஸ்பத்திரேலியாவிலும், யு.எஸ்.ஸிலும், லண்டனிலும் ட்ரெயினிங் எடுத்துக் கொண்டவனாமே இவன்? வாஷியில் பிடிபட்டபோது, ரஜாக்கே இந்த விஷயங்களைக் கக்க, 'ஆஹா... அல் கைதா பயங்கரவாதியைப் பிடித்துவிட்டோம்' என்று மும்பை போலீஸூம், சகன்புஜ்பலும் அக மிக மகிழ்ந்தனர். ஆனால் அந்தப் பெருமையை முழுதாக அனுபவிக்க விடாமல் ஆஸ்த்திரேலிய அமெரிக்க இன்டலிஜென்ஸ், முதலில் தாங்கள் வந்து விசாரித்து, உறுதிப்படுத்த வேண்டுமென்கிறார்களே? ராஜ் உண்மையில் அல்கைதா ஆளா? ஆல் கப்ஸா ஆளா? இவர்கள் இல்லாத மேடைகளில் எழுதாத நாடகத்தை அரங்கேற்றுகிறார்களா?



• கார்னர் ஸ்டோனைத் திறந்து வைத்து...

இல்லாத மேடையில் எழுதாத நாடகத்தை எல்லோரும் நடித்தால் கூட ரசிக்கலாம். ஆனால் இல்லாத வங்கிதனில் எழுதாத கணக்குக்குப் பணம் வசூலிக்கப்படுவதையும், எல்லோரும் ஏமாறுவதையும்தான் சகித்துக் கொள்ள முடியவில்லை. 'தாமன் அர்பன் கோ-ஆபரேடிவ் பேங்க்' என்று இல்லவே இல்லாத ஒரு வங்கி; அதைத் துவக்குவதற்கு வேண்டிய 311 கோடிகள் தன்னிடமிருப்பதாகவும், ஆனால் கட்டடம் கட்டப் பணம் இல்லை என்றும் நரிமன்கோலா என்பவன் புருடா விட, கோஸால்கர், ராவ் என்ற இரண்டு மாங்காய் மடையர்கள் நம்பினார்கள். அதற்குப் பணம் வசூலித்துத் தந்தால் அவர்களின் ஊறுகாய் பிசினஸூக்கு 35 லட்சம் கடன் தருவதாகக் கூறி, அதற்குரிய பத்திரத்தையும் (போகஸ்தான்) கொடுத்திருக்கிறான் கோலா. அதைக் காட்டியே, 'உங்களுக்கு 18% வட்டி தருகிறேன்' என்று 42 ஜோடி வாத்து மடையர்களிடம் பணம் கரந்திருக்கின்றனர் இந்த கேடிகள். லட்சங்களை இழந்திருக்கும் பலரும் வயசானவர்கள். கொஞ்ச நாள் வட்டி கொடுத்த பின், அசலோடு அம்போவாகிவிடவே போலீசிடம் தகவல் போயிருக்கிறது. அடிமேல் அடி அடித்தால் அம்மியும் நகரும்; ஆனால் அடிமேல் அடி வாங்கியும்கூட அம்மா அப்பாக்களுக்கு, இம்மியும் பணத்தாசை போக மாட்டேனென்கிறதே?

போகாவிட்டாலும் தலைவலி; போனாலும் கால்வலி என்று சில கேசுகள் உண்டு; நம் பவாரின் 61வது பிறந்த நாள் விழாவையே எடுத்துக் கொள்ளுங்களேன். அன்பு நண்பர் விலாஸ்ராவ் தேஷ்முக்கிற்கு அழைப்பிதழ் போயிருக்கிறது; சோனியா அம்மையாருக்குப் போகவில்லையே? (ம்க்கும்.... சோனியாவும்தான் இஃப்தார் பார்ட்டிக்குப் பவாரை அழைக்கவில்லை!) பார்ட்டிக்குப் போனால் அம்மையார் சீறுவார்; போகாவிட்டால் பவார் சீண்டுவார். முதல்வர் போக மாட்டாரா? போவாரா?

- ஜெயஸ்ரீ ராஜ்

# தேனிசை துய்க்கும் தணிகைப் பிரான்

குருஜி
ஏ.எஸ்.
ராகவன்

சிதம்பரத்துக்கு வடமேற்கே உள்ள மருதூர் கிராமம். அங்கே இராமையா பிள்ளை - சின்னம்மா என்றொரு தம்பதி. இவர்களுக்குப் பிறந்த மகன்தான் வடலூர் ராமலிங்க சுவாமிகள் அல்லது வள்ளலார். இவர் பிறந்தபோதே ஓர் அபூர்வ ஒளி தோன்றியதாகச் சொல்வார்கள்.

பள்ளிப் படிப்பில் மனம் செல்லாத இராமலிங்கம் பிள்ளை, சென்னையில், தம் மூத்த சகோதரனுடன் தங்கியிருந்தார். முருகப் பெருமானைச் சத்குருவாக வரித்து, தன் போக்கில் கல்வி பயிலத் தொடங்கினார். இவருக்குக் கல்வி கற்பிப்பதற்கென அமர்த்தப்பட்ட ஆசிரியர், பாடல் புனைகிற திறன் இவருக்கு இயல்பாகவே இருக்கக் கண்டார். கல்லாத ஒருவர் புனைந்த பாடல்கள் போல் அவை தோன்றவில்லை. தமக்கு இனி வேலை இல்லை என்று ஒதுங்கிக் கொண்டுவிட்டார் ஆசிரியர்.

இராமலிங்கம் பிள்ளை சரியாகப் படிக்கவில்லை என்று அவரது அண்ணாவுக்கும் மிகுந்த வருத்தம். ஒரு நாள் ராமலிங்கத்தை அழைத்து அண்ணியார் நல்ல புத்தி சொல்ல, "எனக்கொரு தனி அறை ஒதுக்கிக் கொடுங்கள் என்று கேட்டார் அண்ணியிடம். அவ்வாறே தனியறையும் ஒதுக்கப்பட்டது. அவ்வறையில் கண்ணாடி முன் தீபம் ஏற்றி வைத்து வழிபட்டு வந்த ராமலிங்கம், ஒரு நாள் அக்கண்ணாடியில் திருத்தணிகை முருகப் பெருமான் உருவினைக் கண்டு அவனால் ஆட்கொள்ளப்பட்டு அறிவும் தத்துவமும் வித்தைகளும் ஒருங்கே வரப் பெற்றார். தணிகைப் பிரானைக் கண்டதும் அவர் உள்ளத்திலிருந்து கவிதை மழை பொழிய ஆரம்பித்தது:

சீர் கொண்ட தெய்வ வதனங்கள்
ஆறும் திகழ் கடப்பந்
தார்கொண்ட பன்னிரு தோள்களும்
தாமரைத் தாள் களும்ஓர்
கூர்கொண்ட வேலும் மயிலும்நற்
கோழிக் கொடியும் அருள்
கார்கொண்ட வண்மைத் தணிகா
சலமும் என் கண்ணுற்றதே

அதன் பிறகு வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் ஏராளமான பாக்களைத் திருத்தணி முருகன் பேரில் இயற்றினார்.

திருத்தணிகை முருகனால் ஆட்கொள்ளப்பட்டு பாட்டு புனைய ஆரம்பித்த மற்றொரு மகான் முத்துஸ்வாமி தீக்ஷிதர். இவர் திருவாரூரில் பிறந்தவர். துறவி அல்லவென்றாலும் துறவில் நாட்டம் கொண்டவர். தமது குருவைப் பின் தொடர்ந்து காசி வரையில் சென்று அங்கே கங்கை நீரில் ஓர் அற்புத வீணை கிடைக்கப்பெற்று, குருவின் ஆணைப்படி மீண்டும் தமிழகம் வந்தார். "நீ திருத்தணிக்குப் போனாயானால், எடுத்த பிறவியின் பலன் கிடைக்கும்" என்று அவர் குரு கூறியபடி திருத்தணி மலையில் ஏறும் போது, ஒரு கிழவனார் இவரை "முத்துஸ்வாமி", என்று அழைத்து வாயைத் திறக்கச் சொல்லி, கல்கண்டைப் போட்டுவிட்டுப் போனாராம்.

அடுத்த கணமே, 'ஸ்ரீ நாதாதி குருகுஹோ' என்று தீக்ஷிதர் பாட ஆரம்பித்ததாகச் சொல்லுவார்கள். அந்த முருகனையே ஆன்ம குருவாக ஏற்றார். தமது கிருதிகளுக்கு 'குரு குஹ' என்று முத்திரையும் கொடுத்தார். திருத்தணி முருகன் மீது எட்டு கிருதிகள் பாடிச் சென்றார். விபக்தி கீர்த்தனைகள் என்று இவற்றுக்குப் பெயர்.

இவ்விரண்டு பெரியோர்களையும் இயக்கிவிட்டு அவர்கள் பொழிந்த தேனிசையையும் கவியமுதையும் துய்த்து நின்றவன்; இன்றும் எண்ணற்ற பக்தர்களை இயக்கிக் கொண்டிருக்கும் தணிகை வளர் முருகன் - இவனைக் காண திருவள்ளூர் மாவட்டம் செல்ல வேண்டும். எல்லைப் போராட்டமும் திருத்தணிகையைத் தக்க வைத்துக் கொண்ட வரலாறும் மூத்த தலைமுறையின் ஞாபகத் திரையில் வந்து போகும்.

திருத்தணிகைக்கு ஏன் இந்தப் பெயர்:? சூரபத்மனுடன் போர் செய்து வென்ற பிறகும் முருகப் பெருமானுக்குள் கோபம் தேங்கியிருந்ததாம். அந்தக் கோபம் அடியோடு தணிந்து அவன் அமர்ந்த தலம் என்பதால் திருத்தணிகை என்று பெயர். கந்த புராணம் இதைச் 'செருத்தணி' என்று குறிப்பிடுகிறது.



திருத்தணி நகர மையத்தில் சுமார் 400 அடி உயரம் கொண்ட சிறு மலை திருத்தணி. மலையடிவாரத்திலிருந்து, உச்சியிலுள்ள கோயிலை அடைய 365 படிகளை ஏறிக் கடக்க வேண்டும். ஓர் ஆண்டின் தினங்களைக் குறிக்கும் எண்ணிக்கை! இதனால் தானோ என்னவோ ஆங்கிலப் புத்தாண்டை வரவேற்க திருப்புகழ் திருப்படித் திருவிழா இங்கே மிகச் சிறப்பாக நடைபெறுகிறது. 1917ஆம் ஆண்டு இதைத் தொடங்கி வைத்தவர் வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதானந்த சுவாமிகள்.

மலைகளுள் சிறந்தது திருத்தணிதான் என்று சான்றிதழ் வழங்குகிறது கந்தபுராணம்:

விரையிடங் கொளும் போதினுள் மிக்க
பங்கயம் போல்
திரையிடங் கொளும் நதிகளிற் சிறந்த
கங்கையைப் போல்
தரையிடங் கொளும் பதிகளிற் காஞ்சி
யந்தலம் போல்
வரையிடங்களிற் சிறந்த(து) இத் தணிகை
மால் வரையே

மலர்களுள் தாமரையும், நகரங்களில் காஞ்சியும், நதிகளுள் கங்கையும் மலைகளுள் திருத்தணிகையும் முதன்மை இடம் பெறுகின்றன என்கிறது செய்யுள்.

மலையோடு போட்டி போட்டுக் கொண்டு அதன் அடிவாரத்தில் குளிர்ந்து பரவியிருக்கிறது சரவணப் பொய்கை.

'எத்துயர்த் திரளும் அத்தினத் தகற்றுஞ்
சரவணப் பொய்கை தடம்புனல்...'

என்று தணிகையாற்றுப்படை சிலாகிக்கிறது. எப்பேர்ப்பட்ட துயரைத் தாங்கி வந்தாலும் சரவணப் பொய்கையில் மூழ்கிய கணத்திலேயே அத்தனையும் தீர்ந்து போகுமாம்.

துயரையெல்லாம் தீர்த்தத்தில் தொலைந்துவிட்டு ஆனந்தத்தை மட்டும் உள்ளத்தில் தேக்கி மலை ஏறிப் போகிறோம். வழியில் பிரும்ம சுனை தீர்த்தம் இருக்கிறது. விநாயகர், பிரும்மலிங்கம் சன்னிதிகள் உள்ளன.

மலையின் உச்சியில் ரத வீதியாக நான்காம் பிராகாரம். அங்கே பக்தர்கள் கற்பூரம் சேர்ப்பிக்க ஒரு பெரிய கொப்பரை; இஸ்லாமியர்கள் இசைக் கருவிகள் வாசித்து இறை வழிபாட்டில் கலந்து கொள்ளும் நவாப் வாத்ய மண்டபம் என்று சில ஆச்சர்யங்கள் காத்திருக்கின்றன. காதர் என்ற நவாப்பின்

துன்பத்தைத் தணிகைப் பெருமான் களைந்த தன் நினைவாக இம்மண்டபம் அமைக்கப் பட்டதாம். பிரசன்ன காதரீஸ்வரர் என்ற பெயருடன் ஈசன் விளங்க ஒரு சிவாலயத் தைக்கூட நவாப் இங்கே எழுப்பியதாகச் சொல்லப்படுகிறது.

கிழக்கு வாசல் வழியே மேலும் பல படி கள் ஏறி மூன்றாம் பிராகாரத்துக்கு வந்தால் துவஜஸ்தம்ப விநாயகர், ஐராவதம் (இவர்தான் இங்கே வாகனம்) உமா மகேசு வரர் சன்னதி, உச்சிப் பிள்ளையார் என்று வரிசையாகப் பார்த்தபடி வலம் வரலாம்.

ஐராவதம் என்கிற தனது யானையை, தெய்வானை திருமணத்தின்போது சீராகத் தந்தான் இந்திரன். ஐராவதத்தைப் பிரிந்ததும் அவனுடைய செல்வம் குறைய ஆரம்பித்து விட்டதாம். கொடுத்த சீரைத் திரும்பப் பெற வும் முடியாது; ஐராவதத்தின் கடாக்ஷமும் வேண்டும். ஐராவதத்துக்கோ முருகனை விட்டுப் பிரிய மனமில்லை. ஆகவே ஐரா வதத்தைக் கிழக்கு நோக்கி இந்திர லோகத் தைப் பார்த்தவாறு நிற்கும்படி பணித்தாராம் முருகர்!

இரண்டாம் பிராகாரத்திலும் ஒரு நூதன சீதனம் உண்டு! முருகனுக்குச் சந்தனம் அரைப்பதற்கென்று இந்திரன் கொடுத்த கல்! தெய்வயானை கல்யாணம் தொட்டுச் சந்தனம் அரைக்கப்பட்டு வந்தாலும் இந்தக் கல் இன்னும் தேயாமல் இருக்கிறது! இதில் அரைக்கப்படும் சந்தனம்தான் தணிகை வேலனுக்கு மணமும் அழகும் சேர்த்துக் குளிர்விக்கிறது.

முதல் திருச்சுற்றுக்கு முன்னேறிச் செல்ல பஞ்சாக்ஷர படிகளைக் கடக்க வேண்டும். அங்கே வள்ளியம்மை சன்னிதியும் தெய் வானை சன்னிதியும் தனித்தனியே காணக் கிடைகின்றன.

கர்ப்பக்கிருஹத்தில் 'ஞானசக்திதரன்' என்ற தணிகாசலப் பெருமான் அழகே வடி வாகக் காட்சி தருகிறான். முருகன் என்றாலே அழகுதானே. அதிலும் ஞானமும் சக்தியும் சேரும்போது தேஜோமயமான அழகாக அல்லவா காட்சியளிக்கிறான்!

இடது கை தொடையில் பொருத்தியிருக் கிறது. வலக்கரம் வேலைத் தாங்கியிருக்கிறது. மயிலோ, ஒயிலான துணைவியரோ இன்றி தனிப் பெருங்கருணையனாக ஒளி வீசு கிறான். அவன் திருமார்பில் ஒரு சிறு பள் ளம்! தாரகாசுரனை வென்றபோது அவனிட மிருந்து திருமாலின் சக்கரத்தை மீட்டு,



பத்திரமாக மார்பில் பொதித்து வந்து திரு மாலிடம் திரும்பக் கொடுத்தானாம் முருகன். சக்கரம் தரித்த அடையாளம்தான் மார்பின் சிறு பள்ளம். இந்த வடுவில் / கெட்டிச் சந் தனத்தைப் பொருத்தியெடுத்து அடியவர் களுக்குப் பிரசாதமாக வழங்குகிறார்கள். தீராத வியாதிகளைத் தீர்க்க வல்லது இது என்கிறார்கள்.

இருமலு ரோகம் முயலகன் வாதம்
எரிகுண நாசி விடமே நீ
ரிழிவுவி டாத தலைவலி சோகை
எழுகள மாலை இவையோடே;
பெருவயி றீளை எரிகுலை சூலை
பெருவலி வேறும் உளநோய்கள்
பிறவிகள் தோறும் எனைநலி யாத
படிஉன தாள்கள் அருள்வாயே
.................
சலமிடை பூவின் நடுவினில் வீறு
தணிமலை மேவு பெருமாளே

என்று அருணகிரிநாதர் ரோகங்களின் பட்டியலே தந்து, எத்தனை பிறவியெடுத் தாலும் அத்தனையிலும் அத்தனை நோய் களும் அணுகாதிருந்திட அருள வல்லவன் என்று துதிக்கிறார் தணிகை வேலனை.

பெருமாள் கோயில்களில் சடாரி சாதிப் பது போல் முருகனின் திருப்பாதச் சின் னங்களை இங்கே அடியார்களின் தலையில் சார்த்தும் வழக்கமும் இருக்கிறது.

மும்மூர்த்திகளும் வந்து வழிபட்ட தலம் திருத்தணி. சிவன் இங்கே முருகனை

தியானித்து உபதேசம் பெற்றார். திருமால் வழிபட்டு தாரகாசுரனிடம் இழந்த சங்கு-சக்கரங்களைத் திரும்பப் பெற்றார்; பிரம்மா தணிகேசனைத் தொழுது சிருஷ்டித் தொழிலைப் புரியும் ஆற்றல் பெற்றான். இதையும் அருணகிரியார் பாடி வைத்திருக்கிறார்.

சிலைமகள் நாயன் கலைமகள் நாயன்
திருமகள் நாயன் தொழும் வேலா

தேவ லோகத்து நீலோத்பலக் கொடியை, (ஊதா நிறத்தில் மலரும், அல்லி போன்ற நீர்த் தாவரம்) தேவேந்திரன் எடுத்து வந்து மேல ரத வீதிக்குத் தெற்குப் பக்கத்திலுள்ள இந்திர நீல சுனையில் இட்டு வளரச் செய்தானாம். மூன்று வேளையும் புதிதாக இம் மலர் பூக்குமாம். அதைக் கொண்டு அவன் தணிகை முருகனைப் பூஜித்து மகிழ்ந்தானாம்.

அநவரத நீலமலர், முத்தெறிசு னைப் புனலில்
அருவிகுதி பாய்தருசெ ருத்தணி

என்று அருணகிரி நாதர் பூதவேதாள வகுப்பில் குறிப்பிடுகிறார்.

கிருத்திகை, கந்த சஷ்டி இங்கே சிறப்பாகக் கொண்டாடப்பட்டாலும் சூரசம்ஹார நிகழ்ச்சி கிடையாது. கூடை கூடையாக மலர்கள் கொண்டு வந்து முருகனுக்கு அர்ச்சிப்பதோடு சரி. கோபம் தணிந்து அமர்ந்த இடத்தில் அவன் ரௌத்திர நாடகத்தை மீண்டும் அரங்கேற்ற வேண்டாம் என்ற நோக்கமாக இருக்கலாம்.

மாசி மாதத்தில் வள்ளி கல்யாணமும் சித்திரை மாதத்தில் தேவசேனை கல்யாணமும் வெகு விமரிசையாக நடக்கும். மூலஸ்தானத்தில் தனியாய் இருக்கும் முருகன் உற்சவத் தோற்றங்களில் தேவியருடன்தான் காணப்படுகிறான். ருத்ராட்ச மண்டபம் என்ற அழகான பெயருடைய மண்டபத்தில் ஒரு முகம் நான்கு கைகளுடன் இருபுறமும் வள்ளி - தெய்வானை நிற்க ஒரு தோற்றம். மற்றொன்று இரு தேவியரும் அருகிருக்க, மயில் மேல் அமர்ந்த தோற்றம். இவர் ஆறு முகமும் ஈராறு கரங்களுமாகக் காணப்படுகிறார்.



"என் பெண்டாட்டியைத் திட்டுறியே, நீ மயக்கம் போட்டதும் அவதானே உன்னை ஆஸ்பத்திரிக்கு அழைச்சிட்டுப் போனா...?

"அவ என்னை அறைஞ்சதாலதானே நான் மயக்கம் போட்டதே!"

- சீர்காழி ரேவதி

நாரதர் கலகம் நன்மையில் முடிந்த தலம் இது. வள்ளிக் குறத்தியைப் பற்றி இவ்விடத்தில்தான் முருகனிடம் வந்து முதலில் பேசிச் சென்றிருக்கிறார் நாரதர். அதன்பிறகு முருகன் வேடனாகவும் கிழவனாகவும் வேடந்தரித்து தினைப்புனம் காத்த வள்ளியின் உள்ளம் கொள்ளை கொண்ட கதை அறிவோம்.

இந்த விசேஷத்தை முத்துஸ்வாமி தீக்ஷிதர் தமது ஸ்ரீசுப்ரமண்யாய நமஸ்தே என்ற கிருதியில் 'விஜயவல்லி பர்த்ரே' என்று குறிப்பிட்டுப் பாடியுள்ளார். இக் கீர்த்தனை குறிப்பிட்ட ஒரு ஸ்தலத்தைப் பற்றியது அல்ல; சகல ஸ்தலங்களிலும் உள்ள சுப்ரமண்ய மூர்த்தங்களைக் கொண்டாடுவதாகக் கொள்ளலாம்.

இந்த 'விஜயவல்லி பர்த்ரே' என்பதற்கு காஞ்சி முனிவர் அளிக்கும் விளக்கம் மிக அழகானது :

'விஜயவல்லீ' என்பது வள்ளிதான். 'அவளுடைய பர்த்தாவுக்கு (நமஸ்காரம்)' என்பதுதான் 'விஜயவல்லி பர்த்ரே'. வெற்றி வேலன் என்கிறபடி, அவனோடு ஜயம் விஜயம் (விசேஷமான ஜயம்தான் விஜயம்) எப்போதும் சேர்ந்திருக்கும். அவருக்கு இரண்டு பக்கங்களில் நிற்கிற பத்னிகளில் தேவஸேனைக்கு ஜயந்தி என்றே பெயர். மற்றவள் விஜயவல்லி, சுப்ரமண்யரைப் பற்றி ரொம்பவும் ஜனரஞ்சகமான விருத்தாந்தம் வள்ளி கல்யாணம்தான் அதிலேயே பரம வேதாந்தம் - இந்த்ரிய வேடர்களுக்கு நடுவில் சிக்கிக் கொண்டிருக்கிற ஜீவாத்மாவைப் பரமாத்மா விடுவித்துத் தன்னோடு அப்படியே சேர்த்துக் கொண்டுவிடுவதற்கு ரூபகமாக வள்ளி கல்யாணக் கதை இருக்கிறது.

வள்ளி கணவன் பேரை
வழிபோக்கர் சொன்னாலும்
உள்ளம் குழையுதடி - கிளியே
ஊனும் உருகுதடி!

- கிளிக் கண்ணியின் கொஞ்சு தமிழ் வரிகள், தணிகை முருகனின் தரிசனம் கிடைத்தபின் விசேஷ அர்த்தத்துடன் மனத்தை நிறைக்கின்றன!

(அடுத்த வாரம் : குமார வயலூர் குமரன்)

# கல்கி

## ஸ்ரீ கிருஷ்ண ஸ்வீட்ஸ்®

இணைந்து வழங்கும்

# இளைஞர் திருவிழா!

**நில், கவனி, வெற்றிகொள்!**

மனிதன், உலகம், இறைவன் என்ற மூன்று மட்டுமே அடிப்படை உண்மைகள். இவற்றுக்கு இடையே நிலவும் தொடர்பு தர்மமும் அதர்மமுமாக மாறி மாறி வந்தாலும், இறுதியில் எப்போதும் தர்மம் ஜெயிக்கும் என்றே நம்புகிறோம். ஆனால் கலி முற்றிய இந்தக் காலத்தில் எது தர்மம் என்பதே புதிராக இருக்கிறது. புதிரை அவிழ்க்க வருகிறார்கள் பண்பட்ட பேச்சாளர்கள்.



தலைப்பு :

## தர்மம்

இடம் :

காமராஜர் அரங்கம்,
தேனாம்பேட்டை,
சென்னை - 18

**25.12.2001**
காலை 10 மணி

பேச்சாளர்கள் : நகைச்சுவை அறிஞர் சோ. ராமசாமி

சிந்தனைச் செல்வர் கிருஷ்ண ராஜ வாணவராயர்

**அனைவரும் வருக, வருக! அனுமதி இலவசம்!**

# நடக்குமென்பார்

## மேஷம்

'வேண்டாத பெண்டாட்டி, கை பட்டா குத்தம், கால்பட்டா குத்தம்னு' இருந்த மேலதிகாரிகள், அனல்பட்ட மெழுகு போல உருகிப் போவார்கள். எதிர்ப்புகள் குறையும். மலை, காடு, இனங்களில் பணிபுரிவோர் ஏற்றம் காண முடியும். வெளி நாட்டுப் பயணம் அமைய வாய்ப்பிருக்கு. திரை கடல் ஓடியும் திரவியம் தேடுங்க. பெண்கள் நோக்கம் நிறைவேறும். மாணவர்கள் படிப்பில் முழுக் கவனம் அவசியம். தேடிப் போன மூலிகை காலில் பட்டது மாதிரி, வார இறுதியில் நல்ல விஷயங்கள் தேடி வரும்.

## ரிஷபம்

கூடி வாழ்ந்தால் கோடி நன்மைனு பழமொழியே இருக்கே! அதனாலே இந்த வாரம் யார்கிட்டேயும் வீண் வம்பு தும்புக்குப் போகாம, சுமுகமாப் பழகுங்க. கூரை ஏறி கோழி என்ன, வானம் ஏறி வைகுந்தமே போகலாம். கணவன் மனைவி உறவு சீராக இராது. சிறுசிறு சலப்பு இருக்கத்தான் செய்யும். வீட்டுக்கு வீடு வாசல்'னு மனசைத் தேத்திக்கிட்டு, விட்டுக் கொடுத்துப்போங்க. சிவனேனு இருந்தா சொர்க்கம் நமக்குள்ளேனு தெரிஞ்சுக்கிட்டு தைரியமா இருங்க.

## டிசம்பர் 19 முதல் 25 வரை

## மிதுனம்

'ஈயத்தைப் பார்த்து இளித்ததாம் பித்தளை'னு உங்களைக் கிண்டலா பேசிக்கிட்டிருந்தவங்க எல்லாம், அங்குசத்துக்கு அடங்கிப்போகும் ஆனை போல, பணிஞ்சு போவாங்க. அரசுப் பணியாளர்களுக்கு அனுகூலம் கிடைக்கும். விஞ்ஞானத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு வெற்றி கிடைக்கும். கைப் பொருள் பத்திரம். கேளிக்கை, உல்லாசங்களில் கலந்து கொள்ளக் கூடாது. கூட்டுத் தொழில் செய்பவர்கள் ராக்கோழி போல விழிப்பா இருக்கணும். உங்க சம்பளத்துல கொஞ்சம் தானம் தருமம் செய்யுங்க.

## சிம்மம்

ஜான் ஏறினா முழம் சறுக்குற கதையால்ல இருந்தது உங்க நிலைமை! ஆனா இனிமே பாருங்க. மந்திரத்துல மாங்காய் வரவழைக்கிற மாதிரி ஜம்முனு சிகரம் ஏறிடுவீங்க. நண்பர்கள், உறவினர்கள் தொடர்பு நன்மை அளிக்கும். வியாபாரிகள் வளர்ச்சி காண்பார்கள். கலைத்துறைக்காரர்களுக்கு நல்ல வரவேற்பு கிடைக்கும். கக்கு கண்ட இடத்துல பிள்ளை பெத்துக்குற மாதிரி, ஸ்பெகுலேஷன் துறையில சட்டுனு ஈடுபடாதிங்க. ஏழில் செவ்வாய் இருப்பது சிறப்பாகாது. முருகன் அருள் நிச்சயம்!

## கடகம்

தொப்புளுக்கு மிஞ்சின கஞ்சி தான் மொத்தத்துல உங்க வாழ்க்கை. நல்ல வசதி, பொருள் சேர்க்கை உண்டாகும். புளி போட்டுத் துலக்கின பித்தளைக் குடம் மாதிரி பளபளப்பா ஆயிடுவீங்க. மக்கள் மூலம் நன்மைகள் கிடைக்கும். கறுப்பும், கரு நீலப் பொருள்களும் ஆதாயம் கொண்டு வரும். செவ்வாய் 8ல், 12ல் குரு என்பதால், விபத்து, அடிகிடினு ஏதாவது ஏடாகூடமாக ஆகலாம். வாய் புளிச்சதோ, மாங்காய் புளிச்சதோனு வாக்கு வாதம் பண்ணாமே, எச்சரிக்கையா இருங்க.

## அக்னிசர்மா பக்கம்

## கன்னி

தவிடு தொட்டாலும் தங்கமா மாறுகிற ராசியான வாரமில்ல இது? உங்க திறமை, சாமர்த்தியம், அறிவாற்றல் எல்லாமே அழகா வெளிப்படும்! திருவாரூர் தேர் கணக்கா ஆடி அசைஞ்சு வந்துக்கிட்டிருந்த யோகவேளை, மணை போட்டு மாப்பிள்ளை மாதிரி உட்காந்துடுச்சு. புதிய சொத்து சேர்க்கை ஏற்படும். வழக்கு, கோர்ட் விவகாரம் நல்லபடியா முடியும். புனிதப் பணிகள் நிறைவேறும். பரிசு, பட்டம்னு உற்சாகம் அலங்கா நல்லூர் ஜல்லிக்கட்டு மச்சக்காளைக் கழுத்து மணியாட்டம் கும்மாளம் போடும்.

# நடக்கும்!

## துலாம்

கும்பிக்குச் சோறில்லை; கொண்டைக்குப் பூ கேட்குதோ? பின்னே என்னங்க? அலைச்சலும், வீண் விரயமும் அதிகமா இருக்கும் போது, கேளிக்கை, விளையாட்டுன்னு இருக்கலாமா? தலைவலி போய் திருகு வலி வந்த மாதிரி, ஏதாவது ஒண்ணுமாத்தி ஒண்ணு படுத்தி எடுக்கும். ஆனா, கேது, சூரியன், புதன் சஞ்சாரம் அனுகூலமாக இருப்பதால், பொன் வைக்கிற இடத்தில் பூ வைக்கிற மாதிரி, பண நடமாட்டம் சௌகரியமாகவே இருக்கும். வார இறுதியில் சுப காரியம் நடக்கும். ஒன்றுக்கு மேற்பட்ட இனங்களில் வருவாய் கூடும்.

## மகரம்

அரசமரத்தைச் சுற்றி வந்துட்டு, அடிவயிற்றைத் தொட்டுப் பார்க்கிற மாதிரி, அவசரப்பட்டா முடியுங்களா? முக்கியமான கிரக சஞ்சாரம் அனுகூலமாக இல்லாததால் எதிலும் பூரணமான பலனை எதிர்பார்க்க முடியாது. இருக்கிறதை விட்டு பறக்கறதுக்கு ஆசைப்படாமே, நிதானமா யோசிச்சு செயல்படுங்க. அரசியல்வாதிகளுக்கு ஓரளவு நன்மை கிடைக்கும். அரசாங்க அதிகாரிகளின் நிர்வாகத் திறமை குன்று மேலிட்ட விளக்கு போல பிரகாசிக்கும். பெண்களுக்கு உற்சாகமான சூழ்நிலை உத்தரவாதம்.

## விருச்சிகம்

பிடிச்சாலும் பிடிச்சீங்க, நல்ல புளியங் கொம்பாத்தான் பிடிச்சிருச்சிருக்கீங்கனு பாராட்டற மாதிரி, நல்ல உறவுகள் அமையும். குரு வக்கிர நிலை என்பதால், பொருளாதார நிலை ரொம்ப திருப்தியா இருக்கும். கோவணத்தில் ஒரு காசிருந்தா, கோழிக்குக் கூட பாட்டு வருமாமே! நீங்க சிம்பொனியே அமைக்கலாம். பத்திரிகை, எழுத்து, கணிதம் துறைக்காரங்க அளவோடு நலம் அடைவாங்க. பதறிய காரியம் சிதறிப் போகும். அதனால எதிலும் அவசரம், பதற்றம் கூடவே கூடாது.

## கும்பம்

பழகப் பழகப் பாலும் புளிக்கும்னு உறவுக்காரங்களும், நண்பர்களும் கைவிட்டுப் போனாலும், கவலையே படாதீங்க. 11ல் உலவும் கிரக சஞ்சாரம் உங்களுக்கு அனுகூலம் தருகிறது. தன் கையே தனக்குதவி. உழைச்சு முன்னேறுவீங்க. இதனால, உங்க அந்தஸ்து, செல்வாக்கு உயரும். அரசுப் பணியாளர்கள் முன்னணிக்கு உயர்வார்கள். கூட்டுத் தொழில் சுமாரான லாபம் தரும். கணவன் மனைவி உறவு தாமரை இலைமேல் தண்ணீர் போல இருக்கும். ஜன்ம ராசியில் செவ்வாய் சஞ்சாரம் என்பதால் நிதானம் மிக அவசியம்.

## தனுசு

'கோழி குருடா இருந்தா என்ன, குழம்பு ருசியா இருந்தா சரிதான்'னு மேம்போக்கா போற ஆளுதான் நீங்க. அதனாலேயே நழுவின மீனுல நழுவின மீனாட்டம் பிரச்னைகளிலிருந்து தப்பிச்சு வந்துடுவீங்க. ஸ்திர சொத்துக்கள் கிடைக்கும். குடும்பத்தில் சுபகாரியம் நடக்கும். ரியல் எஸ்டேட் ஆதாயம் தரும். தொழிலில் வளர்ச்சி தெரியும். பக்தியில் ஈடுபாடு அதிகமாகும். தாய் தந்தை நலனில் அக்கறை தேவை. உங்க பெற்றோர் விஷயத்துல அக்கறை வைச்சீங்கன்னா, உங்க மகனும் உங்களை கவனிச்சிப்பான்.

## மீனம்

10ல் கேது சூரியன் வசீகரமாக உலவுவதால், காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்வீங்க. உங்க செயல் திறமை அதிகரிக்கும். சோறும் நீரும் போன ஜென்மத்து மிச்சம்னு சோர்ந்து போயிருக்கும் பெண்கள் கூட, மனசிருந்தா மார்க்கமுண்டுனு உற்சாகமா செயல்பட ஆரம்பிப்பாங்க. விவசாயிகள், பொது நலப்பணியாளர்கள் நிலை உயரப் பெறுவார்கள். எதிர்ப்புகள் இருந்தாலும் சமாளிக்கும் பக்குவம் வந்துவிடும். வெளிநாட்டுத் தொடர்பால் நன்மை இராது. உடல் உபாதைகள் வருமுன்பே, ஆரோக்கியத்தில் கவனம் கொள்வது நல்லது.



ரிஷப ராசிக்காரரான நடிகர் லக்ஷ்மிரத்தன் வீண் வம்பு தும்புக்குப் போகக் கூடாதாம்!

# இக்கரையில்

**காஞ்சனா தாமோதரன்**

'சூப் கிச்சன்' (தர்மசாலை) முழுதும் கூட்டம் நிரம்பி வழிந்தது. கிறிஸ்துமஸ்ஸுக்கு முந்தைய நாள். வருடா வருடம் ரஞ்சி, அனுகா, ராஜி, மின்னி, இன்னும் பலரும் அங்கே வருபவர்களுக்குச் சாப்பாடு போடுவது வழக்கம். இந்த வருடம் தானும் வருவதாய்ச் சொன்னாள் விது. ஏதோ ஒரு வேகத்தில் அப்படிச் சொல்லியிருக்க வேண்டாமே என்று இப்போது தோன்றியது.

'சூப் கிச்சனு'க்குள் நுழைந்தவுடன் ஏற்பட்ட அதிர்ச்சி இன்னும் போகவில்லை. இந்த நாட்டின் லட்சக் கணக்கான ஏழைகள் வீடில்லாமல், தங்கள் உடைமைகளைப் பையில் சுமந்து கொண்டு, தெருக்களிலேயே திரிந்து குடியிருப்பார்கள் என்று பத்திரிகைகளில் படித்திருக்கிறாள்.

இதுவரை புள்ளி விவரங்களாய் இருந்தவை, கண் முன் நிற்கும் போது நம்ப முடியவில்லை. நம்ப விரும்பவில்லை. புரியாததொரு சங்கடம். ராஜி, ரஞ்சி பக்கத்தில் நின்று, ஸ்டைரஃபோம் அட்டைத் தட்டு ஏந்தி வரிசையில் வருபவர்களுக்குப் பரிமாறும் ஒவ்வொரு நிமிடத்திலும் அந்தச் சங்கடம் அதிகரித்தது.

அவர்கள் வாய் 'மெர்ரி கிறிஸ்துமஸ்' சொன்னாலும், கண்களில் 'மெர்ரி'யின் சுவடே இல்லை. விரக்திக்கும் அப்பாற்பட்ட ஒரு மரப்பு. மரப்பு ஊடுருவிய இதே பார்வைகளைப் பத்தாயிரம் மைல்களுக்கு அப்பாலும் பார்த்திருக்கிறாள். சிறுமியாக இருந்தபோது அந்தப் பார்வைகளைச் சந்திக்க முடியாமல், கார்க் கதவின் கறுப்புக் கண்ணாடியை அவசர அவசரமாய் ஏற்றி ஒளிந்திருக்கிறாள்.

இப்போதும் கூட, சில மணி நேரங்களுக்கு மேல் அவளால் தாக்குப் பிடிக்க முடியவில்லை. ரஞ்சியிடமும் ராஜியிடமும் சொல்லிவிட்டுக் கிளம்பினாள். 'கோழைத்தனம்' என்றது உள்குரல். 'காரேஜு'க்குள் காரை நிறுத்தும் போதும் சங்கடம் குறைந்திருக்கவில்லை.

வீட்டுக்குள் நுழைந்ததும், அருணாவும் அம்பிகாவும் நாய்க்குட்டியும் ஓடி வந்து அவள் மேல் பாய்ந்தார்கள். அருணாவும் அம்பிகாவும் சேர்ந்து ஏதோ வேகமாய்ச் சொன்னது ஒன்றுமே புரியவில்லை. "ஒவ்வொருத்தரா பேசுங்கம்மா..." குழந்தைகளால் முடியவில்லை.

"ரெண்டு பேரும் போய் 'பேக்'கிங்கை முடிங்க, போங்க," என்று ரமேஷ் 'அப்பா குரல்' போட்டான். நாய்க்குட்டி தொடரக் குழந்தைகள் அவர்கள் அறைகளுக்கு ஓடின.

" 'பேக்'கிங்கா? என்ன ரமேஷ்? எங்கே போறீங்க?" அவள் குரலில் பயம். இவன் குழந்தைகளை அழைத்துக்



கொண்டு எங்கேயோ போய்விடப் போகிறானோ? விவாகரத்து வழக்குகளில் அப்பாவோ அம்மாவோ குழந்தைகளைக் கடத்திப் போய்த் தலைமறைவாய் வாழ்வதைச் செய்தி நிகழ்ச்சிகளில் பார்த்திருக்கிறாள். அந்த அளவுக்கு ரமேஷ் போகக் காரணம் இல்லையே.

" 'சூப் கிச்சன்' அனுபவம் எப்படி இருந்தது, விது?"

"என்னாலே தாங்க முடியலை. சரி, சொல்லுங்களேன், எங்கே போறீங்க?" இவள் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்ல மறுக்கிறான். பயம் அதிகரித்தது.

" 'எங்கே போறீங்க' இல்லை, விது. 'எங்கே போறோம்'னு கேளு."

நிம்மதி மூச்சு வந்தது. "சரி, எங்கே போறோம், ரமேஷ்?" கையில் இருந்தவற்றை மேசை மேல் வைத்து விட்டு, அவனுக்கு எதிராக உட்கார்ந்து கொண்டாள்.

"மெக்ஸிக்கோ" என்றான் ரமேஷ். இப்போது இங்கே குளிர் எப்படி நடுக்குகிறது. ஆனால், மெக்ஸிக்கோவில் இதமான சீதோஷ்ணம். தலையாட்டும் தென்னை மரங்கள். வெள்ளை மணல் மேல் நீலமணிக் கடல். ஸ்பானிஷ் மெக்ஸிக்கன் இசையும் நடனமும். உப்பும் உறைப்புமாய் மெக்ஸிக்கன் உணவு... ரமேஷ் அடுக்கிக் கொண்டே போனான்.



விது வாய் விட்டுச் சிரித்து விட்டாள். அவள் சிரிப்பைப் பார்த்து மாதங்கள் ஆகி யிருந்தன. அவள் முகத்தைப் பார்த்துக் கொண்டே, அவனும் சேர்ந்து மெல்லச் சிரித்தான். அவன் முகத்தில் சிரிப்பு இயல்பாக ஒட்ட மறுத்தது.

"சரி, விது இப்போ ஏன் நீ சிரிச்சே?" சிரித்ததால் பொங்கியிருந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். "இல்லே, ரமேஷ். டிவோர்ஸுக்கு மனு போட்ட அப்புறம், உங்களுக்குத் தனி 'அப்பார்ட்மெண்ட்' கூடப் பார்த்து வச்சப்புறம், ஹனிமூன் மாதிரி மெக்ஸிக்கோ போற ஒரே ஜோடி நாமளாத்தான் இருப்போம்..."

"ஹனிமூனா? அருணாவும் அம்பிகாவும் வர்றதை மறந்துட்டியா?" ரமேஷின் புன்னகையில் கொஞ்சம் உயிர் இருந்தது. 'இப்போதெல்லாம் குழந்தைகளைப் பற்றிப் பேசும் போது மட்டும்தான் உயிரின் தடமே உன் முகத்தில் தெரிகிறது. நீ ஒரு கொலைகாரி' என்று வசனம் பேசி உள்மனம் அவளைக் கோபித்துக் கொண்டது.

"நாய்க்குட்டி...? இப்போ மெக்ஸிக்கோ போக என்ன அவசரம், ரமேஷ்?"

"நாய்க்குட்டியை 'கென்னெல்'லே விடுறதுக்கு ஏற்பாடு பண்ணியாச்சு, விது. மெக்ஸிக்கோ போறதுக்கு அவசரம் இல்லை, அவசியம் இருக்கு. அருணாவுக்கும் அம்பிகாவுக்கும் நம்மளைப் பத்திச் சொல்றதைத் தள்ளிப் போட்டுக்கிட்டே போனா எப்படி? இப்போ லீவுச் சமயம். மெக்ஸிக்கோ போனா நிதானமா உட்கார்ந்து குழந்தைகள்கிட்டே பேசலாம். டிவோர்ஸ் வாங்கின என்னோட சில ஃப்ரெண்ட்ஸ் கூட இப்படித்தான் செஞ்சிருக்காங்க..."

"ஓ, அமெரிக்கன் மாடலா? அப்போ சரிதான்..." அவள் சிரிக்க முயற்சி செய்தாள்.

"அதான் எத்தனையோ அமெரிக்கன் மாடல்கள் இருக்கே... கடைசி டாலர் வரைக்கும் ஜீவனாம்சமா உறிஞ்சுற ரத்தக் காட்டேரி மாடல் தொடங்கி, இந்த மாதிரி பொய்க் குடும்ப ஹனிமூன் மாடல் வரைக்கும். இந்திய மாடல் கூட இப்போ வந்திருக்காம். அது என்னன்னு எனக்குச் சரியாத் தெரியாது. சாரி..."

இவன் எப்படியோ மாறிக் கொண்டிருக்கிறான்... கூரான நகங்களுடன்; குளிர்ந்து உறைந்த உணர்வுகளுடன். அவளுள் மீண்டும் குற்ற உணர்வு. பிறகு ஏனோ கோபம் வந்தது. அடக்கிக் கொண்டாள். கோபிக்கும் உரிமையையும் ரத்து செய்ய வேண்டி நீதிமன்றத்தில் மனு தாக்கல் செய்தாயிற்றே.

மௌனமாய் எழுந்து தன் துணிகளைப் பெட்டியில் எடுத்து வைக்கச் சென்றாள். இது குளிர்காலம் என்பதால், கோடை காலத்துப் பருத்தி உடைகளை ஒதுக்கியிருந்தாள். மெக்ஸிக்கோவின் இதமான வெயிலுக்குப் பொருந்தும் இந்தியப் பருத்திப் பாவாடைகள், சட்டைகள், சிறந்த காலணிகள், எல்லாவற்றையும் தேடியெடுக்க வேண்டியிருந்தது. கசங்கிக் கிடந்த துணிகளை 'ஸ்ப்ரே' கஞ்சி யிட்டுத் தேய்க்கையில், கடந்த வாரங்கள் நிழலாடின.

'அவனும் அவளும் சந்தோஷமாக இருக்க முடியும், ஆனால் சேர்ந்து இல்லை' என்று அவள் சொன்ன போது ரமேஷின் முகம்... இப்போது அதை நினைத்தாலும்... நினைக்க வேண்டாம். நிறுத்தினாள்.

சில நாட்கள் கழித்து அவனாகவே வக்கீல்கள் தேடிக் கண்டு பிடித்தான். பத்திரங்களில் கையெழுத்திட்ட போதும், அதற்கப்புறம் சேர்ந்து வீடு திரும்பிய போதும், அதன்பின் தொடர்ந்த நாட்களிலும் மௌனமே மொழியானது.

அவளும் ரமேஷும் நாகரீகம் என்ற போர்வைக்குக் கீழ்ப் பதுங்கிக் கொண்டார்கள். ஒருவரை ஒருவர் தேவைக்கு அதிகமான மரியாதையுடன் நடத்தினார்கள். சண்டைகள் நின்றன. நாளடைவில் வார்த்தைகளும் நின்றன.

வீட்டினுள் பெருகிய மௌனத்தில், அம்பிகாவின் சிரிப்பைக் கேட்க முடிந்தது. அருணாவின் வார்த்தையில்லாத கேள்விக்குறி உரத்துக் கேட்டது. சுதந்திரத்துடன் அறை அறையாய் ஓடித் திரியும் நாய்க்குட்டியின் கழுத்துப்பட்டை கிலுங்குவது கேட்டது. ரமேஷ் அவளை விட்டு ஒதுங்கி, தனக்குள்ளேயே

## அம்மாடியோவ்வ்!

புத்தக ஆய்வு, விமர்சனக்கூட்டம் என்றால் நான்குபேர் அமர்ந்து பேசிக் கொண்டிருப்பார்கள். எதிரே வம்படியாக இழுத்துவரப்பட்ட ஐந்துபேர் அமர்ந்து, 'சரி ஒருநாள் பாடுதானே' என்ற நினைப்போடு கடனே என்று காதுகொடுத்துக் கேட்கிற மாதிரி நடித்துக் கொண்டிருப்பார்கள். ஆனால் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் நிறுவனம் இறங்கியிருக்கும் இலக்கிய முயற்சி பற்றிக் கேட்டால் 'அம்மாடியோவ்' என்று ஆச்சர்யப்படுவீர்கள்! எதிர்வரும் ஜனவரி 20, 2002 அன்று கொண்டாடப்பட இருக்கும் தேசிய புத்தக ஆண்டு விழாவையொட்டி 'தினம் ஒரு நூல் ஆய்வுக் கூட்டம்' நடத்தி வருகிறார்கள். ஞாயிறு மற்றும் விடுமுறை நாட்களைத் தவிர தினசரி மாலை ஆறு மணிக்குத் தொடங்கி

எட்டு மணி வரை, சென்னை அண்ணா சாலையில் உள்ள நியூ செஞ்சுரி வாசகர் அரங்கில் நடைபெறுகிறது. 23 மார்ச் 2002 வரையிலும் ஆறுமாத காலம் நடத்தப் போகிறார்களாம். தினசரி நூறு பேர் கலந்து கொள்ளும் இந்த நூல் ஆய்வுக் கூட்டத்தினை கின்னஸ் புத்தகத்தில் இடம் பெறச் செய்யவும் முயற்சி மேற்கொண்டு இருக்கிறார்கள்.

— சக்கரம்

உறைய ஆரம்பிப்பது தெரிந்தது.

டிவோர்ஸ் முடிவினால் பூரண நிம்மதி அடைந்திருந்த அவளின் ஒரு பாதி, அவளுள் குறுகுறுக்கும் மறு பாதியை ஆழத்தில் அமிழ்த்தி மௌனமாக்குவது புரிந்தது.

வாழ்வு ஏன், எப்படி இந்தப் புள்ளியில் இப்போது நிற்கிறது என்பதுதான் இன்னும் புரியவில்லை.

வானம் நிரம்ப நட்சத்திரங்கள். செங்கற்கள் பாவிய முற்றத்தின் நடுவே செயற்கை நீரூற்று கலகலத்துக் கொண்டிருந்தது. 'குவந்தனமேரா...' பிரபலத்தின் அமெரிக்க ஸ்பானிஷ் பாடலை 'மாரியாச்சி' இசைக்குழு ஓரமாய் நின்று வாசித்துக் கொண்டிருந்தது. சிறு சிறு மின்விளக்குள் சூடிய முற்றத்து மரங்கள் இதமான காற்றிலும் இசையிலும் மெள்ள அசைந்தன.

அது மெக்ஸிக்கோவில் இருக்கும் உணவகமாகத் தெரியவில்லை. ஈரம் தெளித்த காற்றும், நட்சத்திரம் மொய்க்கும் வானமுமாய், தமிழ் நாட்டுக் கிராமத்தில் பாட்டி வீட்டு முற்றத்தில் உட்கார்ந்திருப்பது போலொரு பிரமை.

"அம்மா, அப்பா, 'சப்மரீன்'லே இன்னொரு தரம் போலாமா?" ஐஸ்கிரீமை முடித்துக் கொண்ட அம்பிகா கேட்டாள்.

"நாளைக்கு ஊருக்குப் போணும், மறந்துட்டியா?" அம்பிகாவுக்கு அருணாவின் பதில்.

அம்பிகாவும் அருணாவும் தலையாட்டிப் பேசும் போதெல்லாம் பாசிகள் கலகலத்தன. முடியைச் சின்னச் சின்ன ஜடைகளாகப் பின்னி, ஒவ்வொரு ஜடையின் அடியிலும் ஒரு வண்ணப் பாசி கோக்கும் நேர்த்தியான தலையலங்காரம். பின்னும் போது, அந்த மெக்ஸிக்கன் பெண்ணின் கைவிரல்கள் பறந்த வேகத்தை நினைத்தால் இன்னும் ஆச்சரியமாக இருந்தது. அம்பிகாவும் அருணாவும் வித்தியாசமாக, கர்ரிபியன் குழந்தைகள் போல் தெரிந்தார்கள்.

"ஊருக்குப் போறதுக்கு முன்னால கொஞ்ச நேரம் சப்மரீன்லே போலாமே?" தலைப் பாசிகள் கலகலக்க, அம்பிகா விடாப்பிடியாகத் திரும்பவும் கேட்டாள்.

அம்பிகாவைச் சொல்லித் தப்பில்லை. மெக்ஸிக்கோ வளைகுடாவில், கடல் மட்டத்துக்கு முந்நூறு அடிக்குக் கீழ் நீர்மூழ்கிக் கப்பலில் போனது பெரிய அனுபவம். கப்பலின் வட்டச் சன்னல்கள் வழியே மலைகளும், பவளப்பாறைத் தொடர்களும், அவற்றினூடே நலுங்காமல் நீந்திக் கொண்டிருக்கும் பல வண்ணத்து மீன்களும். கடலுக்குக் கீழ் ஒரு முழு உலகமே ஒளிந்து கொண்டிருந்தது. கடல் தரை முந்நூறிலிருந்து மூவாயிரம் அடிக்குச் செங்குத்தாகக் கீழே இறங்குவதைப் பார்க்கும் போது ஒரு சிலிர்ப்பு.

காட்டின் நடுவில் பழங்காலத்து 'மாயன்' செவ்விந்தியர்கள் கட்டிய பிரமிடுகளின் சிதைவைப் பார்த்தபோதும் அதே சிலிர்ப்புதான் ஏற்பட்டது. இவங்க எல்லாரும் எப்படிக் காணாமப் போனாங்க?" குழந்தைகளின் கேள்வியில் நியாயம் இருந்தது. விஞ்ஞானம், கணிதம், வானியல் என்று ஓங்கியிருந்த ஒரு பெரிய நாகரிகம் சட்டென்று ஆவியாகிப் போனது எப்படி..

மெக்ஸிக்கோவில் நான்கு நாட்கள் முடிந்து, நாளை ஊருக்குப் புறப்பட வேண்டும் என்பதை விதுவால் நம்ப முடியவில்லை. திரும்பிப் போக வேண்டாமே என்றிருந்தது. நான்கு நாட்களும் சுறுசுறுவென்று ஏதாவது செய்து கொண்டே இருந்ததில் உற்சாகம். நீர் மூழ்கிக் கப்பல், மாயன் பிரமிடுகள், உள்ளூரைச் சுற்றுப் பார்ப்பது, இத்யாதி. ஒரு வேலையும் கிடையாது. ரமேஷுமே உயிர்ப்புடன் தெரிந்தான்.

குழந்தைகளின் முகங்களிலும் ஒரு மலர்ச்சி. அதைக் கெடுக்க அவளுக்கும் அவனுக்கும் மனம் வரவில்லை. எத்தனையோ தரம் விஷயத்தைச் சொல்ல நினைத்தும் வார்த்தை வரவில்லை. இப்போதாவது சொல்லலாமா? ரமேஷ் விதுவைக் கேள்விக்குறியுடன் பார்த்தான். அவள் சரியென்று தலையசைத்தாள்.

. ரமேஷ் ஆரம்பித்தான்: "அருணா, அம்பிகாக் குட்டி, அப்பாவும் அம்மாவும் உங்ககிட்டே ஒரு விஷயம் சொல்லணும்..."

(தொடரும்)



• வைரங்கள்

இந்த வாரம் கல்லூரி வைரங்களைத் தேடி நாம் போய் இறங்கியது, 'பெரியாரின் பூமி'யாகிய ஈரோட்டிலுள்ள வேளாளர் மகளிர் கல்லூரியில். நகருக்கு வெளிப்புறம் அமைந்துள்ள இந்த மகளிர் கல்லூரியில் நுழைவு வாயிலுக்குச் சற்றுத் தொலைவிலேயே அமர்ந்திருக்கிறார் வேழ முகத்தான்!

• காயத்ரி

## கல்லூ
## வைரம்

எந்த விக்னமும் இல்லாமல் காரியம் நடக்க வேண்டுமே என்று அவரை வேண்டிக் கொண்டு, தாளாளர் சந்திரசேகர் அறையில் எட்டிப் பார்த்தோம். கொங்கு மண்டலத்தில் யாரைப் பார்த்தாலும், கும்பிட்ட கையோடு தான் இருப்பார்கள் போலிருக்கிறது. சென்னைவாசியான நமக்கு அந்த மரியாதையில் ஜில்லிட்டுப் போகிறது. "ஏனுங்க... வாங்க...எப்போ வந்திங்க..." என்று வரவேற்று கல்லூரியைப் பற்றி. இல்லை யில்லை - அந்தக் குட்டிப் பல்கலைக் கழகத்தைப் பற்றிச் சுருக்கமாக எடுத்துரைத்தார்.

முப்பது வருடங்களுக்கு முன் 280 மாணவியருடன் துவங்கப் பட்ட அந்தக் கல்லூரியில் இன்று 2500 மாணவிகள். அதற்குள் உள்ளே வந்த பிரின்ஸி எஸ். லீலாவதி, கல்லூரி வைரங்களை அழைத்து வர ஆளனுப்பினார். அந்தக் கல்லூரியிலிருந்து நமக்குப் பரிந்துரைக்கப்பட்ட வைரங்கள் - ஸாரி - நவரத்தினங்கள் ஒன்பது மாணவிகள்!



• செல்வநாயகி (வலது ஓரம்) தோழிகளுடன்

தாளாளர் அறையில் பேசிக்கொண்டிருக்கும்போதே தூரத்திலிருந்து ஸ்லோ மோஷனில் 'தந்தனத்தோம் என்று சொல்லியே... வில்லினில் பாட... ஆமாமா! வில்லினில் பாட வந்தருள்வாய் கலைமகளே" என்ற குரல் நம் காதை வந்தடைந்தது.

"என்ன ஸார் சுப்பு ஆறுமுகம் கலைநிகழ்ச்சி ஏதேனும் இன்று உண்டா?" என்று சந்திர சேகரைக் கேட்டபோது "போய் ஆடிட் டோரியத்தில் பாருங்க!" என்று நம் ஆவலைத் தூண்டி விட்டார்.

அங்கிருந்து ஓட்டமும் நடையுமாக அரங்கை அடைந்தபோதுதான் தெரிந்தது. அந்தக் குரலுக்குச் சொந்தக்காரர் யோக ப்ரியா. 'ஊட்டச்சத்து மற்றும் உணவியல் மூன்றாம் ஆண்டு படிக்கும் யோகப்ரியா!



# நந்தனத்தேரோம் என்று சொல்லியே..!

மதுரையில் நடந்த அனைத்துக் கல்லூரி விழாவில் வில்லுப்பாட்டு போட்டியில் இரண்டா வது பரிசு வாங்கியவராம். "என்ன ப்ரியா... கோட்டை விட்டுட்டீங்களே முதல் பரிசை" என்றபோது "இந்தமுறை விட மாட்டேன். கடுமையான பிராக்டீஸில் இறங்கி விட் டேன்" என்று கட்டைகளைக் கையிலெடுத்து வில்லைச் சுண்டி விட்டார். படித்து முடித் தவுடன் மனநல காப்பகம் வைப்பதுதான் ப்ரியாவின் லட்சியமாம். (சூப்பர் லட்சியம்) வில்லுப்பாட்டின் தென்றலில் நாம் கண் களைச் சுகமாக மூடியிருந்தபோது, "தமிழ் தானே" என்று அலட்சியப்படுத்தாதீர்கள்... தமிழ்த் தேனே என்று சொல்லுங்கள்" என்ற கண்ணைக் குரலால் விழிப்படைந்து நோக் கினால் மேடைக்கு ஓரமாக இருந்த மைக்கின் முன் சவிதா. தமிழ்நாட்டின் எந்த மூலையிலிருந்தும் பேச்சுப் போட்டி என்று கடிதம் வந்தால் போதும். அங்கே சவிதாவை 'பேக்' செய்து அனுப்பி விடுகிறார்கள் கல்லூரி 'மேம்'கள். சவிதாவும் சவால்களைச் சந்தித்துக் கோப்பையும் சான்றிதழ்களு மாகத் திரும்பி வருகிறார்.

சும்மாச் சொல்லக் கூடாது. வேளாளர் கல்லூரி அரங்கம் ஒரு மெகா அரங்கம். நவீன திரையரங்குகளோடு போட்டிப் போடும் வகையில் கட்டப்பட்ட அந்த அரங்கம் ஈரோட்டுக்கே பெருமை சேர்க் கிறதாம்.

'அட... பனித் தொப்பிகளுடன் இருக்கும் கைலாய மலை அரங்கத்தின் மேடையில் எப்படி இடம் பெயர்ந்தது...? அனல் பறக்கும் கோபக் கண்களுடன் உடுக்கை, உருமி இல்லாமல் அங்கே ருத்ரதாண்டவம் ஆடுவது யார்? ஆட்டத்தை நிறுத்திவிட்டு அருகில் வந்து அறிமுகப்படுத்திக் கொண் டார் காயத்ரி சிவகுமார். இவரும் மூன்றாம் ஆண்டு ஊட்டச் சத்து மாணவி. "எப்படி... உங்களுக்கு ஹாஸ்டலில் சரியான ஊட்டச் சத்து உண்டா?" என்றபோது "ஈஸ்ட் ஆர் வெஸ்ட், வேளாளர் இஸ் பெஸ்ட்" என்று கோரஸாக குரல் கொடுத் தார்கள் நவரத் தினங்கள். "எங்க கல்லூரியில் ஹாஸ்டல் சாப்பாடு மட்டும் சிறப்பம்சம் இல்லே ஸார்... படிப்பிலும் நாங்க கெட்டி தான். பாரதியார் பல்கலைக் கழகத்தில் அகடமிக் சைடில் நாங்கதான் டாப்" என்றார் மாணவிகள் யூனியன் செக்ரட்டரி சித்ரா. கணக்கைக் கண்டால் காத தூரம் போகும் நாம், அந்தக் கணக்குப் பிரிவு மாணவியிடமிருந்து 'எஸ்கேப்' ஆக பேச்சை மாற்றினோம்.

"எங்கள் கல்லூரியில் யோகா, கராத்தே வகுப்புகள் கூட உண்டு" என்றார் மாலதி. சொன்னது மட்டுமல்லாமல் ஜெயந்தி, சித்ரா, சாந்தியை வைத்து அழகான பின்

# நகரச் சிறப்பிதழ்!

ஒவ்வொரு மாதமும், ஓர் இதழ்! நீங்கள் வசிக்கும், நேசிக்கும் உங்கள் நகரின் பின்பக்கத்தைப் புதையலாகக் கண்டெடுத்து தரப் போகிறது கல்கி!

**உங்கள் நகரின்...**

- வரலாற்றுச் சிறப்பு,
- தொடரும் சர்ச்சை
- பொதுப் பிரச்னைகள்
- கிடப்பில் போடப்பட்ட திட்டங்கள்



- ஆன்மிகச் சிறப்பு
- அதிசய மனிதர்கள்

இப்படி...

– உங்கள் ஊரின் 'அ' முதல் 'ஃ' வரை எதைப் பற்றியும் சின்னதாய் நான்கு வரிக் கடிதத்தில் கோடு கிழித்துக் காட்டுங்கள். கல்கி நிருபர் குழு ரோடே போட உங்கள் நகர் நோக்கி வருகிறது!

முதல் நகரம்
**காஞ்சிபுரம்**

இந்நேரம் காஞ்சிபுரம் வாசகர்கள் கைகளில் பேனா எடுத்திருப்பீர்களே! கடிதங்கள் வந்து சேர கடைசித் தேதி: **31.12.2001**

ணியில் யோகா வகுப்பு நடத்திக் காட்டினார் மாலதி. அவருக்குப் பிடித்த கவிஞர்? 'கண்ணதாசன்தான்!' என்று அடித்துச் சொன்ன மாலதியும் கவிதை புனைபவர்தான். 'தங்கையே... பிழையில்லாமல் ஒரு கவிதையைக் கொட்ட முடியுமா?' என்றதற்கு "ஓ...எஸ்.. 'நடமாடும் தென்றலாய் அவன் என்னைக் கடக்கையில், நடமாடும் பிணமாய் நான்!' எப்படி இருக்கு?" என்று நமது கருத்தைக் கேட்கக்கூட காத்திராமல் தொடரப் போனவரை, "வெயிட் ப்ளீஸ்.." என்று கிறீச்சிட்டு நிறுத்தினோம்.. காரணம் "ஸாரே ஜஹான் ஸே அச்சா" பாணியில் டக், டக்கென்று நடந்து வந்து மூன்று மாணவிகள்தான்.

எல்லோரும் என்.சி.சி கேடட்டுகள். இந்த வருடம் வேளாளர் கல்லூரியே குஷியில் மிதக்கிறது. விஷயம் என்னவென்றால் 26 வருடங்களுக்குப் பிறகு வரும் சுதந்தர தின அணிவகுப்பில் பங்கு கொள்ளும் வாய்ப்பு கல்லூரி என்.சி.சி கேடட்டான செல்வநாயகிக்குக் கிடைத்திருக்கிறது.

'அட்டேன்ஷன்...!' என்று ஓங்கி குரல் கொடுத்ததும், நின்ற அந்த மூவரையும் ஓரங் கட்டினோம். "ரொம்ப பெருமையா இருக்கு. ஆனா தலைநகர் கடுங்குளிரில் கடுமையான பயிற்சி காத்திருக்கு... அதை நினைச்சாத்தான் நடுக்கம்" என்று கைகளைத் தோளில் குறுக்காகப் போட்டுக் கொண்டவரை "மிலிட்டரி பாணியில் ஒரு சல்யூட் ப்ளீஸ்" என்றோம். 'நோ' என்றார் செல்வநாயகி. யூனிஃபார்ம் போடாமல் சல்யூட் அடிக்கக்கூடாது" என்று விதி இருக்கிறதாம். "ஆல் த பெஸ்ட்" என்று வாழ்த்தி விடை பெற்றோம்.

இவ்வளவு அரட்டைக் கச்சேரிக்கு நடுவில் பி.பி.எம் படிக்கும் விஜயசாந்தியும் எம்.காம் படிக்கும் பிரபாவதியும் அமைதிப் படையாய் வந்தது கண்டு நமக்கு ஆச்சரியம். வாயைக் கிண்டினோம். "சும்மா சொல்லுங்க... உங்க மேம்களில் டெரர் யார்?" சுற்று முற்றும் பார்த்த அவர்கள் ஏதோ சூடாகச் சொல்லப் போகிறார்கள் என்று காதை நீட்டினால் "எல்லா மேம்களும் தங்கம் ஸார்" என்று நமக்கு நோஸ்கட்டினார்கள்.

ஒன்பது பேரில் நான்கு மாணவிகள் தங்கள் எதிர்கால லட்சியம் ஐ.ஏ.எஸ். அதிகாரியாக ஆவதுதான் என்று சொன்னார்கள். "அது என்ன அப்படியொரு கிரேஸ் அந்தப் பொறுப்பின்மீது?" என்றபோது "நமது சமுதாயத்தில் இருக்கும் நலிந்த பிரிவினருக்கு உண்மையிலேயே ஏதாவது சேவை செய்ய விருப்பப்பட்டால், ஒரு ஐ.ஏ.எஸ் அதிகாரியாகத்தான் வரணும். அதற்கான அதிகாரமும் வாய்ப்பும் அதில்தான் இருக்கின்றன. ஆனால் எந்தக் காரணம் கொண்டும் ஊழலுக்கும் லஞ்சத்துக்கும் இடம் கொடுக்க மாட்டோம்" என்றார் பிரபாவதி உறுதியாக. 'ஆமென்' என்றனர் அனைவரும். புல்லரித்துப் போய் 'பை' சொல்லி விடைபெற்றோம்.

– ஸ்ரீநிவாசன்
படங்கள்: ராஜன்

உறவுக்கு எல்லையில்லை என்பதை வெகு அற்புதமாய் எளிய நடையில் உணர்த்திய 'வேஷம்' - சிறுகதை உயிர்ப்புடன் இருந்தது-
போடிநாயக்கனூர்,
எஸ்.எம். பாலசுப்ரமணியன்.

குழந்தை எதைச் செய்தாலும் கண்டிக்கும் தாயார் அதே குழந்தை சற்று நேரம் சும்மா இருந்தால் கவலைப்படுகிறார். முதல் பக்க ஜோக் பிரமாதம்.
சென்னை - 78,
வி.எஸ். அனந்தராமன்.

வைரத்தின் ஒன்பது முகங்களாய் ஆரணி கல்லூரி மாணவர்களின் பன்முகச் சாதனைகளைப் பட்டியலிட்டு இந்த வாரம் கல்வி பளிச்... பளிச்சென்று மின்னலடித்திருந்தது.
திருவண்ணாமலை, லெமூரியன்.

'லொடுக்குப் பாண்டி' பற்றி.. ஸாரி கருணாஸ் பற்றிய விவரங்கள் நன்றாயிருந்தன. நகைச்சுவைத் திலகமாய் அவர் திரை உலகில் வலம் வர என் இனிய வாழ்த்துக்கள்.
திருவண்ணாமலை, அபிதா.

வயிற்றுக்கோளாறுகள் வருவதற்கான காரணங்களையும், அவை வராமல் தடுப்பதற்கான வழிமுறைகளையும் மிகவும் பயனுள்ள வகையில் விளக்கிக் கூறியிருந்தார் டாக்டர் முரளி.
சென்னை - 97, வீ.பா. கிருஷ்ணன்.

கூடங்குளம் அணு உலை, நெல்லை மட்டுமல்லாமல் தமிழக மக்களின் உயிருக்கே உலை வைக்கக் கூடியதாக மாறும் அபாயம் இருப்பதை உணர்ந்து அதிர்ந்தோம்!
திருவானைக்காவல்,
எஸ். கௌரிலக்ஷ்மி.

'ஆப்கான் துயரங்கள்' தொடர் கட்டுரையும் விவரங்களும் அருமை.
பெங்களூர் - 16, அ. சங்கரன்.

'ஆப்கான் துயரங்கள்' கட்டுரை முற்றுப் பெற்றது போலவே ஆப்களின் துயரங்களும், விரைவில் முற்றுப் பெறும்! பெற வேண்டும். இது தான் எங்கள் பிரார்த்தனையும்.
பெங்களூர் - 40, என்.கே. ஈசுவரி.

'பேனா' முனை வலிமை வாய்ந்தது என்கிறார்கள். ஆனால், இன்று தமிழகத்திலும், கர்நாடக மாநிலத்திலும், பேனாவை விட அதிகார துஷ்பிரயோகமே வலிமை வாய்ந்ததாகக் காணப்படுகிறது. இவர்களது அரசியல் காழ்ப்புணர்ச்சிகளுக்கு, பலி கடாவாக பத்திரிகையாளர்




## என்ன நிச்சயம்?

கள்தான் கிடைத்தார்களா?
திருச்சி - 20, ஆர். அப்துல் சலாம்.

எல்லோருமே பல குழப்பங்கள், திருப்பங்கள் கொண்ட சமூகக் கதையோ, துப்பறியும் கதையோ எழுத வேண்டும் என்றுதான் எழுதுவார்கள். ஆனால் எஸ். ஷங்கரநாராயணின் கதைகள் எல்லாமே யதார்த்தம்!
பெங்களூர் - 95, கே. ராஜகோபால்.

உங்கள் தலையங்கம் நடுநிலையானது. பத்திரிகையாளர்களைத் தண்டிக்க பொடோ சட்டத்தைத் தவறுதலாக உபயோகிக்க மாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்?
மும்பை -32, உமரி. பொ. கணேசன்.

நடுவில் ஐம்பது வயதைக் கடந்த பாடகி. இரு பக்கங்களிலும் முப்பதை இப்போதுதான் தொட்டிருக்கும் பக்கவாத்தியக் கலைஞர்கள். பின்னால், இருபதைக் கூட இன்னும் எட்டாத பாவாடை தாவணி சிஷ்யைகள் மூவர்! மிக சுவாரஸ்யமாக அமைந்தது இந்தக் காட்சி மட்டுமல்ல; கச்சேரியும் கூடத்தான். (சபா: நாத இன்பம்; அரங்கம் : ராக சுதா)

சுகுணா புருஷோத்தமன் இரண்டே கால் மணி நேரக் கச்சேரியில் ஒரு டஜன் பாடல்களை வழங்கினார் என்பதால் மட்டுமே விளைந்ததல்ல அதன் சுவாரஸ்யம். அத்தனை பாடல்களும் அந்தந்த வாக்கேயக்காரர்களின் (இசையுடன் பாடலை இயற்றிய பெரியோர்கள்) உள்ளத்தைப் பிரதிபலித்து, கேட்போரின் உள்ளத்தையும் தொட்டதால் விளைந்தது அவ்வனுபவம்.

முதல் மூன்று பாடல்களில் இலேசாகத் தலைகாட்டிய 'ஸ்டார்டிங் டிரபிளைப்' பொருட்படுத்த விடாமல் மேடையிலிருந்த குழுவின் மெய்யான உற்சாகம் ஆட்கொண்டு விட்டது. அதுவரை ஆதி தாளத்தில் ஓடிய கச்சேரி, புதமாச்ரயாமி என்ற தீக்ஷிதரின் நவக்ரஹ கீர்த்தனையின் விஸ்தாரமான ஜம்ப தாளத்தில் பதிந்து உட்கார்ந்தது.

ஸாவேரி ஆலாபனை, வலுவான, நெக்குருக்கும் பிடிகளைக் கொண்டு எழுப்பப்பட்ட நாத மண்டபமாக உருப்பெற, அதில் சியாமா சாஸ்திரியின் 'துருஸுகா! கிருப ஜுசி' கீர்த்தனை, அவர் அந்நியோன்னிய பக்தியுடன் துதித்த அம்பிகையின் வடிவமாக வீற்றது. நிரவல் ஸ்வரங்களால் ஷோடச உபசாரம் செய்வித்துப் பாடகர் மகிழ, வயலின் வாசித்த நாகை ஸ்ரீராமும் ம்ருதங்கம் அருண்பிரகாசும் அந்த முயற்சியில் அதே அழகுணர்ச்சியுடன் துணை நின்றனர்.

'சிவகாம சுந்தரி' என்று பாபனாசம்சிவனின் முகாரி ராக கீர்த்தனையில் உருக்கம் உச்ச நிலையைத் தொட்டுவிட...

மீண்டும் முதிர்ந்த பக்தியின் சமநிலையை அடைய கைகொடுத்தவர், வேறு யார்...? முத்துஸ்வாமி தீக்ஷிதர்தான்! - 'நீலாசலநாதம் பஜேஹம் நிகிலலோக பிரஸித்தேச்வரம், நீலாம்பிகா மனோஹரம்' என்று ஈசுவரனைப் பிடித்துக் கொண்டு ஸுமத்யுதி ராகத்தில் சமைநிலைக்குக் குழுவினர் வந்து சேர, நாமும் பிரதான ராகமான கரஹரப்ரியாவுக்குத் தயாராகிறோம்.

எல்லா ஸ்தாயிகளிலும் எல்லா ஜீவஸ்வரங்களிலும் நின்று பாடியே தீருவேன் என்று அடம்பிடிக்காமல் மூர்ச்சனைகளால் மட்டுமே ஆலாபனையை வளர்த்துச் சென்றது இன்றைய இளம் வித்வான்கள் பலருக்கு அழகான பாடம்.

எதிர்பார்ப்புடன் ஆதரித்து வாசிக்க முடியாவிட்டாலும் ஆலாபனைகளைச் சரியாக எதிரொலித்து வாசித்தார் நாகை ஸ்ரீராம்.

கரஹரப்ரியாவில் தியாகய்யர் கீர்த்தனை - பக்கல நிலபடி. நிரவலும் கற்பனை ஸ்வரங்களின் நிர்வாகமும் கீர்த்தனையின் சம்பிரதாயத்தை யொட்டியே



• ப்ரியா சகோதரிகள்

சுழன்று சுழன்று விரிந்தன.

அருண்பிரகாஷ் கரஹரப்ரியா கீர்த்தனைக்கு ம்ருதங்கம் வாசித்தார் என்று சொல்வதைவிட கரஹரப்ரியாவையே ம்ருதங்கத்தில் வாசித்தார் என்று சொல்வது பொருந்தும். பாடிய அவர் ம்ருதங்கம் நிரவலை அணைத்துப் போஷித்து ஸ்வரங்களுடன் கொஞ்சி விளையாடியது... அவ்வப்போது அமைதி காத்தும் அவற்றுக்கு அழகூட்டியது!

தமது குருநாதர் முசிறியின் 'ஹிட்' பாடல்களான 'பாஹி ராம', 'மஞ்சு நிகர்' ஆகிய

வற்றைத் தொடர்ந்து திருப்புகழுடன் கச்சேரியை முடித்தார் சுகுணா புருஷோத்தமன்.

அவரிடம் பாட்டு கற்றுக் கொள்ளும் இளமைப் பட்டாளம் அவருடைய கான்ஸரட் மானேஜ்மென்ட் திறமையையும் கூர்ந்து கவனித்துப் பயன்பெறலாம்.

# ஹேர் ஸ்டைல் அளவுக்கு இடைவெளி!

ப்ரியா சகோதரிகளை இணைபிரியா சகோதரிகள் என்று சொல்லிவிட முடியாது. ஒன்றே போல் உடுத்தினாலும் ஹேர் ஸ்டைல் வேறுபடுகிறதல்லவா? அந்த அளவு வித்தியாசம் பாட்டிலும் தொடர்கிறது! இருவரும் சேர்ந்து பாடுகிறபோது அங்கங்கே கொஞ்சம் இழு பறியும் தெரியவே செய்கிறது. ரீதிகௌளையை ஹரிப்ரியா ஆலாபனை செய்ய, இருவரும் சேர்ந்து - இல்லையில்லை - சேராமல் - 'ஜனனி நின்னு வினா'வை ஆரம்பித்தார்கள். (சபா: நுங்கம்பாக்கம் கல்சரல் அகாடமி) போகப் போக குரல்கள் இழைந்து கொண்டு கீர்த்தனை முடிவதற்குள் ஒருவாறு 'செட்டில்' ஆகி விட்டது. இந்தக் கிருதிக்குப் பக்கவாத்தியக் கலைஞர்கள் கொடுத்த ஆதரவில், தொடர்ந்து வந்த கற்பனை ஸ்வரங்கள் ஓஹோ வென்று அமைந்திருக்க வேண்டுமே...! என்றால் அதுதான் இல்லை;


• சுகுணா

'மனஸாரமதியணி', தஞ்சாவூர் சங்கரய்யரின் அழகான தமிழ்ப் பாடல். ஆனால் அதற்கு லைட் மியூசிக் பூச்சு கொடுத்து, கச்சேரியின் நடுவில் உட்கார வைத்து விட, பாட்டுக்குக் கொஞ்சம் அடி; கச்சேரிக்கும் கொஞ்சம் அடி.

தொடர்ந்தது நாகஸ்வராவளி. ஆலாபனை செய்வதற்குச் சுலபமில்லையென்ற போதிலும் இதை ஷண்முகப்ரியா சிறப்பாக ஆரம்பித்து வைத்தார். மேல் ஸ்தாயி சஞ்சாரங்களில் அடக்கிப் பாடியதால் சட்டென்று களையிழந்த ராகம் துரிதப் பிரயோகங்களில் மேலும் நலிவுற்றது. வயலின் ராகவேந்திர ராவ் போட்ட பி-12 இஞ்செக்ஷனில் அது மீண்டும் எழுந்து உட்கார்ந்து கொள்ள, ஸ்ரீ சங்கர குருவரம் என்ற கிருதியை எடுத்தார்கள் சகோதரிகள். மகா வைத்தியநாத சிவன் இயற்றிய இந்தப் பாடல் சிருங்கேரி ஆசார்யர் நரசிம்ம பாரதி சுவாமிகளின் முன்னிலையில் பாடப்பெற்ற பெருமையுடையது.

அழகான சிட்டஸ்வரத்தை உள்ளடக்கிய இப்பாட்டுக்குக் கல்பனை ஸ்வரமும் பாட வேண்டுமா? என்று யோசிப்பதற்குள் ஹரிப்ரியா பூர்வி கல்யாணியை ஆலாபனை செய்ய ஆரம்பித்து விட்டார். எடுத்த எடுப்பிலேயே ரவையிலும் நைலாகச் சலித்த ரவை பிரயோகங்கள் சில தோன்றியதை ஒதுக்கி விட்டால், நல்ல ஆரம்பம்!

சௌக்யமும் சுவானுபவமும் இணைய, ராகத்தின் ஸ்வரூபத்தை நயமான புது கற்பனைகளால் வளர்த்துக் கொண்டே போனார். வயலினில் எதிரொலித்து வாசிப்பதற்குள் 'மீனாக்ஷி மேமுதம் தேஹி' பாடப் போகிறார்கள் என்பது புரிந்து விட்டது.

கீர்த்தனை அழகான சங்கதிகளுடன் பாடாந்தர சுத்தத்துடன் பொலிந்தது.

'மதுராபுரி நிலயே' நிரவலில் ஷண்முகப்ரியாவின் குரல் கம்மிவிட, ஹரிப்ரியா ஈடு கட்டி முன்னேறி இரண்டாம் கால நிர வலைப் பட்டு கத்தரித்தாற்போல் பளிச்சென்று பாடினார்.

இருவரும் மாறி மாறி ஸ்வரம் பாடுகையில் கொஞ்சம் ஓவர் டோஸ் ஆகிவிடுகிறது. எச்சரிக்கை தேவை.

அன்றைய மிருதங்கம் சீர்காழி ஸ்கந்தசுப்ரமண்யம். வீரமும் சௌக்யமும் மாறி மாறிப் பேசியது இவர் வாத்தியம். தலையிலும் கன்னத்திலும் கைவைத்த படி இவர் தனி வாசிப்பைக் கவனித்து வந்த கஞ்சிரா புருஷோதமன், 'இந்தா பிடி பிடி!' என்று பதில் வாசிப்பைப் பாதி நேரத்தில் தந்தாலும் கணக்கில் சளைக்கவில்லை!



தும்புரு

## ரிமோட்

நிக்ளஸ் ஜெரால்டு என்று ஒரு பிரிட்டிஷ் நாடகாசிரியர் இருந்தார். அவரிடம் வந்த ஒருவர் ஏதேதோ அர்த்தமில்லாமல் பேசிப் போரடித்தார். முதலில் சொன்னதற்கு முரண்பாடாக வேறொன்று சொல்லிக் கொண்டிருந்தார். நாடகாசிரியருக்குப் பொறுக்கவில்லை. 'Sir, you are like a pin, but without either its head or its point' என்று திட்டி விரட்டியடித்தார்.

பாராளுமன்ற நடவடிக்கைகளை தூர்தர்ஷனில் பார்க்கும்போது இதுதான் நினைவு வருகிறது. காலும் தெரியவில்லை. தலையும் புரியவில்லை. தர்ணா செய்ய மாட்டோம், கூச்சல் போட மாட்டோம், குழப்பம் விளைவிக்க மாட்டோம், காகிதத்தைக் கிழிக்க மாட்டோம் என்று நன்னடத்தை விதிகளைப் பதினைந்து நாட்களுக்கு முன்புதான் எல்லாக் கட்சிகளும் ஏற்றுக் கொண்டு கையெழுத்திட்டன. மை ஈரம் உலரும் முன்பே, பொடோ சட்ட எதிர்ப்பு, சவப்பெட்டி ஊழல் அது இது என்று எத்தனை அமளிகள்! பாவம் பார்லிமென்ட்! வேலியிடமிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ளப் பயிர் போராடுகிறது.

பெண்களே! தனியாகப் போகிறீர்களா? எந்த ரௌடியாவது வாலாட்டுகிறானா? பயப்படாதீர்கள். தெருவிலிருந்து ஒரு கல்லை எடுங்கள். அவன் முகத்தைக் குறி பார்த்து அடியுங்கள். முகத்தில் எந்த இடத்தில் பட்டாலும் சரி, அவன் ஐயோ என்று அலறிக்கொண்டு முகத்தைப் பொத்தியபடி குனிவான். குனிந்தவன் நிமிர்வதற்குள், கையால் அவன் பிடரியில் ஓங்கி ஒரு வெட்டு வெட்டுங்கள். சுருண்டு விழுவான்.

மேற்படி தற்காப்புக் கலையை விளக்கிச் சொல்லி, குறி பார்த்து அடிப்பது எப்படி? என்று திரும்பத் திரும்பப் பயிற்சியும் கொடுத்தார் ஹுசைனி. (அவரிடம் பயிற்சி பெற்ற பெண் நாட்டிய டிரெஸ்ஸில் இருந்தது ஏனென்று தெரியவில்லை. முந்தைய



நிகழ்ச்சியின் தொடர்ச்சியோ என்னவோ.)

அவசர சமயத்துக்குக் கல் கிடைக்க வேண்டுமே? கவலை வேண்டாம். மழையினால் சாலைகள் மோசமாகி எங்கு பார்த்தாலும் கல் கிடைக்கிறது என்று நம்பிக்கை மழை பொழிந்தார் வாத்தியார். எதற்கும் கைப்பையில் நாலு கல் ஸ்டாக் வைத்துக் கொள்வது நலம். Thatch your roof before the rainy season என்று ஒரு சீனப் பழமொழி கூறியுள்ளது.

கோழியை வைத்துக் குழம்பு பண்ணலாம், பிரியாணி பண்ணலாம், சில்லி ரோஸ்ட், சிக்கன் டிக்கா, சிக்கன் ஸிக்ஸ்டி ஃபைவ் முதலானவை பண்ணலாம் என்றுதான் நான்வெஜ் அன்பர்கள் நினைத்திருக்கிறார்கள். தப்பு. கோழியை வைத்துப் பாட்டும் பண்ணலாம் என்பது 'ஷாஜகான்' படத்தைப் பார்த்தால் தெரியும்.



விஜய்யும் மீனாவும் கும்மாளமடிக்கும் 'சரக்கு வச்சிருக்கேன்' பாட்டில் (என்ன கவர்ச்சியான தலைப்பு!) 'இறக்கி வச்சிருக்கேன், கறுத்த கோழி மிளகு போட்டு வறுத்து வச்சிருக்கேன்' என்ற வரிகள் திரும்பத் திரும்ப வருகின்றன. அமர்க்களமான ஆட்டம் பாட்டம் கொண்டாட்டம். இயற்றிய வைரமுத்துவுக்கும் இசையமைத்த மணி சர்மாவுக்கும் ஆளுக்கொரு கப் கோழி சூப் அனுப்பலாம். Lips, however rosy, must be fed என்று ஒரு நாட்டுப்புறப்பாடல் உண்டு.

## ஞானி

ஹைதராபாத்தில் அந்த ஆபரண விழா நடைபெற்றதால் நிஜாம் சேகரித்து வைத்திருந்த நகைகளைத்தான் காட்டுகிறார்கள் (சன் நியூஸ்) என்று முதலில் தோன்றியது. அப்படியல்ல. ஜெய்ப்பூர் முதல் கொல்கத்தா வரை இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் கொண்டு வந்திருந்த வேலைப்பாடு மிக்க நகைகளின் கண்காட்சி அது. அத்தனையும் பொன்னாலும் மணியாலும் படைத்த கவிதைகள்.

இந்தக் கண்காட்சிக்கு மனைவி சங்கீதா பிஜிலானியுடன் வந்திருந்தார் கிரிக்கெட் (முன்னாள்?) வீரர் அசாருதீன். ஒவ்வொன்றாக அவர் எடுத்து எடுத்துப் பார்த்தபோது எதையோ தொலைத்துவிட்டுத் தேடிக் கொண்டிருப்பது போலிருந்தது. அங்கிருந்த எந்த ஆபரணத்தையும் விட விலையுயர்ந்தது அவர் தொலைத்தது. அது அங்கேயும் கிடைக்காது எங்கேயும் கிடைக்காது. Even God cannot change the past.

சொன்னால் கோபிப்பார்கள். ஆனால் சொல்லாமல் இருக்க முடியவில்லை. சாலை மறியலும், உண்ணாவிரதமும், போராட்டமும், பேரணியும், ஊர்வலமும் ஆர்ப்பாட்டமும் அன்றாட நிகழ்ச்சிகளாகிவிட்டன சென்ற சில நாட்களாக. மக்களுக்குத் தங்கள் குறைகளைத் தெரியப்படுத்தத்தான் இதெல்லாம் நடத்துவதாகக் கூறுகிறார்கள். இருக்கலாம். ஆனால் ஆர்ப்பாட்டத்தின்போது அட்டகாசமாய்ச் சிரித்துக் கொண்டு டீவிக்குப் போஸ் தருவது ஏன்?

சென்ற வாரம் சன் டீவியில் பார்த்த ஒரு போராட்டத்தில் இளைஞரொருவர் டப்பாங்குத்து ஆட, சுற்றியிருந்தவர்கள் கைதட்டிச் சிரித்து மகிழ்ந்தார்கள். This show of mirth and merriment trivialises the real issue. ஆர்ப்பாட்டக்காரர்களே சீரியஸாக எடுத்துக் கொள்ளாத ஒரு பிரச்னையைப் பொது மக்கள் மட்டும் எப்படி சீரியஸாக எடுத்துக் கொள்வார்கள்?

# பாவம் பயிர், போராடுகிறது!



# அழகான நாட்கள்

தலைப்பே ஒரு குறுங்கவிதை மாதிரி இருக்கிறதே என்ற எதிர்பார்ப்புடன் தியேட்டருக்குப் போனால், வழக்கமான சுந்தர்.சியின் அரைத்தமாவு ஃபார்முலா. அதிலும் காட்சிகளின் மகாத்மியம் பற்றிச் சொல்வதென்றால், தமது படங்களில் இருந்தே காட்சிகளை உருவி, திரும்பவும் தமது படத்திலேயே பயன்படுத்துகிற 'சுந்தர'த் துணிச்சல் இயக்குனருக்கு இருப்பதைப் பாராட்டாமல் இருக்க முடியாது.

படத்தின் கதையை இத்தனை நேரமும் சொல்லாமல் இழுப்பதிலிருந்தே புதுமைக் கதையை ஏதும் பொறாமையால் மறைக்கிறோம் என்று வாசகர்கள் நினைத்துவிட வேண்டாம்.

கார்த்திக் – மும்தாஜ் திருமணம் நடக்க இருக்கும் தருவாயில், அதென்ன...? ம்ம்... சிவபூஜையில் கரடி மாதிரி நுழையும் ரம்பா, தனது ஐந்து வயது மகளுக்கு கார்த்திக்தான் அப்பா என்று அடம் பிடிக்கிறார்.

கறுப்பு வெள்ளையில் தொடங்கி, இன்றைய டால்பி டிஜிட்டல் காலம் வரை தமிழ்த் திரையுலகம் கண்டிராத இந்த முடிச்சை அவிழ்க்க.. எப்படியெல்லாம் இயக்குனர் படாத பாடு பட்டிருக்கிறாரோ அத்தனை பாடுகளையும் நீயும் படு என்று ரசிகன் தலையில் மிளகாய் அரைத்திருக்கிறார்கள்.

வெற்றிலை போட்டுக் குதப்பிக் கொண்டு பேசுகிற மாதிரி பல படங்களில் தமிழைக் கடித்துக் குதறிய கார்த்திக் இந்தப் படத்தில் தெளிவாகப் பேசியிருப்பதற்காக அவருக்கொரு விருது கொடுக்கலாம்.

அறிமுகநாயகிபோல புதுப் பொலிவுடன் வளையவரும் ரம்பாவுக்குக் கொஞ்சம் நடிக்க சான்ஸ் கொடுத்திருக்கிறார்கள். ஆனால் மும்தாஜ்?! கவர்ச்சி... கவர்ச்சியைத் தவிர வேறொன்றுமில்லை என்று சொல்லும் படியான அதே 'சமூகசேவை'க்காக பயன்படுத்தப்பட்டிருக்கிறார்.

கதையோடு காமெடியைப் பின்னுகிறேன் என்று சொல்லி கவுண்டமணி–ஜோதி மீனா ஜோடியைப் பகடையாக்கி அமைக்கப்பட்டிருக்கும் நகைச்சுவையைக் குடும்பத்தோடு ரசிப்பது கடிடிடினம்!

படத்தின் ஒரே ஆறுதல் டெல்லி கணேஷ்! நாகர்கோவில் தமிழை மணக்க மணக்கப் பேசி மனத்தைக் கொள்ளை அடிக்கிறார்.

அழகான அரை நாளை தியாகம் செய்யும் பரந்த மனம் உங்களுக்கு இருக்குமானால், லாஜிக் பார்க்காமல் பொழுதைக் கழித்துவிட்டு வரலாம்.

— விஷுவல்தாசன்

● ஜஸ்ட் பாஸ்


Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 165/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2001 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka